# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

---

**Thursday the 11th August 1960.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Transfer of certain villages of the Polur taluk*

* 91. *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் வருவாய் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா--

வடஆற்காடு மாவட்டத்தில் போளூர் தாலுகாவிலிருந்து எந்த கிராமங்களை ஆரணி தாலுகாவுக்கும், ஆரணி தாலுகா விலிருந்து எந்த கிராமங்களை போளூர் தாலுகாவிற்கும் மாற்ற உத்தேசம் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : There is no proposal to transfer any village from Polur taluk to Arni taluk, but a proposal to transfer 21 villages of Arni taluk to Polur taluk is under the consideration of the Collector of North Arcot.

SRI S. M. ANNAMALAI : அப்படி சில கிராமங்களை மாற்று கின்றபோது மக்கள் தொகை அடிப்படையில் மாற்றப்படு கின்றதா ? அவ்வாறு மாற்றும்போது அந்தத் தொகுதி சட்ட மன்ற உறுப்பினர்களைக் கலந்து ஆலோசித்து முடிவு எடுக்கப் படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : முக்கியமாக நிர்வாகத் திற்குச் சௌகரியமாக இருக்கும் முறையிலே இந்த மாற்றங்கள் செய்யப்படுகின்றன. இந்த வருஷமும், 1961 மார்ச் மாதம் வரை யிலும் கவனிக்க முடியாது. ஏனென்றால் சென்சஸ் எடுக் கிறார்கள். அதுவரைக்கும் இது நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது.

SRI S. M. ANNAMALAI : இந்தக் கிராமங்களை மாற்றக் கூடாது என்று பஞ்சாயத்து போர்டிடம் இருந்து ஆட்சேபனை வந்திருக்கிறதா ? அப்படியிருந்தால் அந்தப் பஞ்சாயத்து போர்டு பிரசிடெண்ட்டையும், அந்தப் பகுதி சட்ட மன்ற உறுப்பினரை யும் கலந்து ஆலோசித்து முடிவு எடுப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் கொடுத்த கேள்விக்குப் பதில் போளூர் தாலுகாவில் மாற்றம் இல்லையென்று சொல்லிவிட்டேன். நான் சொன்னது புதிது.

[11th August 1960

SRI V. SUBBIAH : நமது ராஜ்யத்திலே ஜமீன்தாரி ஒழிப்பிற்குப் பிறகு பல கிராமங்கள் குறிப்பிட்ட தாலுகாவிலிருந்து 40 மைல் தூரத்தில் இருக்கின்றன. அவற்றைச் சமீபத்தில் உள்ள தாலுகாவுடன் இணைக்க என்ன திட்டம் இருக்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தக் கேள்வி வட ஆற்காடு மாவட்டத்தைப் பொருத்தது. கனம் அங்கத்தினர் பொதுவாகக் கேட்பதால் தனியாகக் கேட்டால் பதில் அளிக்க முடியும்.

*Ship-building yard at Tuticorin*

*92. *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) கொழும்பு திட்டப்படி, பிரிட்டனிலிருந்து வந்த நிபுணர் கோஷ்டி தூத்துக்குடி கப்பல் கட்டத் தகுதியான இடம் என்று சிபாரிசு செய்தார்களா ?

(ஆ) அப்படியானால், அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) No, Sir.

(ஆ) Does not arise.

*Figures of leaders on the postage stamps*

*93. *Q*.—SRI P. G. MANICKAM : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தபால் தலைகளிலே எந்தெந்தப் பெரியோர்களின் உருவங்களை வெளியிடப்பட வேண்டுமென்று சென்னை சர்க்கார் மத்திய சர்க்காருக்குத் தெரிவித்திருக்கிறார்கள் ?

(ஆ) எந்தெந்த பெரியோர்களுடைய உருவப் படங்களை வெளியிட சர்க்கார் சம்மதித்திருக்கிறார்கள் ?

(இ) 1960-61-ம் வருஷத்திலே மத்திய சர்க்காரால் புதிதாக வெளியிடப்போகும் தபால் தலைகளிலே சென்னை சர்க்காரால் தெரிவிக்கபட்டிருக்கும் பெரியோர்களுடைய உருவங்கள் அச்சிடப்படுமா ?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) No recommendation has been made in this regard by this Government to the Central Government.

(*b*) & (*c*) Do not arise.

SRI P. G. MANICKAM : சென்ற வருஷம் நமது சென்னை அரசாங்கம் முயற்சி எடுத்ததன் காரணமாகத் திருவள்ளுவர் பட்மானது தபால் தலைகளில் பொறிக்கப்பட்டது. இந்த ஆண்டிலும் அதே போல் நம்முடைய நாட்டிலுள்ள பெரியோர்களின் படங்

களைத் தபால் தலைகளில் பொறிப்பதற்காக, நம்முடைய மாகாண அரசாங்கமானது மத்திய அரசாங்கத்திற்குச் சிபாரிசு செய்யுமா ?

THE HON. SRI V. RAMAIAH : சென்ற வருடம் திருவள்ளுவர் உருவப்படம் தபால் தலைகளில் வந்ததற்குக் காரணம் முழுக்க முழுக்க மத்திய அரசாங்கந்தான். அதற்காக நாம் ஒன்றும் முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை.

SRI N. R. THIAGARAJAN : திருவள்ளுவர் படம் வெளி வந்திருந்தாலும் அவருடைய படம் எப்படி இருக்கும், போட்டோ எடுக்கப்பட்டதா என்ற அபிப்பிராயங்கள் எல்லாம் இருக்கும். நமது காலத்தில் வாழ்ந்த கவிச் சக்கரவர்த்தி சுப்பிரமணியம், வ.உ.சி. போன்றவர்களின் உருவப்படத்தைத் தபால் தலைகளில் வெளியிட நமது அரசாங்கம் முயற்சி எடுத்துக் கொள்ளுமா ?

THE HON. SRI V. RAMAIAH : இந்த அரசாங்கத்தைப் பொறுத்தவரை எப்போதும் சிபாரிசு செய்யவில்லை. இது மத்திய அரசாங்கத்தினுடைய வரம்புக்குட்பட்டது. கனம் அங்கத்தினர் அவர்கள் மத்திய அரசாங்க மந்திரிக்கு எழுதினால் கண்டிப்பாகப் பரிசீலனை செய்வார்கள்.

*Bonus to Plantation Workers*

* 94 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether employers and employees of plantations have represented to the Government to refer the bonus issue of 1959 to adjudication ; and

(*b*) if so, the steps taken thereon?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) A meeting of Planters and Unions was convened on 9th July 1960, in Madras. It was decided at the meeting to set up a Committee consisting of the representatives of Planters and Unions with the Commissioner of Labour as Chairman, to evolve a formula based on price and yield for the payment of bonus for 1959. The matter is being pursued.

SRI N. K. PALANISAMI : When there is dispute between workers and employers every year regarding the disbursement of bonus, may I know whether there is a proposal before Government to formulate some principle on which the bonus could be disbursed to workers every year?

THE HON. SRI R. VENKATARAMAN : That is the matter which is now being pursued.

[11th August 1960

*Family Planning*

* 95 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state the number of men and women who have been sterilized under the Family Planning Scheme in the Madras City in 1958–59 and 1959–60?

THE HON. SRI M. A. MANICKAVELU : The number of men and women who underwent sterilization (Vasectomy and Salpingectomy) in Government Hospitals in the City during the years referred to are as follows :—

| | Men. | Women. |
|---|---|---|
| 1958 .. .. | 325 | 879 |
| 1959 .. .. | 436 | 855 |
| 1960 .. .. | 382 | 461 |
| (Up to 30th May 1960) | | |

SRI A. A. RASHEED : May I know whether Government are offering any inducement to both men and women who undergo this operation? If so, what is the amount that the Government give to them?

THE HON. SRI M. A. MANICKAVELU : Government are paying Rs. 30 for every case. This is to meet conveyance and loss of emoluments for one or two days on which they would not be able to attend to work immediately after the operation.

SRI A. A. RASHEED : May I know whether Government have received any complaints that unmarried girls and bachelors have been sterilized in some hospitals? If so, may I know whether there is any proposal before Government to stop such kind of sterilization?

THE HON. SRI M. A. MANICKAVELU : That cannot come under this scheme. In this scheme only women above 24 and men below 50 and only if they have three children and more will be operated. That is the rule. But if any sterilization takes place as suggested by the hon. Member, then it must be at their initiative.

SRI K. VINAYAKAM : Is the Hon. Minister aware of the fact that a local daily is carrying on an outright and scurillous propaganda against this family planning? If so, may I know what steps Government have taken to put down such kind of anti-social elements?

THE HON. SRI M. A. MANICKAVELU : Government are making available to the public various methods of family planning and sterilization is one of them. With regard to non-sterilization methods I think even the Pope (I have read so in the papers) had no objection to non-surgical methods. If anybody wants sterilization it is done voluntarily.

SRI K. VINAYAKAM : Does this Government believe in this kind of propaganda directed against the present methods of family planning and if so may I know why Government should not take

11th August 1960]

effective steps to check this anti-national propaganda carried on by some local daily indulging in this kind of scurillous and anti-family planning propaganda?

THE HON. SRI M. A. MANICKAVELU : We are aware that certain papers are making anti-propaganda as it were. In due course that matter also may be looked into.

*Bicycle tax*

*96 *Q.*—SRI M. P. SARATHI : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் எத்தனை நகர மன்றங்கள் (Municipalities) சைக்கில் வரியை (Bicycle tax) ரத்து செய்ய அரசாங்க அனுமதியைக் கோரின?

(ஆ) எந்தெந்த நகர மன்றங்கள்?

(இ) அனுமதி வழங்கப்பட்டனவா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (அ) to (இ) During 1960, the municipal councils of seven towns, viz., Periakulam, Cuddalore, Dindigul, Thanjavur, Madurai, Tuticorin and Pudukkottai sought sanction for the abolition of cycle tax. Sanction was not accorded in any case.

SRI S. M. ANNAMALAI : ஸார், அப்படி "சாங்ஷன்" கொடுக்காமல் இருக்கக் காரணம் என்ன?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இந்த வரியை குறைப்பதன் காரணமாக வேறு பல முன்னேற்ற வேலைகள் தடைப்படுகின்றன. அதிகமான அளவு முனிசிபாலிடிகள் இந்த வரியை ரத்து செய்து விட்டு அதற்கு ஈடான பணத்தை அரசாங்கம் தரவேண்டுமென்று கேட்டார்கள். அரசாங்கம் அதைக் கொடுக்க முடியாது. இந்த மாதிரி குறைந்த அளவில் போடும் வரி ஒருவரையும் பாதிக்காது.

SRI A. A. RASHEED : May I know, Sir, what is the amount of income these municipalities are getting by way of cycle tax?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : The income of these municipalities are as follows :—

| | RS. |
|---|---|
| Periakulam ... ... ... ... ... | 2,400 |
| Cuddalore ... ... ... ... ... | 7,600 |
| Thanjavur ... ... ... ... ... | 8,000 |
| Pudukkottai ... ... ... ... ... | 6,200 |
| Tuticorin ... ... ... ... ... | 9,790 |
| Tindivanam ... ... ... ... ... | 7,000 |
| Salem ... ... ... ... ... ... | 12,600 |

[11th August 1960

SRI N. MARUDACHALAM : சைக்கிள் வரியை எடுத்துவிட வேண்டும் என்று தீர்மானம் போட்டு அனுப்பும்போது, அதன் மூலம் ஏற்கெனவே வந்து கொண்டிருந்த தொகையைச் சரிக்கட்டு வதற்கான உத்தேசங்களையும் தெரிவித்துத்தான் அனுமதி கோரு வார்கள். கோவை முனிசிபாலிடியிலே சைக்கிள் வரியை ரத்து செய்யவும், அதை ஈடு செய்ய வேறு வரி போடவும் அனுமதி கோரி சர்க்காருக்குத் தீர்மானம் அனுப்பப்பட்டிருக்கிறது. அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது? அங்கே சைக்கிள் வரியை ரத்து செய்ய ஏதாவது உத்தேசம் உண்டா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : கோவை யிலிருந்து அம்மாதிரி தீர்மானம் இன்னும் இங்கு வரவில்லை.

SRI V. SUBBIAH : நகரசபை ஏரியாக்களில் மட்டுமல்லாமல் மேஜர் பஞ்சாயத்துக்களிலும், மைனர் பஞ்சாயத்துக்களிலும்கூட இம்மாதிரி சைக்கிள் வரியை எடுத்துவிடவேண்டுமென்று தீர்மானம் போட்டு அனுப்பியிருக்கிறார்களா? அப்படியானால் எத்தனை பஞ்சாயத்துக்களிலிருந்து அம்மாதிரித் தீர்மானங்கள் வந்திருக்கின்றன?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இக் கேள்வி, "1960-இல் எத்தனை நகர மன்றங்கள் சைக்கிள் வரியை ரத்து செய்ய அரசாங்க அனுமதியைக் கோரின?" என்பது. ஆகை யால், நகர மன்றங்கள் பற்றிய பதிலைத் தயாரித்திருக்கிறேன். பஞ்சாயத்துக்களைப்பற்றித் தகவல் வேண்டுமானால், வேறு கேள்வி கேட்கவேண்டும்.

SRI S. M. ANNAMALAI : சைக்கிள் வரியை ரத்து செய் வதனால் ஏற்படக்கூடிய நஷ்டத்தை அந்தந்த நகராட்சி மன்றங்கள் ஏற்றுக்கொள்வதாயிருந்தால், சர்க்கார் அனுமதி தருமா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அனேகமாக நகராட்சிமன்றங்களின் வருமானம் குறைவாக இருக்கிறது. செல வினங்கள் அதிகப்பட்டுக்கொண்டிருக்கின்றன. அதனால், இருக் கிற வரியை எடுத்துவிட்டு இன்னொரு வரியைப் போடுவதைவிட, இருப்பதை வைத்துக்கொள்வதே நலம் என்று நான் கருது கிறேன்.

MR. SPEAKER : The Hon. the Minister for Works is not in Madras. I will take up his question No. 97 on his return.

*Auctioning of bamboo coups.*

*98. *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை ஏலம் விட்டுவந்த மூங்கில் காடுகளை ஆண்டிற்கு ஒரு முறை ஏலம் விடக் காரணம் என்ன?

11th August 1960]

(ஆ) இதனால் காடுகள் அழிக்கப்படுகின்றன என்பது உண்மையா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) A paper[a] is placed on the table of the House.

SRI S. M. ANNAMALAI : மேஜைமீது வைக்கப்பட்டிருக்கும் அறிக்கையில், ஆண்டுக்கு ஆண்டு ஏலம் விடுவதால் சர்க்காருக்கு அதிக வருமானம் வருகிறபடியால், அப்படி ஏலம் விடப்படுகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், ஆண்டுக்கு ஆண்டு ஏலம் விடுவதால் ஒரு வருஷ வளர்ச்சியடைந்த பிஞ்சு மரங்களை, பிற கூப்புகளுக்கும் சென்று வெட்டிவிடுகிறார்கள். அதனால், மூங்கில் காடுகள் அழிந்துகொண்டுவருவதால், மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை ஏலம் விடுகிற முறையை மறுபடியும் சர்க்கார் கொண்டு வரமுடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதெல்லாம் அனுபவத்திலே பார்த்துத்தான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறார்கள். இதிலே வருமானம் அதிகம் வருவது மட்டுமல்ல ; மூன்று வருஷங்களுக்கு ஒரு முறை ஏலத்திற்கு விட்டால், பெரிய கண்டிராக்டர்கள்தான் பணம் அதிகம் கட்டி, ஏலம் எடுக்க முடிகிறது. ஒவ்வொரு வருஷமும் ஏலத்திற்கு விட்டால் சாதாரண சிறிய கண்டிராக்டர்களும் ஏலம் எடுக்க முடிகிறது. இந்த இரண்டு காரணங்களுக்காகத்தான் அம்மாதிரி செய்யப்படுகிறது.

SRI S. M. ANNAMALAI : வருஷத்திற்கு ஒரு முறை ஏலம் விடுவதினால் அவர்கள் போட்டா போட்டியில் அதிகமான தொகைக்கு ஏலத்திற்கு எடுத்துவிடுகிறார்கள். நஷ்டம் ஏற்படுகிறது. அதனால், பிற கூப்புகளில் சென்று பிஞ்சு மூங்கில்களை வெட்டுகிறார்கள். பிஞ்சு மூங்கில்கள் வெட்டப்படாமல் அவைகளைப் பாதுகாப்பதற்குச் சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மற்ற கூப்புகளில் சென்று எடுக்காமலிருக்க அரசாங்கம் கூடுமானவரையில் என்ன நடவடிக்கை எடுக்கவேண்டுமோ அதை எடுத்துக்கொள்ளும்.

*Purchase of ' Dead Stock ' by the District Agricultural Officers*

*99 *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஜில்லா விவசாய இலாகா அதிகாரிகளின் வரம்புக்குட்பட்டு " Dead Stock " சாமான்கள் வாங்குவதானால், எவ்வளவு வரை வாங்கலாம் ?

(ஆ) இது எப்போது எந்த ஆண்டில் போடப்பட்ட அதிகாரம் ?

---

a Printed as appendix on page 470 infra.

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The District Agricultural Officers are empowered to purchase dead stock articles made in India up to a limit of Rs. 300 for experimental cultivation, demonstration and propaganda purposes.

(*b*) These powers were delegated for two years in August 1958 and extended for another one year in June 1960.

SRI V. K. KOTHANDARAMAN : பல ஆண்டுகளுக்கு முன்னால் ஏற்படுத்தப்பட்ட ஒரு வரம்புக்கு உட்பட்டிருக்கும் காரணத்தினால், இப்பொழுது விலைவாசி உயர்ந்திருக்கும் அளவுக்கு, அதை அதிகப்படுத்தக்கூடிய உத்தேசம் ஏதாவது உண்டா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதை உடனே அதிகப்படுத்துவதற்கு அவ்வளவு அவசியம் இல்லை.

*Women porters*

* 100 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்தில் ரயில் பிரயாணிகள் பெட்டி, படுக்கை சாமான்களை தூக்கிச் செல்ல பெண் போர்டர்களுக்கு லைசென்ஸுகள் வழங்குவதுபற்றி மத்திய கவர்ன்மெண்டு நம் மாகாண சர்க்காரை கலந்தாலோசித்தார்களா?

(ஆ) அப்படியானால் பெண் போர்டர்களுக்கு லைசென்ஸ் கொடுப்பதுபற்றி எடுக்கப்பட்டு வரும் நடவடிக்கைகள் யாவை?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI P. G. MANICKAM : மற்ற ராஜ்யங்களில் பெண் போர்ட்டர்கள் நியமிக்கப்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது. ஏன் நமது ராஜ்யத்திலும் அவ்வாறு பெண் போர்ட்டர்களை நியமிக்கக் கூடாது? தனித்துப் பிரயாணம் செய்யும் பெண்களுடைய சாமான்களை எடுத்துச் செல்ல பெண் போர்ட்டர்கள் உதவியாக இருப்பார்கள் அல்லவா? சர்க்கார் இந்த யோசனையைப்பற்றிக் கவனிப்பார்களா?

THE HON. SRI V. RAMAIAH : மற்ற ராஜ்யங்களில் இருக்கும் நிலைமை எனக்குத் தெரியாது. ஆனால், நமது அரசாங்கத்தைப் பொறுத்தவரையில், இதுபோன்ற சிபார்சுகள் ஒன்றும் மத்திய அரசாங்கத்திற்குச் செய்யவில்லை.

SRI V. SANKARAN : பெண் போர்ட்டர்களுக்கு லைசென்ஸ் கொடுப்பதினால் ஆண் போர்ட்டர்களுக்கு வேலை கிடைக்காது என்ற ஆபத்தை உணர்ந்து, அம்மாதிரி யோசனை ஏதாவது வந்தால், அதை அரசாங்கம் ஏற்றுக்கொள்வதில்லை என்று தீர்மானிக்குமா?

MR. SPEAKER : It is only a suggestion.

11th August 1960]

**SRI A. VEDARATHNAM** : குஜராத் போன்ற மாகாணங்களில் எல்லாம் இப்பொழுது பெண் போர்ட்டர்களுக்கு லைசென்ஸ் கொடுத்து, பெரும்பாலும் பெண் போர்ட்டர்கள்தான் ரயில்வே நிலையங்களில் வேலை செய்கிறார்கள். அந்த முறையை இங்கும் அனுஷ்டிப்பதில் அரசாங்கத்திற்கு என்ன சிரமம் இருக்கிறது என்பதைத் தயவுசெய்து அமைச்சர் அவர்கள் தெரிவிப்பாரா?

**THE HON. SRI V. RAMAIAH** : குஜராத் மாகாணத்தில் இருக்கும் நிலை எனக்குத் தெரியாது என்று முன்பே சொல்லி விட்டேன். ஆனால், நமது ராஜ்யத்தைப் பொறுத்தமட்டில், பெண்கள் கொண்டுவரும் பொருள்களை ஆண் போர்ட்டர்கள் அதிகக் கஷ்டமில்லாமல் தூக்கிக்கொண்டு போவதைப் பார்க்கின்றோம். ஆகையால், இதிலே ஒரு மாறுதல் செய்யவேண்டிய அவசியம் ஏற்படவில்லை.

(There was noise due to the flight of a jet plane.)

THE HON. SRI R. VENKATARAMAN : The hon. Members are being treated to the noise of a jet plane, Sir.

**MR. SPEAKER** : We are in a jet age.

*Minimum wages for Government Transport workers*

* 101 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any minimum wages have been fixed for the Motor Transport Workers in the Government Transport; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) No separate minimum wages have been fixed for the workers in the Madras State Transport Department. The minimum wages fixed by the Government for employment in public motor transport under the Minimum Wages Act, 1948 are applicable to the workers in the State Transport Department. In addition to this I may add that Pay Commission has now determined their wages and pay scales.

SRI N. K. PALANISAMI : May I know, Sir, when the Government direct the private industries to fix minimum wages to their workers, why the Government are refusing to fix minimum wages to their industrial employees?

THE HON. SRI R. VENKATARAMAN : I said that the minimum wages have been fixed for the public motor transport workers and it is applicable to the State Transport workers and also the wages and pay scales are higher than that.

[11th August 1960

*Overhead ' Express way ' in the Poonamallee High Road*

* 102 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether the Traffic Development Committee has submitted its recommendations to the Government regarding the opening of an overhead ' Express way ' in the Poonamallee High Road; and

(*b*) if so, the decision taken thereon?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) & (*b*) Provision of an overhead express way is one of the suggestions that is under consideration of the committee preparing a plan for the development of traffic requirements of Madras City. The committee has not yet made any specific proposal for Government's consideration.

SRI A. A. RASHEED : May I know, Sir, whether the Government have any details of these recommendations and may I know the approximate expenditure for the construction of express highways?

THE HON. SRI V. RAMAIAH : I have already stated that the committee is considering and that they have not submitted any proposals yet.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know, Sir, whether the Hon. Minister will be pleased to state whether this road passes through Aminjikarai or St. Thomas Mount.

THE HON. SRI V. RAMAIAH : I have no information, Sir.

*Godowns for foodgrains*

* 103 Q.—SRI M. P. SARATHI : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) உணவுத் தானிய சேமிப்புக் கிடங்குகளைக் கட்டுவதற்கு உத்தேசம் உண்டா?

(ஆ) அப்படியானால், எங்கெங்கு எந்த அளவுக்குத் தானியங்கள் சேமிக்கத்தக்க வகையில் கட்டப்படும்?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

| | |
|---|---|
| (*b*) Madras City .. | 3 godowns (each of the size of 120′ × 50′ with a capacity of 770 tons). |
| North Arcot District, Vellore. | 1 godown (of the size of 120′ × 50′ with a capacity of 770 tons). |
| South Arcot District, Cuddalore. | 1 godown (of the size of 120′ × 50′ with a capacity of 770 tons). |
| Madurai District, Dindigul and Madurai. | 2 godowns ( each of the size of 120′ × 50′ with a capacity of 770 tons). |

11th August 1960]

**Sri M. P. SARATHI :** மற்ற ஜில்லாக்களிலும் தாலுகா தோறும் கிடங்குகள் கட்டினால் வியாபாரிகளுக்கு நல்ல வசதியாக இருக்கும் என்ற காரணத்தினால், அவைகளையெல்லாம் கட்ட சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** சர்க்காரிலேயே 21 கிடங்குகள் கட்டுவது என்ற ஏற்பாடு இருந்தது. தஞ்சாவூர், திருச்சி, சேலம், கோயமுத்தூர், மதுரை, வடாற்காடு ஜில்லாக்களில் கட்டவேண்டுமென்பதற்கு மத்திய சர்க்காருக்குத் தெரிவித்ததில், அவர்கள் இப்பொழுது ஒன்பது கிடங்குகள் கட்டுவதற்கு ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். பாக்கி 12 கிடங்குகள் கட்டுவதுபற்றி கடிதப் போக்குவரத்து நடந்துகொண்டிருக்கிறது. ஒவ்வொரு கிடங்கு கட்டவும் நிறையச் செலவாகிறது. ஏதோ இரண்டாயிரம் மூவாயிரம் ரூபாய்க்குள் ஒரு கிடங்கைக் கட்டிவிடலாம் என்பது அல்ல. ஒவ்வொரு கிடங்குக்கும் நாற்பதாயிரம், ஐம்பதாயிரம் ரூபாய் வரையில் செலவாகிறது.

**Sri M. P. SARATHI :** அதைக் கட்ட அதிகச் செலவானாலும், கட்டணம் வசூலிப்பது மூலமாக சர்க்காருக்கு வருமானம் வருகிறது. ஆகையால், அவைகளையெல்லாம் கட்ட சர்க்காருக்கு உத்தேசம் இருக்கிறதா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** லாபம், சௌகரியம், அனுகூலம் இருக்கிறது என்பதனால்தான், ஒரு 'பேஸ்டு ப்ரொக்ராம்' படி கட்டப்படுகின்றன.

**Sri A. VEDARATHNAM :** மற்ற இடங்களைவிட தஞ்சை ஜில்லாவில் 'கோடவுன்கள்' மிகவும் அவசியமாக இருப்பதை அரசாங்கம் உணர்ந்திருக்கிறதா ? இப்பொழுது அங்கு ஏதாவது கோடவுன்கள் இருக்கிறதா ? இல்லையானால் அங்கு உடனடியாக 'கோடவுன்' ஏற்படுத்த அரசாங்கம் முன் வருமா ? முன்பெல்லாம் நெல்லை களத்திலேயே வைத்துக்கொண்டிருப்பார்கள். இப்பொழுது கம்யூனிஸ்டு தொந்தரவு அதிகமாகப் போய் விட்டதால் களத்தில் நெல் போடமுடியாத நிலைமை. சேர் கட்ட முடியாத நிலைமை இருக்கிறது. ஆகையால் தஞ்சையில் 'கோடவுன்களை' அதிகரிப்பதற்கும், 'கோடவுன்' இல்லையென்றால் உடனடியாக ஏற்படுத்துவதற்கும் அரசாங்கம் முன் வருமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** அதனால் தான் மற்ற ஜில்லாக்களில் ஒன்று, இரண்டு கோடவுன்கள் தஞ்சாவூரில் ஆறு கோடவுன்கள் கட்டப்பட்டிருக்கின்றன.

**Sri V. K. KOTHANDARAMAN :** 'ஆன் எ பாயின்டு ஆப் ஆர்டர், சார். கம்யூனிஸ்டு தொல்லைகள் அதிகமாய் போய் விட்டன, ஆகையால் 'கோடவுன்கள்' கட்டவேண்டுமென்று அங்கத்தினர் அவர்கள் சொன்னார்கள். அம்மாதிரி சொல்லுவது இந்தச் சபையிலுள்ள அங்கத்தினர்களை மாத்திரமல்ல, ஒரு இயக்கத்தையே இழிவு படுத்துவது போல் ஆகும். பெருந்தன்மை வாய்ந்த வயது முதிர்ந்த ஒரு பெரியவர் இம்மாதிரி சொல்லு

[11th August 1960

வதும், அதை சபாநாயகர் அனுமதிப்பது என்று சொன்னால், எங்களுக்கும் தெரியும், அதே போல காங்கிரஸ் கட்சியைப்பற்றி மோசமாக நாங்களும் சொல்லலாம். ஆகையினாலே இதை தயவு செய்து அங்கத்தினர் வாபஸ் வாங்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : அது அவர்களுடைய அபிப்பிராயம். அந்த அபிப்பிராயத்தை நான் எப்படி நிறுத்த முடியும்? நீங்களும் உங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லலாம். நீங்களும் கேள்வி கேளுங்கள்.

SRI V. K. KOTHANDARAMAN : அதை கனம் அங்கத்தினர் வாபஸ் வாங்கவேண்டும். நாங்களும் அதைப் போல வார்த்தைகளை உபயோகப்படுத்தலாமா ?

SRI M. P. SARATHI : கம்யூனிஸ்டுகள் தொந்தரவால் நெல்லைப் போடமுடியவில்லை என்று சொல்லுவது, கம்யூனிஸ்டுகள் கொள்ளை அடிக்கிறார்கள் என்று குற்றச்சாட்டு சொல்வது போல் ஆகாதா ? வேறு அதற்கு என்ன பொருள் ?

MR. SPEAKER : அப்படி அவர்கள் சொல்லவில்லை. நீங்கள் சொல்லுகிறீர்கள். (சிரிப்பு.)

SRI V. K. KOTHANDARAMAN : கனம் அங்கத்தினர் வேதரத்னம் அவர்கள் மறைமுகமாகச் சொன்னதை ஸ்ரீ சாரதி அவர்கள் அர்த்தத்தோடு விளக்கிச் சொல்லுகிறார்கள். ஆகையால் அதை கனம் அங்கத்தினர் ஸ்ரீ வேதரத்னம் அவர்கள் வாபஸ் வாங்கவேண்டுமென்று கனம் சபாநாயகர் அவர்கள் உத்தரவு போடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : அது 'அன்பார்லிமெண்டரி' என்று சொல்ல முடியாது. ஆகையால் அதை வாபஸ் வாங்கவேண்டுமென்று சொல்ல முடியாது. விதிகளை மீறிப் பேசினால் அப்போது 'பாயிண்டு ஆப் ஆர்டர்' கொண்டுவந்தால், அதை நிறுத்தலாம்.

SRI A. GOVINDASAMY : தென் ஆற்காடு ஜில்லாவில் எந்த இடத்தில் 'கோடவுன்' ஏற்படுத்தப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கடலூரில்.

*Poramboke lands in Voimedu village*

* 104 Q.—SRI A. VEDARATHNAM : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வாய்மேடு கிராமத்தில் உள்ள புறம்போக்கு நிலம் எவ்வளவு ?

(ஆ) இது சர்வே ஆகிவிட்டதா ? எப்போது ?

11th August 1960]

*(இ) இந்த நிலத்தை நிலமற்ற விவசாயிகளுக்குப் பிரித்துக் கொடுக்க சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருக்கிருர்களா ? எப்போது ?*

*(ஈ) எப்போது இது அமுலுக்கு வரும் ?*

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) and (b) Presumably the hon. Members refers only to Government lands which are normally surveyed for assignment and not to all communal porambokes. The extent of swamp poramboke lands in Voimedu village that could be surveyed with a view to their being assigned to landless poor persons was computed as 2,516.53 acres. The survey of the lands was completed on 11th June 1959.

(c) In 1953, the Government ordered that the waste blocks of lands available for assignment in Voimedu, among other villages in Tiruthuraipoondi taluk, Thanjavur district, be granted in favour of deserving landless poor persons individually free of land revenue at 2 acres for each family.

(d) The Collector has sanctioned proposals for transfer of classification of the lands to be assigned and has issued instructions to push through the assignment. The work is expected to be completed soon.

SRI A. VEDARATHNAM : *1953-ம் வருஷத்தில் உத்தரவு போடப்பட்டும் 7 வருஷ காலமாக தாமதப்பட்டிருக்கிறது. மிராசுதாரர்களிடத்திலிருந்து நிலங்களையெல்லாம் எடுத்து நிலம் இல்லாதவர்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று அரசாங்கம் முன் வந்திருக்கிற காலத்தில் அரசாங்கத்தினிடமிருக்கும் இவ்வளவு விஸ்தீரண நிலத்தை, 2,500 எக்கரை, நிலம் இல்லாதவர்களுக்குப் பிரித்துக் கொடுக்க ஏன் இவ்வளவு தாமதம்? இந்த ஆண்டு சாகுபடிக்கே அது பயன்படும்படியாக அதைப் பிரித்துக் கொடுக்க சர்க்கார் முன்வருமா ?*

THE HON. SRI M. A. MANICKAVELU : *கடந்ததெல்லாம் போகட்டும். இப்பொழுது ரொம்பவும் துரிதமாகக் கொடுப்பதற்கு ஏற்பாடு ஆகியிருக்கிறது. நானும் அதை நேரில் போய் பார்த்தேன். ஆகையினால் அநேகமாக அதெல்லாம் இந்த வருஷத்தில் செய்யப்படும்.*

*Kilpallipattu Dalavai Tank*

* 105 Q.—SRI S. M. ANNAMALAI : *கனம் பெ்வின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—*

*(அ) வடாற்காடு மாவட்டம், ஆரணி தாலூகா, கீழ்ப் பள்ளிப்பட்டு தளவாய் ஏரியைப் பழுது பார்க்கவேண்டுமென்று கோரி 3—12—59-ல் பொது மக்களிடமிருந்து மகஜர் வந்ததா ?*

*(ஆ) அப்படியானல், அதன்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?*

THE HON. SRI M. A. MANICKAVELU :

(a) Yes, Sir.

[11th August 1960

(b) The matter is under the consideration of the Board of Revenue (Food Production).

SRI S. M. ANNAMALAI : ரெவின்யு போர்டுக்கு ஆலோசனைக்கு வந்து எவ்வளவு நாட்கள் ஆகின்றன ? ஏன் இவ்வளவு காலதாமதம் ஆகிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதிலே கஷ்டம் என்னவென்றால் இது 'அபாண்ட்டன்டு ஸோர்ஸ் ஆப் இர்ரிகேஷன்'. அது ரயில்வே லயனை பாதிக்கக்கூடிய ஒரு ஏரி. ஆகையினாலே, ரயில்வே அதிகாரிகளையும் இதுபற்றி கேட்க வேண்டியிருக்கிறது. ரயில்வே லயனை பாதிக்காத அளவிலே எந்த மட்டத்திற்கு எப்படிச் செய்யலாம் என்பதையெல்லாம் கவனித்துச் செய்ய கொஞ்சம் தாமதமாகிறது.

*Fertilizers*

* 106 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கூட்டுறவு சங்கங்களுக்கு உரம் அலாட்மெண்டு நேரடியாக ஜில்லா மத்திய சங்கத்திலிருந்து போவதை நிறுத்தி தாலுகா கூட்டுறவு மார்க்கெட்டிங் சொஸைடிகளின் மூலம் விநியோகம் செய்ய உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The District Co-operative Supply and Marketing Society functions as the Government stockist in the district and in certain centres it also functions as the retail distributor. So far as the stockist function is concerned, no change is contemplated.

As regards the retail distribution, it has been decided that the District Co-operative Supply and Marketing Societies should not function as retail distributors in places where retail distribution can be entrusted to the local primary societies, viz., Taluk Marketing Societies, Village Credit Societies and Agricultural Banks, etc., and this decision is being implemented.

SRI V. K. KOTHANDARAMAN : மத்திய சங்கத்திலிருந்து 'அலாட்மெண்டு' செய்வதால் பல விதத்திலே விவசாயிகள் கஷ்டப்படுகிறார்கள். விநியோகம் செய்வதிலே கூட பல விதத்தில் ஊழல்கள் ஏற்படுகின்றன என்கின்ற காரணத்தினால், இன்றைக்கு எப்படி ஜில்லா போர்டு அதிகாரம் ஒரு இடத்தில் இருக்கக்கூடாது, பிளாக் லெவலில் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மூலம் அதிகாரம் பரவலாக இருக்கவேண்டுமென்று சொல்லுவது போல், பிளாக் மூலமாக பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மூலம் விநியோகம் செய்வதற்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மத்திய ஸ்தாபனத்தின் மூலமாக மற்ற கிளை ஸ்தாபனங்களுக்கெல்லாம் அனுப்ப வேண்டும். முன்னாலேயே சொன்னேன் அந்த வகையிலே விநி

11th August 1960]

யோசிக்கப்படுகிறது என்று. அவ்வப்பொழுது அந்தந்த நிலைமையை அனுசரித்து 'பிராபர் இன்ஸ்ட்ரக்ஷன்ஸ்' கொடுப்பதற்கு கூட்டுறவுச் சங்கங்களின் ரிஜிஸ்ட்ரார் ஏற்பாடு செய்வார்கள்.

SRI T. T. DANIEL : May I know whether officers are appointed to make periodical checking to find out whether these co-operative societies are functioning properly and especially whether physical checking—not merely account checking—is actually made?

THE HON. SRI M. A. MANICKAVELU : I presume so.

SRI V. SUBBIAH : ஜில்லா சென்டிரல் ஸ்டோர்ஸ் மூலம் விநியோகம் செய்வதினால், கிராமாந்திர விவசாயிகளுக்கு அதில் தொடர்போ அல்லது அவர்கள் அதில் அங்கத்தினர்களாகவோ இல்லாமல் இருப்பதை முன்னிட்டு இரண்டுவித கமிஷன் ஏற்படுகிறது. ஒன்று ஜில்லா ஸ்டோர்ஸ் கமிஷன் கொடுத்து அங்கிருந்து மார்கெட்டிங் சொஸைடிகளுக்கு வருவதற்கு உள்ள வாடகை மற்ற செலவுகளும் சேர்ந்து விடுவதால் நிறைய செலவாவதை முன்னிட்டு, கிராம விவசாயிகள் தொடர்பு உள்ள மார்கெட்டிங் சொஸைடிகளிடம் விநியோகத்தை ஒப்படைப்பது பொருத்தமாக இருக்காதா என்பதை யோசிக்க வேண்டும்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த இலாகா அமைச்சர் இரண்டு நாட்களில் வந்துவிடுவார்கள். அவர்களிடம் இந்த விஷயத்தைச் சொல்லுகிறேன்.

SRI A. GOVINDASAMY : இப்பொழுது சமுதாய நல திட்டப் பகுதிகளில் ஒரு சில கிராமங்களில் இருக்கிற சொஸைடிகளின் மூலம் உரம் வழங்கப்படுகிறது. எங்கெங்கு கிராமங்களில் சொஸைடிகள் இருக்கின்றனவோ, அந்த சொஸைடிகளின் மூலம் அந்தக் கிராமத் தேவையை அறிந்து உரம் விநியோகம் செய்வதற்கு அரசாங்கம் புதிய உத்தரவு போடுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த விஷயத்தையும் மனதில், கவனத்தில் வைத்துக்கொள்ளுகிறேன்.

*Payment of Sivoijama for the cultivation of Government*
***fallow lands***

*** 107 Q.—SRI P. G. MANICKAM** : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் வருடம் மார்ச் மாதம் 21-ல் 489-ம் எண் கேள்விக்கு அளித்த பதிலையொட்டி நம் மாநிலத்திலே சர்க்கார் தரிசு நிலமாகிய 1, 13, 394 ஏக்கர் நிலத்திலே சர்க்காரின் அனுமதியில்லாமல் விவசாயம் செய்து கொண்டிருக்கும் விவசாயிகளுள் எத்தனை பேர்கள் சிவாஜிமா செலுத்திக் கொண்டு வருகிறார்கள்?

(ஆ) சிவாஜிமா செலுத்திக்கொண்டு மேற்கண்ட தரிசு நிலங்களை உழுது வருபவர்களுக்குள் ஹரிஜன விவசாயிகள் எத்தனை பேர்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) The public interest served by answering the questions will not be commensurate with the time and labour involved in collecting the particulars for the answer.

SRI P. G. MANICKAM : 'சிவாஜிமா' செலுத்திக்கொண்டு இந்த நிலங்கள் உழுபவர்களுடைய எண்ணிக்கையை ஜில்லா கலெக்டர் மூலம் வெகு சுலபமாகத் தெரிந்துக் கொள்ளக்கூடும். அவர்கள் கந்தாயம் செலுத்துகிற நிலங்களை அந்த ஹரிஜனங் களுக்கே பட்டா போட்டுக் கொடுக்க வேண்டுமென்று சர்க்கார் கண்டிப்பாக ஜில்லா கலெக்டர் அவர்களுக்கு ஒரு உத்தரவு போட்டால், ஜில்லா கலெக்டர் அந்த நிலங்களை ஹரிஜனங் களுக்கு வழங்குவார்கள். ஆகையால் கவர்ன்மெண்டார் இது விஷயமாகத் தக்க நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் கோருவது நிலம் தாராளமாக ஹரிஜனங்களுக்கு 'அஸைன்' பண்ணவேண்டுமென்பது. அதையெல்லாம் மனதில் வைத்து இப்பொழுது நிலம் இல்லாதவர்களுக்கு, குறிப்பாக ஹரிஜனங் களுக்கு, இம்மாதிரி நிலங்களை விநியோகம் செய்ய வேண்டும் என்று இப்பொழுது ஏற்பாடாகி, அதற்காக ஸ்பெஷல் தாசில்தார், டெப்யூடி கலெக்டர் ஆகியோர்களை நியமனம் செய்து வேலை நடந்து கொண்டிருக்கிறது.

9-00 a.m. SRI M. K. SOMASUNDARAM : ஸார், இம்மாதிரிப் புறம் போக்கு நிலங்களை ஹரிஜன மக்கள் 12 வருஷங்களாக அனு பவித்து வந்திருப்பதனால், அதை அவர்களுக்கே ஜாரி பண்ணிக் கொடுக்காததற்குக் காரணம் என்ன ? அது சம்பந்தமாக கலெக்டருக்கு தகுந்த உத்தரவு போட சர்க்கார் முன் வருவார் களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : உத்தரவு சென்ற மாதம் கூட அனுப்பப்பட்டது.

*Tamilnad Plantation Union*

* 108 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to recognise the registered Tamilnad Plantation Union?

THE HON. SRI R. VENKATARAMAN : It is presumed that the Hon. Member refers to the request made by the Tamilnad Plantation Workers' Union, Valparai, for recognition of the Union by the Cinchona Department for the purpose of representing the workers of the Government Cinchona Plantations in the Anamalais. If so, the matter is under consideration of the Government.

11th August 1960]

SRI N. K. PALANISAMI : Sir, while the INTUC which has got only 2,000 members has been recognised, the AITUC having a membership of more than 10,000 has not been recognised. May I know why there is delay in recognising it?

THE HON. SRI R. VENKATARAMAN : The AITUC has not furnished the list of members called for by the Government.

MR. SPEAKER : The Hon. Minister for Works is not in Madras. We shall postpone his question No. 109.

*Supervisors for the Co-operative Agricultural Farms*

* 110 *Q.*—SRI M. P. SARATHI : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

கூட்டுறவு விவசாயப் பண்ணைகளில் மேற்பார்வையிட நியமிக்கப்பட்டுள்ள அதிகாரிகள் விவசாயத் துறையில் விசேஷப் பயிற்சி பெற்றவர்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : Senior Inspectors of Co-operative Societies who supervise and manage Co-operative Farming Societies have not undergone any special training in agriculture. But they are assisted by Agricultural Demonstration Maistries or Agricultural Fieldmen.

SRI S. M. ANNAMALAI : ஸார், இப்படி விவசாயப் பண்ணைகளில், சீனியர் இன்ஸ்பெக்டர்கள் நியமிக்கும் போது, ட்ரெயினிங் இல்லாமல் இருப்பதால், அவர்களுக்கு நிலத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாமல் இருக்கிறது. ஆகையினால், அவர்களுக்கு ட்ரெயினிங் கொடுத்து, அதன் மூலமாக அவர்கள் அதிக உபயோகமுள்ளவர்களாக இருக்க சர்க்கார் அவர்களுக்கு ட்ரெயினிங் கொடுக்க முன் வருவார்களா ?

THE HON. SRI R .VENKATARAMAN : இதிலே இரண்டு பிரச்சினைகள் இருக்கின்றன. ஒன்று, விவசாயத் தொழில் பயிற்சி; இரண்டாவது கூட்டுறவுப் பயிற்சி. கூட்டுறவுப் பயிற்சி பெற்றிருக்கிறவர்கள், பணம் கடன் வாங்குவது, கடனை வினியோகம் செய்வது, நிர்வாகம் இவற்றிலெல்லாம், கவனம் செலுத்திக்கொண்டிருக்கிறார்கள். விவச்சாயத்தைப் பற்றிய அலுவல்களை, அக்ரிகல்சர் பீல்ட்மென், டெமான்ஸ்டிரேடர் இவர்கள் கவனிக்கிறார்கள். சாதாரணமாக சீனியர் இன்ஸ்பெக்டர்களுக்கு குறைந்த காலப் பயிற்சி அளிப்பதனால், அவர்கள் எல்லாப் பயிற்சியும் அடைய முடியாது.

SRI A. GOVINDASAMY : கூட்டுறவுப் பண்ணை வைப்பதன் நோக்கம், உற்பத்தியைப் பெருக்குவது என்பதினால், விவசாயத்தில் கூட்டுறவுப் பயிற்சியும் அளிக்க அரசாங்கம் முயற்சிக்குமா ?

THE HON. SRI R .VENKATARAMAN : அதுதான் இப்பொழுது சொன்னேன், இதிலே விவசாயப் பயிற்சி ஒன்று, நிர்வாகப்

[11th August 1960

பயிற்சி மற்றென்று. கூட்டுறவுக்கு அதில் பயிற்சி பெற்ற நிர்வாகஸ்தர்களையும், விவசாயத்திற்கு அதற்கு ஏற்ற டெக்னிகல் பர்சனல்களையும் நியமிக்கிறேம்.

SRI M. D. THIAGARAJA PILLAI : தலைவர் அவர்களே, கூட்டுறவு பண்ணைகளை அபிவிருத்தி செய்ய, சீனியர் இன்ஸ்பெக்டர்களையும், பீல்ட்மென்களையும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஆனல், அநேக சங்கங்களுக்கு, அந்த உத்தியோகஸ்தர்கள் உதவி கிடைப்பதில் தாமதம் ஏற்படுகிறது. ஆகவே, சீக்கிரமாகவே நியமனம் செய்ய அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : போதுமான பீல்ட் ஆபிசர்கள், அக்ரிகல்சர் பீல்ட் ஆபிசர்கள் கிடைக்காததுதான் அதற்குக் காரணம்.

SRI S. M. ANNAMALAI : சீனியர் இன்ஸ்பெக்டர்கள் நியமிக்கும் போது, விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்குத் தனிச் சலுகை அளிக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சீனியர் இன்ஸ்பெக்டர்கள் எந்த குடும்பத்தைச் சேர்ந்தவர் என்று பார்ப்பதற்கில்லை ; சீனியர் இன்ஸ்பெக்டர்களைத்தான் போட முடியும்.

SRI A. GOVINDASAMY : இதுவரை கூட்டுறவுப் பண்ணைகளில் ஏற்பட்ட அனுபவத்தை ஒட்டி, அதைத் திருத்தியமைக்க அரசாங்கத்திற்கு, புதிய நடவடிக்கை எடுக்க, உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒன்றும் இல்லை.

SRI M. K. SOMASUNDARAM : சார், விவசாயத்திற்குக் கடன், உரங்களை வழங்கும்போது, பயிரிடும் காலங்களை ஒட்டி, தக்க சமயத்தில் வழங்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : It is a separate subject, Sir,

*Land acquisition.*

*111 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வட ஆற்காடு மாவட்டம் ஆரணி தாலுகாவில் எத்தனை பட்டாதாரர்களின் நிலங்கள் நீர்ப் பிடிப்பு என்று சர்க்காரால் எடுத்துக்கொள்ளப்பட்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The total number is 2,072.

SRI S. M. ANNAMALAI : எவ்வளவு எக்கர் நிலங்கள் சர்க்காரால் எடுத்துக்கொள்ளப்பட்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : 1,765 எக்கர்கள்.

11th August 1960]

SRI S. M. ANNAMALAI : ஸார், இப்படி சிறு நிலச் சுவாந்தார்கள், 4 எக்கர், 3 எக்கர் வைத்திருப்பவர்களை, எரித்தண்ணீர் பிடிப்பு என்று, கிணறுகளை மட்டும் விட்டு விட்டு, சர்க்கார் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். 4, 3 எக்கர்கள் வைத்து இருப்பவர்கள், கிணற்றை மட்டும் வைத்துக்கொண்டு விவசாயம் செய்ய முடியாது. ஆகவே, அதை மறு பரிசிலனை செய்து, நிலங்களை அவர்களுக்கே ஜாரி பண்ணிக் கொடுக்க சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தச் சூழ் நிலை என் ஏற்பட்டது என்றால், ஜாகிர்தார் தன் இஷ்டம் போல் அஸைன் பண்ணி விட்டார்; செட்டில்மெண்ட் செய்யும் போது, தவறாகச் செய்திருப்பது தெரிகிறது. டாங்க் பெட்டில் பயிர் செய்வதானால், எரி தூர்ந்து போய்விடும். இம்மாதிரிப் பயிர் செய்யக் கூடாது என்று தடுக்க வேண்டியிருக்கிறது. ஆனாலும், இம் மாதிரி நிலம் இழந்தவர்களுக்கு, சர்க்கார் நிலத்தைப் பங்கீடு செய்யும் போது, அவர்களுக்கு, ப்ரிபரென்ஸ், முதல் படியாகக் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்த முறையிலே, அவர்களுக்கு நிலம் கிடைக்கும்.

SRI A. GOVINDASAMY : பாதிக்கப்பட்டவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கப்பட்டதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நஷ்ட ஈடு கொடுக்க முடியாது. இது துராக்ருதமாக, ஜாகிர்தாரோ, ஜமீந்தாரோ, செய்ததை நம்பி வாங்கி விட்டார்கள்; அப்படி வாங்கியிருக்கக் கூடாது. சட்டப் பிரகாரம் நஷ்ட ஈடு கொடுக்க முடியாது.

*Tax exemptions to motor vehicles owned by local bodies*

* 112 Q.—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(a) whether tax exemptions are granted to motor vehicles owned by municipalities and panchayats;

(b) if so, from which year; and

(c) on what basis?

THE HON. SRI V. RAMAIAH : (a) & (b) Road-rollers and tractor graders belonging to local bodies are exempt from payment of tax from 1934 and 1941 respectively. Other motor vehicles owned by local bodies have to pay tax.

(c) It is considered that the machinery used for maintaining the roads should not be taxed.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், ஸ்தல ஸ்தாபனங்களிலே, நகர அபிவிருத்தி, சுகாதாரம் போன்ற பொதுக் காரியங்களுக்கு உபயோகிக்கும் எல்லா மோட்டார் வாகனங்களையும், வரி விதிப்பிலிருந்து விலக்களிக்க, இனிமேலாவது திட்டமிட உத்தேசமுண்டா ?

[11th August 1960

THE HON. SRI V. RAMAIAH : இன்றைக்கு இருக்கும் நிலையை பதிலில் சொன்னேன். அம்மா திரி மோட்டார் வாகனங்களுக்கு வரி உண்டா, இல்லையா என்பது பெரிய கொள்கை அடிப்படைப் பிரச்சினை. அது பரிசீலனை செய்யப்படவேண்டியது. அப்படிப் பரிசீலனை செய்யும்போது, அங்கத்தினர் கருத்துக்களை மனதில் வைத்துக் கொள்வோம்.

SRI N. MARUDACHALAM : விலக்கு அளிக்கும்படி எத்தனை முனிசிபாலிடிகள் கேட்டிருக்கின்றன ?

THE HON. SRI V. RAMAIAH : தனிக் கேள்வி போட வேண்டும்.

*Research on artificial rain*

*113 Q—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) செயற்கை மழை ஆராய்ச்சி எந்தெந்த இடங்களிலே நடைபெற்று வருகிறது ?

(ஆ) 1960-ல் எந்தெந்த ஜில்லாக்களிலே செயற்கை மழை ஆராய்ச்சி செய்ய உத்தேசம் ?

(இ) செயற்கை மழை ஆராய்ச்சி எத்தனை தடவை நடத்தப் பட்டது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) The experiments on artificial rain making are now being conducted in Coimbatore.

(b) The experiments will be continued during 1960 in the Coimbatore district. The question of conducting experiments in the Tiruchirappalli district is under consideration. Proposals from the Chief Engineer (Irrigation) for conducting experiments in the Nilgiris and Salem districts are awaited.

(c) The total number of times the experiments were conducted is 267.

SRI P. G. MANICKAM : ஸார், மேற்கொண்டு பரிசோதனை செய்வது வெற்றிகரமாக இருக்குமா, திட்டம் உண்மையிலேயே பயன் அளிக்குமா ? சர்க்கார் அபிப்பிராயம் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த முறையிலே ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில்தான் மழை பெய்யச் செய்யமுடியும். ஆனால், அப்படிச் செய்வது, நமக்கு இருக்கும் அவசியம் பூராவுக்கும் உபயோகிக்கும் வகையில் பிரயோஜனப்படுமா என்று தெரியவில்லை. எக்ஸ்பெரிமெண்ட் மூலம் வரவழைக்கலாம் என்று நான் தெரிகிறது.

11th August 1960]

SRI A. GOVINDASAMY : இந்த வகையில் மழை உண்டு பண்ணமுடியுமா, போதுமா, போதாதா என்ற சந்தேகம் இருக்கும்போது, வீண் செலவு ஏன் செய்யவேண்டும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது இதற்குப் பணம் செலவிடவேண்டும் என்பது, ஒரு இடத்தில் ஏதாவது புதையல் இருக்கிறது என்றால், புதையல் இருக்கிறதா, இல்லையா என்று தெரிந்து நிச்சயிக்கவே, நிலத்தைத் தோண்டி, செலவு செய்து பயன் உண்டா என்று பார்க்கவேண்டும் என்பதுபோல் தான்.

SRI M. KALYANASUNDARAM : ஆராய்ச்சிக்கு எத்தனை தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது, அந்தத் தொகை போதுமானது என்று அரசாங்கம் கருதுகிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The rain-making trials are conducted at Coimbatore at a cost of Rs. 5,000 from 1st June for one year and it is being extended from time to time.

SRI R. SRINIVASA IYER : இப்படி ஒரு அங்குல மழை பெய்யவேண்டுமென்று நினைத்தால் அதற்கு எவ்வளவு ரூபாய் செலவு ஆகும் என்ற கணக்கை சர்க்கார் எடுத்திருக்கிறார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மழையைக் கொண்டு வருவதற்கு முன் அதற்கு முன்பு அந்த இடத்தில் மழை பெய்திருக்க வேண்டும். (சிரிப்பு). அப்பொழுதுதான் இந்த பரீட்சை பயன்படுகிறது. கால்சியம் க்ளோரைட், சோடியம் க்ளோரைட் முதலியவைகளை சுமார் முப்பது அல்லது நாற்பது அடி உயரத்திற்குக் கொண்டுபோய் அங்கே வைக்கக்கூடிய சூழ் நிலையில் மழை பெய்வதற்கு இடம் ஏற்படுகிறது. அப்படி கால்சியம் க்ளோரைட் முதலியவைகளை உபயோகப்படுத்தக்கூடிய அளவில் இவ்வளவு மழை பெய்கிறது என்று கண்டு பிடிக்கப் படுகிறது. அதற்கு முன்பு எவ்வளவு செலவு ஆகும் என்று சொல்வது முடியாது. பரீட்சை செய்து பார்க்கும்போதே இவ்வளவு செலவு ஆகும் என்று திட்டமாகச் சொல்ல முடியாது என்பதை மட்டும் சொல்லிக்கொள்ளுகிறேன்.

SRI P. G. MANICKAM : இயற்கை மழையைக் கொண்டு வருவதற்கு செய்யப்பட்ட பரீட்சை மூலம் வெளி நாடுகளில் நடத்தப்பட்ட நடவடிக்கைகளில் வெற்றி கண்டிருப்பதாக பத்திரிகை மூலமாக அறிகிறோம். அந்த முறையே இந்த நாட்டிலும் அனுஷ்டிக்கப்படுகிறதா அல்லது வேறுமுறை ஏதாவது அனுஷ்டிக்கப்படுகிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : எக்ஸ்பெரிமெண்ட் என்று சொன்னால் அதில் எல்லாவிதமான முறைகளையும் தான் கையாண்டு பார்ப்பார்கள். அந்த மாதிரி வகையில்தான் இங்கு எக்ஸ்பெரிமெண்ட் செய்துகொண்டு வருகிறோம்.

[11th August 1960

SRI K. VINAYAKAM : May I know, Sir, what are the lessons learnt by this Government in this kind of experiment? Is the cost, labour and time involved commensurate with the rains that are brought to the earth? Will the Government drop this kind of mad experiment?

THE HON. SRI M. A. MANICKAVELU : This is only an experiment. If it succeeds there are great potentialities. One doctor took fourteen years to isolate a particular virus. If the doctor was a man of the hon. Member's temperament he would not have succeeded.

SRI P. U. SHANMUGAM : கனம் விநாயகம் அவர்கள் mad experiment என்று சொன்னார். அப்படிச் சொல்லலாமா என்பதை அறிய விரும்புகிறேன்.

SRI K. VINAYAKAM : This is my view.

MR. SPEAKER : The hon. Member can call any experiment anything.

SRI A. VEDARATHNAM : ஸார், இந்த ஆராய்ச்சி மிகவும் சிறந்த ஆராய்ச்சி. அதில் வெற்றி பெற்றால் நம் நாடு பஞ்சம் இல்லாத நாடாகி விடும். நம் நாட்டிலிருந்து பஞ்சத்தை ஓட்டி விடலாம். ஆனால், இந்த ஆராய்ச்சிக்கு ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிற பணம்தான் கொஞ்சமாக இருக்கிறது. அதற்கு ஒதுக்கி இருக்கக்கூடிய 5,000 ரூபாய் போதாது என்று தோன்றுகிறது. அது ரொம்பவும் குறைவு. அதற்கு எவ்வளவு தொகை வேண்டுமானாலும் ஒதுக்க சர்க்கார் முன் வரவேண்டும். அப்படி எவ்வளவு வேண்டுமானாலும் ஒதுக்கி வைத்து ஆராய்ச்சியை தொடர்ந்து நடத்த வேண்டும். ஆகவே அப்படி அதிகப்படியாக பணம் ஒதுக்க முன் வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : எக்ஸ்பெரிமெண்ட் பண்ணுவதற்கு எவ்வளவு பணம் வேண்டும் என்றாலும் ஒதுக்கலாம். இப்பொழுது ஒதுக்கியிருப்பது போதும் என்று கருதித்தான் அப்படி ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதிகமாக வேண்டுமானாலும் ஒதுக்குவதற்கு தேவையான போது யோசிக்கலாம்.

SRI A. A. RASHEED : Sir, may I know whether any landlords have protested to the Government that the rains have fallen during the harvest season?

THE HON. SRI M. A. MANICKAVELU : I am not aware.

SRI A. GOVINDASAMY : பிரார்த்தனை செய்து அதன் மூலமாக மழை பெய்யச் சொல்லலாம் என்று சொல்லுகிறார்களே, அந்த முறையிலும் அரசாங்கம் பரிட்சை செய்து பார்த்தார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: பிரார்த்தனை செய்து மழையைக் கொண்டு வரலாம் என்ற நம்பிக்கை இருக்கிறவர்கள் அதைச் செய்து மழையைக் கொண்டு வந்து கொள்ளலாம்.

11th August 1960]

*Minimum wages for the employees in the Cinema industry*

* 114 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the South Indian Cinema Employees Association has submitted a memorandum of grievances to the State Government and to the Film Industry Committee appointed by the Government of Madras during May 1960 requesting the Government to appoint a wage board to go into the service conditions of the Cine employees and fix a decent wage for them; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) It is proposed to take steps to fix the scales of pay for the various categories of workers in consultation with the concerned interests and ultimately to draw up a decasualisation scheme for labour in this industry.

SRI N. K. PALANISAMI : May I know, Sir, whether this Government have taken any steps on a previous occasion taking into consideration their daily work and their daily wages and their very poor condition?

THE HON. SRI R. VENKATARAMAN : There have been some awards given by the Industrial Tribunals.

*Electrification of Tambaram-Villupuram Railway line*

* 115 *Q.*—SRI A. A. RASHEED :<br>SRI M. P. SARATHI : } Will the Hon. the Minister for Electricity be pleased to state the present stage of the proposal to electrify Tambaram-Villipuram Railway line?

THE HON. SRI V. RAMAIAH : Our information is that all the ancillary civil engineering works connected with the scheme have been practically completed. The system of electrification to be adopted is under consideration of the Railway Administration and technical details are being worked out by them for undertaking the work.

SRI A. A. RASHEED : May I know Sir, the reasons for this delay in taking up this job?

THE HON. SRI V. RAMAIAH : There is not much undue delay. The proposal involves many different problems and they had to be solved. They are being attended to and earnest attempt will be made to finish it soon.

SRI R. SRINIVASA IYER : ஸார் இந்த எலெக்ட்ரிபிகேஷன் சம்பந்தமாக ரயில்வே ஸ்டேஷன்களில் இரட்டை ப்ளாட்பாரம் போடப்பட்டு வந்தது எறக்குறைய ஒரு வருஷ காலமாக நிறுத்தப் பட்டிருப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? எ.சி., டி.சி.,

போன்ற வித்யாசங்களினால் கால தாமதம் ஏற்பட்டிருப்பதற்கும் வேலை துவக்கத்திற்கும் ஏதாவது சம்பந்தம் உண்டா?

**THE HON. SRI V. RAMAIAH** : ஏ.சி. சிஸ்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதா அல்லது டி.சி. சிஸ்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதா என்பதைப்பற்றிய ஒரு பிரச்னை பரிசீலனையில் இருந்து வருகிறது. கனம் அங்கத்தினர் சொன்ன மாதிரி ப்ளாட்பாரம் சம்பந்தமான வேலையைப்பற்றிய தகவல் என்னிடம் ஒன்றும் இல்லை.

*Complaint against the President, Anakkavur Agricultural* ***Co-operative Bank***

* 116 *Q*.—SRI S. M. ANNAMALAI : கனம் கைத்தொழில் அமைச்சர்அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வட ஆற்காடு மாவட்டம், செய்யார் தாலூகா, அனக்காவூர் விவசாய கூட்டுறவு பாங்கின் தலைவர்மீது 13—7—59-ல் பொதுமக்களிடமிருந்து புகார் வந்ததா?

(ஆ) அப்படியானால், அதன்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

(இ) எவ்வளவு பணம் கையாடினார்?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) Yes, Sir.

(ஆ) & (இ) An enquiry was conducted in the matter. It was found that the President had not committed any misappropriation of the funds of the society. However, in view of certain other irregularities committed by him lik the indiscriminate issue of loans to some of his relatives on inadequate securities, the Special Deputy Registrar (Credit and Marketing), Vellore has cancelled his nomination as a Director and President of the Bank. The President has appealed to Government against the above order and the appeal is under the consideration of the Government.

**SRI A. GOVINDASAMY** : தவறுதலாக வழங்கப்பட்ட கடன் தொகைகளைத் திருப்பி வாங்குவதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது?

**THE HON SRI R. VENKATARAMAN** : வழக்கமாக எடுத்துக் கொள்ளப்பட வேண்டிய நடவடிக்கைகள் எல்லாம் எடுத்துக் கொள்ளப்பட்டு வருகிறது.

**SRI V. K. KOTHANDARAMAN** : ஸார், 1937-ம் ஆண்டு வரையில் செய்யார் தாலூகா சூபர்வைஸராக இருந்த அந்த நபர் 13,000 ரூபாய் கையாடல் செய்து அவர்மீது வழக்கு தொடரப்பட்டு தண்டனையும் விதிக்கப்பட்டு அதன் பிறகு டிஸ்மிஸ் செய்யப்பட்டவர் இதற்குத் தலைவராக இருக்கிறார். ஆகவே இது விஷயமாக ரிஜிஸ்தரார் அவர்களுக்குத் தெரியப்படுத்தி தலைமை பதவியையும்

11th August 1960]

டைரெக்டர் பதவியையும் விட்டு அவரை உடனே விலக்குவதற்கு உத்தரவு போட்டுள்ளது என்பது தெரியுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon Sri R. VENKATARAMAN :** இருபத்தி இரண்டு வருஷங்களுக்கு முன் அவர் மீது குற்றம் சாட்டி இருந்தது என்ற தகவல் இருக்கிறது. ஆனுல் அவர் வேறு காரணத்திற்காக நீக்கப்பட்டிருக்கிருர். அவர் அப்பீல் செய்திருக்கிருர்

**Sri S. M. ANNAMALAI :** அந்த சூபர்வைசர் அந்த தாலூகாவில் 200 ரூபாய் கோர்ட்டு மூலம் அபராதம் விதிக்கப்பட்டு, பைன் போட்டுக் கட்டியிருக்கிருர். அப்படிப்பட்ட சூப்பாவைசரை நீக்காமல் அவரை மறுபடியும் பாங்குக்குத் தலைவராக நியமித்தால் அந்த பாங்கு சரிவர நடக்குமா? அவருடைய அப்பீல் பரிசீலனை செய்யப்பட்டதா?

**The Hon Sri R. VENKATARAMAN :** கனம் அங்கத்தினர் அவர்கள் தயவு செய்து அவர் என்ன உத்தியோகம் வகித்தார், எப்பொழுது தண்டிக்கப்பட்டார் என்பதைப்பற்றிய முழு விவரத்தையும் எழுதி அனுப்பும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

*The Madras Agricultural Produce Markets Act, 1959*

Q.—Sri V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) புதிதாக நிறைவேற்றப்பட்ட " The Madras Agricultural Produce Markets Act 1959 " அமுலில் வந்துவிட்டதா?

(ஆ) இல்லையென்றால், ஏன்?

(இ) மார்க்கெட் ஏரியா ( area ) எவ்வளவு?

(ஈ) அதை விஸ்தரிக்க உத்தேசம் உண்டா?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Rules under the Madras Agricultural Produce Markets Act, 1959 have to be framed and they are under examination. Further, the Government have decided that the Madras Agricultural Produce Markets Act, 1959 should be brought into force only after the Market Committees are reconsituted in accordance with the provisions of the existing Act (namely, the Madras Commercial Crops Markets Act, 1933) and steps to reconstitute the Market Committees by way of holding election are under way.

(*c*) & (*d*) It is presumed that the number refers to the " notified " market area mentioned in sub-section (4) of Section 5 of Madras Act 23 of 1959. Market area has to be specified by the Government by way of notification. The market area will be fixed on the recommendation of the Market Committee and will be dependent on factors, such as availability of transport facilities, places from which the commodities come and other circumstances if any. The question has not yet been taken up.

[11th August 1960

### *Land ceiling*

* 118 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) உச்சவரம்பு திட்டத்தின்கீழ் எத்தனை ஏக்கர் நிலங்கள் நிலச்சுவான்தாரர்களிடமிருந்து கிடைக்கலாம்?

(ஆ) இந்நிலங்கள் யார் யாருக்கு பகிர்ந்து கொடுக்கப்படும்?

THE HON. SRI M. A. MANICKAVELU : According to the statistics gathered by the Special Officer for Land Reforms last year, the extent of surplus land that will be available, if ceiling is fixed at 30 standard acres, adopting the definition of 'standard acre' contained in the Madras Agricultural Income Tax Act, 1955, is 2.82 lakhs standards acres. The definition of 'standard acre' adopted in the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960 is slightly different. Many land sales have also taken place, all over the State, since the statistics were gathered. In the circumstances, the actual extent of surplus land that will be available as a result of the imposition of land ceiling cannot be stated with any accuracy.

The manner in which the surplus land acquired by the Government under the proposed Ceiling Act will be disposed of, will be decided at the time of framing of rules under that Act; but, in the disposal of the lands, preference will be given to persons who are completely dispossessed of their holdings or whose extent of holding is reduced below three standard acres. In this connection, I invite the attention of the Hon. Member to clause 84 of the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960.

SRI S. M. ANNAMALAI : இந்த நில உச்சவரம்பு மசோதாவானது செலெக்ட் கமிட்டியில் இருக்கிறபோது, அதில் கண்டுள்ளபடி 6—4—1960-ல் இருந்து செல்லத்தக்கது என்று இருக்கிறபோது தஞ்சை மாவட்டத்தில் நிலங்களை விற்றுக்கொண்டிருப்பதாகவும், அந்த நிலங்களின் விலைகள் ஏறிக்கொண்டு போவதாகவும் சொல்லப்படுகிறதே, இதனால் பெரும்பாலான விவசாயிகள் பாதிக்கப்படுகிறார்கள் என்றும் தெரிகிறதே இதைத் தடுக்க சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்?

THE HON. SRI M. A. MANICKAVELU: மசோதாவில் க்ருஷல் தேதி ஒன்று சொல்லப்பட்டிருக்கிறபோது—அப்படி ஏதாவது நடந்தால் அந்தச் சட்டப்படி என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுமோ, அவை எல்லாம் காலாகாலத்தில் எடுத்துக் கொள்ளப்படும். ஆனால் இந்தச் சட்டத்தினால் பாதிக்கப்படாத நிலத்தை விற்கலாம். அதை எப்படி தடுக்க முடியும்?

[11th August 1960]

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : இந்த நிலச்சீர்திருத்த உச்ச வரம்பு சட்டத்தினால் நிலம் மிச்சப்படுவது என்பது ஒருபுறம் இருக்க, இப்போது ஐந்து ஏக்கர் அதற்கும் குறைவாக நிலம் வைத்துக் கொண்டிருக்கிற உழவர்களுடைய உரிமைகளைப் பாதுகாக்க, நியாயவாரச் சட்டத்தின்படி ஏதாவது நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுமா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: இந்த மசோதாவை உத்தேசித்து தற்காலிகமாக என்னென்ன ப்ரிகாஷனரி நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படவேண்டுமோ அவை எல்லாம் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. பொறுக்குக் கமிட்டியில் பரிசீலனை செய்தபிற்பாடு சட்டமாகும்.

SRI M. KALYANASUNDARAM : திட்டக் கமிஷன் நிலச்சீர்திருத்தக் குழு புதிதாக ஏதேனும் நமக்கு ஆலோசனை அனுப்பியிருக்கிறார்களா? அதாவது குடும்பத்திற்கு என்று—தனிநபர்களுக்கு உச்சவரம்பு விதிப்பதற்கு பதிலாக—உச்சவரம்பு நிர்ணயிக்க யோசனை சொல்லியிருக்கிறார்களா? அவை பரிசீலிக்கப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அரசாங்கபூர்வமாகத் தகவல் ஒன்றும் இல்லை. பத்திரிகையில் வந்த செய்தியைப் பார்த்துத்தான் தெரியும். காம்பென்சேஷன் கொடுப்பது, இன்னும் ஐந்து நபர்கள் கொண்ட ஒரு குடும்பம் என்று வைத்து உச்சவரம்பு நிர்ணயிப்பது என்பதாக யோசனைகள் தெரிவித்திருக்கிறார்கள் போலிருக்கிறது. பத்திரிகையில் தான் பார்த்தேன்.

*Leather Marketing Centre in Madras*

* 119 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(a) whether a Leather Marketing Centre has been opened in Madras; and

(b) if so, the details thereof?

THE HON. SRI V. RAMAIAH : (a) & (b) Yes, Sir, A General Marketing Depot for leather has been started in Madras with the financial assistance sanctioned by the Khadi and Village Industries Commission. The Depot is intended to arrange for the sale of leather and leather goods manufactured by the institutions under the Village Industries Programme and will function on a regional basis.

SRI A. A. RASHEED : May I know the total quantity of leather received and sold since the Centre was opened in Madras?

THE HON. SRI V. RAMAIAH : I want notice.

[11th August 1960

*Industrial Training Centre.*

*120 *Q*.—**Sri P. G. MANICKAM :** கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

அரசாங்கத் தொழிற்பயிற்சி நிலையங்களிலே,

(1) Leather cloth including artificial leather;

(2) Bags and trunks;

(3) Pickers;

(4) Picking bands and straps;

(5) Roller skins;

(6) Belting of leather; and

(7) Saddlery and harness.

முதலிய சாமான்கள் தயாரிக்கப்படுகின்றனவா ?

The Hon. Sri V. RAMAIAH : Bags and suit cases and saddlery products are manufactured in the Government Footwear Units, Perambur and Pallavaram, and in the Training-*cum*-Production Centre for the manufacture of fancy leather goods, Industrial Estate, Guindy. The other articles mentioned in the question are not being manufactured at present in the Departmental units.

**Sri P. G. MANICKAM :** இந்தக் கேள்வியிலே கூறப்பட்டிருக்கும் சாமான்களுக்கு வெளிநாடுகளில் நல்ல கிராக்கி இருப்பதனால், சர்க்காரினாலேயே நடத்தப்படும் தொழிற்சாலையில் மேற்கொண்டு இந்தச் சாமான்களை அதிகம் உற்பத்தி செய்ய நடவடிக்கை எடுக்கப்படுமா?

**The Hon. Sri V. RAMAIAH :** இந்தக் கேள்வியில் சொல்லப்பட்ட சாமான்கள் உற்பத்தி செய்வது பற்றித்தான் நானும் பதில் சொன்னேன்.

Mr. SPEAKER : Questions are over.

[*Note*.—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II.—POINT OF ORDER *re*. USE OF A CERTAIN EXPRESSION WITH REFERENCE TO A PARTICULAR PARTY.

**Mr. SPEAKER:** கேள்வி நேரத்தின்போது இன்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ வேதரத்னம் பிள்ளை 103 என்னுள்ள கேள்வியின் கீழ் போட்ட ஒரு உபகேள்விக்கு கனம் அங்கத்தினர் ஸ்ரீ கோதண்டராமன் அவர்கள் ஒரு 'பாயிண்ட் ஆப் ஆர்டர்' எழுப்பினர். நான் அதற்கு பதில் சொன்னேன். இதே மாதிரியாக லண்டன் பாராளுமன்றத்தில் நடந்த விஷயங்களுக்கு அங்கு சொல்லப்பட்டிருக்கக் கூடிய ரூலிங்ஸ் என்ன என்று இப்போது படித்துக் காட்டி கனம் அங்கத்தினர்களுக்கு விளக்க விரும்புகிறேன்.

11th August 1960] [Mr. Speaker]

அங்கே ஒரு மெம்பர் பேசுகிறார் :—

‘ I think that some high-ranking officers now know why. It is because the Government know that their defence policy is criminal, and they have bribed silence among the party opposite.’

அதற்கு இன்னொருவர் பாயிண்ட் ஆப் ஆர்டர் எழுப்புகிறார் :—

‘ On a point of order, Mr. Speaker. The word ‘ bribery ’ applied to hon. Members on this side is surely unparliamentary?

அதற்கு சபாநாயகர் கொடுத்த ரூலிங் :

‘ Words can be used of a party as a whole that would be intolerable if applied to an hon. Member . . . It was a general accusation against the party opposite, but I think that that is quite common, and is not out of order.’

இரண்டாவதாக இன்னொரு சந்தர்ப்பத்தில் எழுப்பப்பட்டது.

‘ On a point of order. This last supplementary question contained the words “ dishonourable ” as applicable to members of the present Administration and “ dishonesty ”. Are not those words completely out of order . . .’

இதற்கு சபாநாயகர் கொடுத்த ரூலிங் :—

‘ They are very undesirable, but it has always been the rule in this House that one can apply abusive words to the Government or to the party opposite to an extent which would not for one moment be permitted if directed to any particular Minister or hon. Member. It is, however, quite undesirable that such language should be used in a supplementary question.’

கடைசியாக மூன்றாவது ரூலிங். நான் இந்த மூன்றையும் தான் பார்த்தேன். இன்னும் அதிகமாக உதாரணம் கொடுக்க வேண்டுமென்றாலும் பார்த்துக் கொடுக்கத் தயார். இங்கே பார்லிமெண்டரி செக்ரடரி பேசுகிறார் :—

‘ This, of course, is part of the general discussion of Socialism *versus* the free economy. I make no complaint about that. There will always be Socialists as long as there is anything left to steal—.’

Then a point of order was raised.—

‘ Is the Parliamentary Secretary entitled to refer to us as thieves?

Then Mr. Speaker said : ‘ I have frequently ruled that an expression which if used about an individual Member, would be a gross breach of order, is not out of order when applied to a party. I have heard many harsh things said about parties.’

ஆனால் ஒன்று மாத்திரம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் கம்யூனிஸ்ட் கட்சியைத் தாக்கலாம். கம்யூனிஸ்ட் கட்சி மெம்பர்கள் இதற்கு ‘பாயிண்ட் ஆப் ஆர்டர்’ ரெய்ஸ் பண்ணக்கூடாது என்று சொல்லுவேன். அதேபோல கம்யூனிஸ்ட் மெம்பர்கள் காங்கிரஸ் மெம்பர்களைத் தாக்கினால் காங்கிரஸ் மெம்பர்கள் ‘பாயிண்ட் ஆப் ஆர்டர்’ ரெய்ஸ் பண்ணக்கூடாது. ஆகவே கனம் அங்கத்தினர்கள் பேசும்போது கொஞ்சம் ஜாக்கிரதையாகப் பேச வேண்டும்.

[11th August 1960

### III.—FIRST SUPPLEMENTARY STATEMENT OF EXPENDITURE FOR THE YEAR 1960-61.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I rise to present the first Supplementary Statement of demands for further expenditure in 1960–61. The detailed explanatory statement has been placed on the table of the House.

2. The Government have accepted all the main recommendations of the Madras Pay Commission and have announced their decision to implement them with effect from 1st June 1960. The scope of these recommendations cover about 170,000 employees of State Government. 113,000 teachers employed under various agencies and 40,000 employees of local bodies other than teachers. Formal orders implementing the revised scales of pay and the revised rates of Dearness and House Rent Allowances have since been issued, in the case of Government employees. Orders will issue shortly for teachers under local bodies and aided institutions and for other employees under local bodies. It may be hoped that the fixation of pay in the revised scales would be done and the
9-30 a.m. arrears from 1st June 1960 drawn by the bulk of Government employees by the end of this month.

3. The Pay Commission has evolved the revised pay structure on the basis of minimum remuneration of 60 for an unskilled employee such as a last grade servant and Rs. 100 for a ' white-collar worked like a Lower Division Clerk. The Commission has also recommended the merger of the bulk of dearness allowance with pay. Based on these two principles, a revised structure of pay and allowances has been evolved which represents a considerable rationalisation and simplification of the existing structure. In the revised scales, special consideration has been shown to technical personnel. Common scales of pay have been accepted for teachers whether serving under Government, local bodies or aided institutions. The pay scales for University teachers are on the basis of scales recommended by the University Grants Commission with adjustments to suit local conditions. The Commission has also recommended the permanent retention of posts which have continued as temporary for more than five years and the upgrading of a sufficient number of lower division clerical posts to the upper division in each department so as to ensure adequate promotion prospects. Government have accepted these general recommendations in principle and will implement them as early as possible. On the issue of Retirement benefits, the Commission has recommended the adoption of the Liberalised Pension Scheme enjoyed by the Central Government employees. This concession together with the merger of the bulk of the dearness allowance with pay, will effect a considerable liberalisation in the retirement benefits of low-paid Government employees.

4. The recommendations of the Commission involve an immediate cost of about Rs. 491.40 lakhs per annum. Apart from the main recommendations, the Commission had also suggested that the

11th August 1960] [Sri C. Subramaniam]

temporary increase given to pensioners may be enhanced from Rs. 6 to Rs. 10. This suggestion has also been accepted by Government at an estimated cost of Rs. 8.65 lakhs per annum. The total immediate cost per annum is therefore Rs. 500.05 lakhs. The ultimate cost of the recommendations will be about Rs. 713 lakhs per annum, but will be felt in full only over a period, as the existing employees under different age groups attain the age of superannuation and benefit in full from the merger of dearness allowance with pay and the other recommendations relating to the Liberalised calculation of pension. The present supplementary demand is for three-fourths of the immediate cost representing the expenditure for nine months in the current year.

5. One other item which has been included in the supplementary demand is a token provision of Rs. 100 for the grant of a Ways and Means advance to the statutory Madras Khadi and Village Industries Board in order to enable the Board to carry on its functions.

6. With these few words, Sir, I commend the supplementary estimates for favour of approval by the House.

### IV.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS—*cont.*

MR. SPEAKER : Today two leaders from the Opposition group will speak and then the Hon. Leader of the House will reply. But still I feel there is time for two or three hon. Members of the House to speak. I had asked hon. Member Sri C. N. Annadurai to come at 9-30 a.m. But he has not come so far. I presume he will come at 10.00 a.m. Therefore I will now call upon one Member from D.M.K. one Member from I.N.D.C. and one Member from Congress to speak.

I have got one more suggestion. I have got more than 20 amendments to the Motion of Thanks. Amendment Nos. 1, 3, 8 and 28 refer to the same subject, viz., rise in prices. Similarly, amendments with Nos. 2 and 21 relate to the same subject, viz., unemployment. There are several amendments which cover one another. Instead of taking vote on each amendment, if hon. Members could agree, one of the amendments covering the same subject might be taken up for voting. That would save much time of the House. It is only a suggestion. I hope the hon. Leader of the Opposition Group, Sri V. K. Ramaswamy Mudaliyar and others would agree. Taking vote on each amendment covering the same subject will be a waste of time. I have only offered a suggestion. I hope hon. Members would agree to it.

SRI K. VINAYAKAM : On a point of Order, Sir. May I know whether this system about which you have just now told, viz., that three more speakers would be allowed to participate in the discussion on the Governor's Address, is evolved to suit the convenience of an hon. Member who could not be present in the House to take part in the discussion. Can we change the programme thus to suit a particular Member?

[11th August 1960

Mr. SPEAKER : The Hon. Minister will reply at 11-30 a.m. The hon. Leader of the Opposition Group will start at 11-30 a.m. hon. Member, Sri C. N. Annadurai might speak for half an hour. Because there was still some time left (about 30 to 40 minutes), I have permitted three hon. Members to speak. There is no rule. It is entirely left to the discretion of the Speaker to call any hon. Member to speak at any time he (the Speaker) likes. If the hon. Member, Sri Vinayakam is questioning anything, it is my discretion.

V.—AMENDMENTS TO THE MADRAS BUILDINGS (LEASE AND RENT CONTROL) BILL, 1939 L.A. BILL NO. 20 OF 1959.

Sri S. LAZAR : I want to say something by way of clarification. For giving amendments to the Madras Buildings (Lease and Rent Control Bill, 1959), the last time fixed is 1.00 p.m. today. I understand, Sir, that Government propose to move certain amendments which are likely to radically change the Bill as submitted by the Joint Select Committee. If so, hon. Members might be given an opptrunity to read the amendment that the Government might propose and then move their amendments. So the present time-limit (1.00 p.m. today) might be extended.

Mr. SPEAKER : I have at present no notice of any amendments to be moved by Government. I shall consider the hon. Member's suggestion as and when Government give notice of moving amendments to the Rent Control Bill.

The Hon. Sri C. SUBRAMANIAM : We would like to know what hon. Members think about the Bill. They need not wait to know what Government are going to do and what amendments Government are going to bring forward and then move their amendments. The Bill as reported by the Joint Select Committee is before the House. Therefore it is upto the hon. Members to move the amendments they wish, within the time-limit fixed. I do not think they can wait till Government move any amendment and then move their amendments. I persist that the present time-limit for moving amendments need not be extended.

Mr. SPEAKER : So the original programme stands and hon. Members should give notice of their amendments before 1.00 p.m. today.

IV.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS—*cont.*

Mr. SPEAKER : We shall now continue the discussion on the Governor's Address. Hon. Member Sri Ramaswamy Thevar may now speak.

*Sri S. RAMASAMI THEVAR : கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் ஆற்றிய உரைமீது சில வார்த்தைகள் சொல்லவிரும்புகிறேன். நமது நாட்டிலே சர்க்கார் ஊழியர்களுக்கெல்லாம் ஊதியம் சிறிது அதிகப்படுத்தப் பட்டிருக்கிறது. இதை நாம் வரவேற்கிறோம். அவர்களுடைய ஊதிய

11th August 1960] [Sri S. Ramasami Thevar]

உயர்வை வரவேற்றாலும்கூட. இந்த உயர்வு சரியானபடியில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதாவது, அவர்களுக்கு சம்பளம் அதிகமாக்கப்படுகிற அதேசமயத்தில் பண்டங்களின் விலைவாசிகளும் உயர்ந்துக்கொண்டேபோகின்றன. அதிகமான விலையில் விற்கப்படும் பண்டங்களை வாங்குவதற்கு, சம்பளம் ஓரளவு அதிகமாகக்கொடுத்தும்கூட அது போதாமல் இருக்கிறது. ஆகவே, உயர்ந்தபட்ச விலையைக் குறைப்பதற்கு பண்டங்களின் விலையைக் கட்டுப்படுத்த சர்க்கார் முயலவேண்டும். பண்டங்களின் விலையைக் கட்டுப்படுத்தாவிட்டால், எவ்வளவு சம்பளம் வாங்கினாலும் போதாது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நம் நாட்டிலுள்ள பல பொருள்களை வியாபாரிகள் மற்றவர்களுக்கு கன்ட்ரோல் விலையில் விற்கவேண்டும் என்ற விதியில்லை, விதியினால் பல சங்கடங்கள் ஏற்படுகின்றன. சீனி அதிகம்ம் இருந்தாலும் இன்றைக்கு கொள்ளை விலையில் விற்கப்படுகிறது. சீனி ஒரு விசையின் விலை ரூ. 1.68 நயா பைசே என்றால், அதை ரூ. 2½-க்கு விற்கிறார்கள். அப்படி அதிகமான விலை கொடுத்தாலும் கிடைப்பதில்லை. ஏன் இப்படி விற்கிறீர்கள் என்று அவர்களைக் கேட்டால் "எங்களுக்கு கொடுக்கின்ற கோட்டா மிகவும் குறைவாக இருக்கிறது. நாங்களே திருட்டுத்தனமாக அதிகவிலைக்கு வாங்கிவிற்கிறோம்" என்று சொல்லுகிறார்கள். இதைத் தடுக்க அரசாங்கம் முன்வரவேண்டும். அவர்களுக்கு வேறு வழிகளில் எப்படி கிடைக்கிறது என்பதை சர்க்கார் ஆராய வேண்டும். அவர்கள் அதிகப்படியான விலைக்கு விற்காமல் பார்த்துக்கொள்வது சர்க்காருடைய கடமை. இதைப் பற்றி எடுத்துச்சொன்னாலும் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் கவனிப்பதாகத் தெரியவில்லை.

அடுத்தபடியாக இனாம் கிராமங்கள், ஜமீன் கிராமங்கள் நோடிபிகேஷன் செய்யும் காலத்திலேயே, அதிகபட்ச வரி வாங்கினார்கள். அப்போது ஆங்காங்குள்ள விவசாயிகள் முறையிட்டனர். இதுபற்றி சில கிராமங்களில் உள்ளவர்கள் உயர்நீதி மன்றத்திலே ரிட் பெடிஷன் போட்டார்கள். அடுத்துள்ள சர்க்கார் கிராமங்களிலே என்ன வரி விதிக்கப்படுகிறதோ, அதே அளவிற்குத்தான் இனாம் கிராமங்களுக்கும் வரி போடவேண்டுமென்று உயர்நீதி மன்றத்தில் தீர்ப்பு கூறப்பட்டது.

எந்தக் கிராமத்தார் ரிட் பெடிஷன் போட்டார்களோ அவர்களுக்கு மட்டும் சலுகை கொடுத்திருக்கிறார்களே தவிர மற்ற கிராமங்களுக்கு அந்த விதிவிலக்கு தரமுடியாது என்று சொல்லப்பட்டது. அப்படிச் சொல்லப்பட்டு அதிக வரி வாங்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது அதிக வரி செலுத்தினாலும் செட்டில்மென்டான பிற்பாடு அதற்கு என்ன வரி என்று தீர்ப்பாகிறதோ அந்த அளவை வசூலித்து அதிகப்படியாக வாங்கியிருப்பதை பாக்கியில் கழித்துக் கொள்வோம் என்று சொல்லப் பட்டது. ஆனால் இன்று அப்படி யல்ல. என் தாலுகாவாகிய, பட்டுக்கோட்டை போன்ற தாலுக்காக்களில் பல லட்சக்கணக்கான ரூபாய் அதிகமாக வசூலித்திருக்கிறார்கள். ரிட் மனுப் போட்டு,

[Sri S. Ramasami Thevar] [11th August 1960

எதிர்த்தவர்களுக்கு மட்டும்தான் இந்தச் சலுகை. அப்படி எதிர்க்காது பேசாதிருக்கும் மற்ற கிராமத்தாருக்கு ஒன்றுமே செய்யமுடியாதவர்களுக்கு அதிகம் வரி என்று சொன்னால் என்ன அர்த்தம்? ஆக, கூடுதலாக வாங்கப்பட்டிருக்கும் வரியைப் பின்னர் கழித்துக்கொள்வதுதான் நியாயம், தர்மமுமாகும். அடுத்தபடியாக, இன்னும் கிராமங்களில் சில நிலங்கள் பட்டா ஆகவில்லை. ஏற்கனவே விவசாயிகள் உழைத்து வந்த நிலம், அவர்கள் ஏற்கனவே வரி செலுத்திய நிலங்கள் இன்று சர்க்கார் வசமாகிவிட்டது. அவர்கள் ஏற்கனவே அந்த நிலங்களுக்கு வரி செலுத்தியிருக்கிறார்கள் என்றால் அப்படி வசூலித்த வரியை, வரிப்பணத்தை சர்க்கார் தள்ளுபடி செய்து கொடுக்க வேண்டும். அடுத்து ஒரு பெரிய விஷயத்தை கவனிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். எங்கள் பகுதியில் ஜமீன் இனும் கிராமங்கள் சர்க்கார் வசமான காலமுதல் பல கையாடல்கள் நடந்திருக்கின்றன. எனது பகுதியில் திருவாரூர், ஆயிங்குடி, அரசர்குளம், மாத்தூர், எருக்கலக்கோட்டை போன்றவிடங்களில் அங்குள்ள கிராம அதிகாரிகள் கையாடல் செய்திருக்கிறார்கள். ஆயிரக்கணக்கான ரூபாய் கையாடல்கள் செய்திருக்கிறார்கள். பணத்திற்கு ரசீது கொடுக்க, ரசீது புத்தகங்கள் முடிந்த பிற்பாடு, மறுபடி ரசீது புத்தகங்கள் கொடுக்க வேண்டியது சர்க்கார் கடமை. அப்படியிருக்க ஒவ்வொரு அதிகாரியும் பத்து பதினைந்து ரசீது புத்தகங்கள் கொடுக்க வேண்டியது சர்க்கார் கடமை. அப்படியிருக்க ஒவ்வொரு அதிகாரியும் பத்து பதினைந்து ரசீது புத்தகங்கள் வைத்துக் கொண்டு அவர்கள் மனம்போல் ஏழை விவசாயிகளிடமிருந்து வரி என்று சொல்லி பணத்தை கொள்ளை அடித்துக் கொண்டிருக்கிறார்கள். பதினாயிரம் கணக்கில் கையாடல் செய்து கொண்டிருக்கிறார்கள். அதுபற்றி கேள்வி வந்த நேரத்தில் இவர்களை 'ஸஸ்பெண்ட்' செய்வது போல் செய்து, மறுபடியும் 'மயிலே மயிலே இறகு போடு போடு' என்று சொல்வதுபோல கொள்ளையடித்த பணத்தை வசூல் செய்து கொண்டிருக்கிறார்கள். இப்படி சம்பந்தப்பட்ட அதிகாரிகளை தண்டிப்பதில்லை. சில வட்டங்களில் மூன்று நான்கு வருடங்களாக கிராம அதிகாரிகள் ஸஸ்பென்ஷனில் இருக்கிறார்கள். இதேபோன்று பல மோசடிகள் நடந்திருக்கின்றன. சிலர் நல்லவராகயிருக்கலாம். என் தாலுகாவில் 100-க்கு 60 கிராமங்களில் மோசடி நடந்திருக்கிறது. வரி கொடுத்து ரசீது வைத்திருப்பவனிடமே போய் பணம் கேட்டு அவர்கள் பொருள்களை ஜப்தி செய்து வரி கொடு என்று கேட்கிறார்கள். பணம் கொடுத்த ரசீதைக் காட்டினாலும், எங்களிடம் அதற்கு கணக்கு இல்லை என்று சொல்லி அவர்களைப் பணம் கொடுக்க விரட்டியடிக்கிறார்கள். இது விவசாய காலம். இந்த ஆடியில் மழை பெய்திருக்கிறது. இந்த சமயத்தில் கூட "கலெக்ஷன் ட்ரைவ்" என்று வேட்டையாடுகிறார்கள். இது தகாது. ஆக, விவசாயிகள் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் இந்த நேரத்தில் மேலும் அவர்களைக் கஷ்டப்படுத்தக் கூடாது. அவர்களின் கஷ்டங்களைப் போக்க வேண்டும்.

11th August 1960] [Sri S. Ramasami Thevar]

அடுத்தபடியாக, கவர்னர் அவர்களது உரையின்மீது இதற்கு முன் நடந்த விவாதங்களில் நான் கலந்துகொண்டு இலங்கை தமிழ் மக்களைப் பற்றி யாதொன்றும் குறிப்பிடப்படவில்லை என்று எத்தனையோ தடவை சொல்லியிருக்கிறேன். இலங்கையைப் பற்றி எதுவும் குறிப்பிடுவதில்லை. இலங்கைவாழ் தமிழர்களைப் பற்றி, அவர்கள் படும் கஷ்டங்களைப் பற்றி எதுவும் சொல்லப்பட வில்லை. இலங்கையில் உள்ள மக்களோடு நாம் அதிகத் தொடர்பு கொண்டிருக்கிறோம். நெடுநாட்களாக அவர்களோடு வசித்து வந்தோம். அவர்களோடு கொண்டுள்ள உறவு இன்றும் அற்றுப் போகவில்லை. அப்படியிருக்க இங்கிருந்து அங்கு போவதற்கு "விசா" கிடைப்பதில்லை. விசா கேட்டால் இங்குள்ள சிலோன் ஆபீஸர்கள், திருச்சி போன்ற இடங்களில் உள்ளவர்கள் இரண்டு மூன்று மாதங்கள் கழித்து வரச் சொல்லுகிறார்கள். ஆக, அவசியமாகவும், அவசரமாகவும் அங்கு ஒரு காரியத்திற்காக போக வேண்டுமென்றால் அது முடிவதில்லை. இது விஷயத்தில் சர்க்கார் கவனம் செலுத்தி விசா சீக்கிரமாகக் கிடைக்கும்படி செய்வதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இன்று நாட்டிலே ஒரு பெரிய அதிர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. கள்ள நோட்டு காரணத்தினால் இன்று பல கஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மக்கள் படும் கஷ்டங்கள் சொல்லி முடியாது. கஜானாவிற்குச் சென்று மாற்ற வேண்டு மென்றால் அதற்கு கமிஷன் கொடுக்க வேண்டியிருக்கிறது. பாங்குக்குச் சென்றால் பிரைஸ் சர்டிபிகேட் வாங்க வேண்டியிருக் கிறது. வியாபாரிகளிடம் சென்றால் 20% கமிஷன் கேட்கிறார்கள். ஆக, மக்கள் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இதற்கும் சர்க்கார் வழிவகைகள் காணவேண்டுமென்று கூறிக் கொண்டு இத்துடன் என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMI: கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்கள் உரைமீது நான் ஒருசில கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். இந்த ராஜ்யத்தில் தமிழ் ஆட்சி மொழியாக்கப்பட்டதாக பல காலத்திற்கு முன்னாலேயே இந்த சபையில் அறிவிக்கப்பட்டிருந்தும்கூட அதை மீண்டும் நினைவு படுத்துகிற முறையில் தமிழ் ஆட்சிமொழியாகி விட்டதென்ற செய்தியை கவர்னர் அவர்கள் அவர்களது உரையில் குறிப்பிட் டிருக்கிறார்கள். ஆனால் உண்மையிலேயே இந்தச் சட்டசபையிலே நடக்கிற நடைமுறையைப் பார்க்கிறபோது, அமைச்சர்கள் கேள்விகளுக்கு பதில் சொல்கிறபோது ஆங்கிலத்தில்தான் பதில் சொல்கிற நிலை இருக்கிறது. முக்கியமான விவரங்களை ஆங்கிலத் தில் படிக்கிற காரணத்ினால் அதை உணர முடியாது சில அங்கத் தினர்கள் சங்கடத்திற்கு உள்ளாகிற நிலையை அறிந்தாவது அதை மாற்ற வேண்டும். எத்தனையோ தடவை இதுபற்றி இந்த மன்றத்தில் வற்புறுத்தியும்கூட அதுபற்றி கவனிக்கப்படா திருக்கும் நிலை பரிதாபத்திற்குரிய விஷயமாகும். இதை உணராது தமிழை ஆட்சிமொழியாக்கி விட்டோம், சர்க்கார் காரியாலயங்கள் சிலவற்றில் தமிழில் பெயர் பலகைகள் பொருத்தி விட்டோம்

[Sri A. Govindasami] [11th August 1960

என்று சொல்வதினால் உண்மையிலேயே தமிழ் ஆட்சிமொழியாகி விட்டதாக சொல்லமுடியாது. அதற்கு எடுத்துக்காட்டாக, சில நிமிடங்களுக்கு முன்பு இந்த மன்றத்தில் படிக்கப் பட்ட அறிக்கையை ஆங்கிலத்தில் படித்தார்கள். அதை, தமிழில் படிக்கமுடியாதா? தமிழில் படித்தால் அதை எல்லோரும் புரிந்து கொள்ள முடியும் என்பதில் ஏன் அமைச்சர் அவர்கள் கவனம் செலுத்தவில்லை என்று கேட்கிறேன். இதைக் குற்றச் சாட்டு என்றே சொல்கிறேன். எதிர்காலத்திலாவது திருந்திக் கொள்வார்கள் என்று இதை எடுத்துச்சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தாற்போல், சர்க்கார் ஊழியர்கள் சம்பளத்தை உயர்த்து வதற்காக, அவர்கள் குறைகளை நிவர்த்திப்பதற்காக 1959-ம் வருஷம் பெப்ரவரி 24-ம் தேதி பே கமிஷன் நியமிக்கப்பட்டது ஆனால் சம்பள உயர்வு ஜூன் 1960-ல் இருந்து கொடுக்க சிபார்சு செய்திருக்கிறார்கள். ஆனால் மத்திய சர்க்கார் ஊழியர்களின் பே கமிஷன் 1959 நவம்பரில் இருந்து கொடுக்க வேண்டுமென்று சிபார்சு செய்திருந்தும்கூட மத்திய அரசாங்கம் 1959 ஜூலையி லிருந்து சம்பள உயர்வு கொடுத்திருக்கிறார்கள். எல்லாவற்றிற்கும் மத்திய அரசாங்கத்தைப் பின்பற்றும் இந்த அரசாங்கம், அரசாங்க ஊழியர்கள் விஷயத்தில் மத்திய சர்க்கார் அரை மணி நேரம் வேலை நேரத்தை உயர்த்தியிருக்கிறது என்று சொல்லி இவர்களும் வேலை நேரத்தை அரை மணி நேரம் உயர்த்த, மத்திய சர்க்காரில் விடுமுறை நாட்களை குறைத்ததுபோல் இங்கும் குறைக்க, சம்பள உயர்வு விஷயத்தில் மட்டும் ஏன் அவர்களை பின்பற்றக் கூடாது என்று கேட்கிறேன். எதிர்காலத்தில் இந்த ராஜ்யம் பஞ்சாயத்து ராஜ்யமாக மாற இருக்கிறது. அத்திட்டம் நன்கு நல்ல முறையில் நடைபெற வேண்டுமென்று அதற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்ற மத்திய சர்க்கார் கட்டளையை ஏற்றுக்கொள்ளும் இந்த சர்க்கார் பஞ்சாயத்து ஊழியர்கள் சம்பள உயர்வு விஷயத்தில் ஏன் கவனம் செலுத்தவில்லை? இதுபற்றி பேசுவதற்கு இரண்டு நாட்கள் இருப்பதால் அப்பொழுது இதுபற்றி விரிவாகப் பேசிக்கொள் கிறேன். இப்பொழுது அதுபற்றி சுருக்கமாக ஒன்றிரண்டு கருத்துக்கள் மட்டும் கூறிவிட்டு மற்ற விஷயங்களுக்கு வருகிறேன்.

மின்சாரத்தை பரவலான முறையில் விஸ்தரித்து இருக்கிறோம் என்று ஒவ்வொரு ஆண்டும் சொல்லப்பட்டு வருகிறது. ஒவ்வொரு ஆண்டிலும் 8,000, 9,000 கிராமங்களுக்கு விஸ்தரித்திருக்கிறோம் என்பதாகச் சொல்லுகிறார்கள். ஆனால் இதில் எங்கள் பக்கத்தில் குறிப்பாக விருத்தாசலம் வட்டாரத்தில் சில கிராமங்களில் சில தகராறுகள் இருந்து வருகின்றன. அதாவது தோரணூர், கிரனூர் முதலிய கிராமங்களில் மின்சார விஸ்தரிப்பு நடந்து கொண்டிருந் தது. என்ன காரணத்தினாலோ திடீரென்று இடையில் நிறுத்தி விட்டு திருச்சி மாவட்டத்தில் ஆண்டிமடம் போன்ற இடங்களுக்கு கொண்டு போய்விட்டார்கள். இதற்கு என்ன காரணம் என்று தெரியவில்லை. அதோடு இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் 152 கோடி ரூபாய்க்கு திட்டமிட்டு கடைசியில் 181 கோடிக்கு

11th August 1960] [Sri A. Govindasami]

செலவு செய்யப்பட்டிருக்கிறது என்று பெருமையாக கவர்னர் அவர்களுடைய உரையில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஆனால் 181 கோடிக்கு மேல் திட்டமிட்டு பின்னால் மத்திய அரசாங்கம் வெட்டிக் குறைத்த தொகைதான் 152 கோடி ரூபாய்.

அது மாத்திரமல்ல, இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்தையேயொட்டி எதிர்காலத்தில் சமுதாய நலத்திட்டங்கள் எல்லாம் பஞ்சாயத்து மூலமாகவே நடத்துவதற்கு எல்லா வழிகளும் செய்திருக்கிறது என்று சொல்லப்படுகிறது. அதே அளவில் அண்டையிலுள்ள ஆந்திர ராஜ்யத்திலும், ராஜஸ்தானிலும் பஞ்சாயத்து ராஜ்யம் ஏற்படுத்தியிருப்பதைப்பார்த்தால் பஞ்சாயத்து கவுன்சில்களுக்கு எல்லாம் பொது மக்களின் பிரதிநிதிகளைத்தான் தலைவர்களாகப் போட்டிருக்கிறார்கள். ஜில்லா லெவலில் இருக்கின்ற மாவட்ட பஞ்சாயத்துக்களிலும் பிளாக் யூனியன் பஞ்சாயத்துகளிலும் பொதுமக்களின் பிரதிநிதிகள்தான் தலைவர்களாக இருக்கிறார்கள். அரசாங்க அதிகாரிகள் காரியதரிசிகளாக இருக்கிறார்கள். நம்முடைய அரசாங்கத்தை எடுத்துக்கொண்டால் டெவலப்மெண்ட் கௌன்சில், பஞ்சாயத் யூனியன், இவைகளை எல்லாம் ஏற்படுத்தியிருக்கின்ற முறைகளைப் பார்க்கின்ற நேரத்தில், மத்திய அரசாங்கம் சொல்லுகின்ற கொள்கைகளை எல்லாம் ஒத்துக்கொள்கின்ற இந்த அரசாங்கம், பஞ்சாயத்துக்களினால்தான் இனி எல்லா காரியங்களும் செவ்வனே நடைபெற முடியும் என்று திரு. எஸ். கே. டே போன்றவர்கள் அறிக்கை விட்டுக்கொண்டிருக்கிறார்கள். அதன்படி பஞ்சாயத்துக்கள்தான் இனிமேல் முன்னேற வேண்டும் என்று நினைக்கின்ற இந்த அரசாங்கம் ஆந்திராவிலும், ராஜஸ்தானிலும் ஏற்படுத்தியிருப்பது போன்று இங்கும் ஏற்படுவதற்கு ஏன் தயங்குகிறார்கள் என்பதை நான் அறிய விரும்புகிறேன். நாங்கள் இந்தச் சட்டத்தை பாஸ் செய்கிறபொழுது இதற்கான திருத்தங்களை கொடுத்திருந்தோம். (குறுக்கீடு) எவ்வளவுதான் நாங்கள் திருத்தங்கள் கொடுத்திருந்தாலும் அரசாங்கத்தின் பக்கம் மெஜாரிட்டி இருக்கின்ற காரணத்தால் அவர்கள் எதையும் செய்து விடுகிறார்கள். ஆனால் எங்கள் விருப்பம் அப்போது நிறைவேற்றப்படவில்லை என்பதை குறிப்பிட விரும்புகிறேன். உண்மையிலேயே அரசாங்கத்திற்கு நல்லெண்ணம் இருக்குமானால் இனிமேலாவது திருத்தம் கொண்டு வந்து பொதுமக்களின் பிரதிநிதிகளுக்கு இடம் கிடைக்கிற வகையில் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அவர்கள் எல்லாம் மக்களின் பிரதிநிதிகளுக்கு தலைவராக இருப்பதற்கு வாய்ப்பு அளித்திருக்கின்ற நேரத்தில் இந்த அரசாங்கம் மாத்திரம் ஏன் அது மாதிரி செய்ய முன் வரக்கூடாது என்று கேட்கிறேன்.

இன்றைய தினம் கேரள சர்க்காரோடு பரம்பிக்குளத் திட்டத்தில் உடன்பாடு ஏற்பட்டதைப்பற்றியும், திருத்தணிப் பிரதேசம் தமிழ் நாட்டோடு சேர்ந்ததைப்பற்றி சந்தோஷப்படுவதாகவும் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதே நேரத்தில் செங்கல்பட்டு

[Sri A. Govindasami] [11th August 1960

மாவட்டத்தில் இருந்த சில வளமான பகுதிகள், பிரச்னைக்கே இடமில்லாத சில பகுதிகள், ஆந்திர ராஜ்யத்தோடு சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதை இந்த சர்க்காரால் தடுத்து நிறுத்த முடியவில்லை. ஆனால் ஆந்திர ராஜ்யத்தின் முதல் மந்திரியாக இருந்த திரு. சஞ்சீவி ரெட்டியார், இப்போது அகில இந்திய காங்கிரஸின் தலைவராக இருக்கின்ற திரு. சஞ்சீவி ரெட்டியார் அவர்கள், கிருஷ்ணா-கோதாவரி தண்ணீரை தமிழ்நாட்டுக்கு கொடுப்பதில் எங்களுக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் இல்லை என்று தெரிவித்திருக்கிறார்கள். ஆனால் அதில் இந்த அரசாங்கம் தீவிர கவனம் செலுத்தாமல் இருப்பது வருந்தத் தக்க செய்தியாகும். இருக்கின்ற ஆறுகளுக்கு எல்லாம் அணை கட்டி விட்டோம் என்று சொல்லுகிறார்கள். அப்படியானால் ஏன் இதில் அதிகமாய் கவனம் செலுத்தாமல் வாளாயிருக்கிறார்கள்? இது ஏன் என்று புரியவில்லை. பரம்பிக்குளத்திட்டத்தைப்பற்றி ஏற்கனவே சொன்னார்கள். முன்னால் அவர்களுடைய முழு அனுமதி பெறாமலேயே வேலைகளை துவக்கியதின் காரணமாக பல தகராறுகள் ஏற்பட்டன. இப்போது அவைகளுக்கு எல்லாம் ஒரு சுமுகமான முடிவு ஏற்பட்டிருப்பதைப்பார்த்து நாங்கள் மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம். (கனம் ஸ்ரீ சி. சுப்பரமணியம்: நிஜமாகவா?) ஆம், நிஜமாகவேதான், உங்களுக்கு மக்களிடத்தில் இருக்கின்ற அக்கறையைவிட எங்களுக்கு மக்களிடத்திலே அதிக அக்கறையுண்டு. அவசரமாக இந்த அமைச்சர்கள் வீண் செலவு செய்துவிட்டு பின்னால் தவிக்கின்ற நிலைமையைத்தான் இப்போது நாம் பார்க்கின்றோம். அதிலும் கனம் அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் அவசரமாக இதில் நடவடிக்கை எடுத்து விட்டு பின்னால் அதன் காரணமாக எவ்வளவு கஷ்டங்களுக்கு உள்ளானார் என்பது எங்களுக்கு நிச்சயமாகத் தெரியும். ஆகவே திட்டவட்டமாக அனுமதி வாங்காததின் காரணமாகத்தான் இந்த நிலை ஏற்பட்டது. இப்போது அதை நிவர்த்திசெய்திருப்பதைப் பார்த்து மகிழ்ச்சி அடைகிறோம்.

தூத்துக்குடி துறைமுகத் திட்டம் கைவிடப்பட்டிருக்கிறது என்றுள்ள செய்தியை பிளானிங் கமிஷன் வெளியிட்டிருக்கிறார்கள். எதற்கெடுத்தாலும், தென்னகத்தில் எந்தத்திட்டத்தை ஆரம்பிக்கவேண்டுமென்றாலும் பணம் இல்லை என்று சொல்லிவிடுகிறார்கள். அதே நேரத்தில் இங்கு நமது நிதி அமைச்சர் அவர்கள் எப்படியும் இதை உட்படுத்த முயற்சிக்கலாம் என்று உறுதிமொழி அளித்திருக்கிறார்கள். இதில் நமது அமைச்சர் அவர்கள் திடமாக நிற்க வேண்டும். இதற்கு எதிர் கட்சிகள் எல்லாம் அமைச்சர் அவர்களோடு பக்கபலமாய் இருக்க தயாராயிருக்கிறார்கள். ஆனால் மத்திய அரசாங்கத்தின் திட்ட கமிஷனிடம் எப்படி கனம் சுப்பிரமணியம் அவர்கள் சொல்லி சேர்க்கப் போகிறார்களோ, அன்றைக்குத்தான் நமது அமைச்சர் அவர்களின் திறமையை நாம் பார்க்கவேண்டியிருக்கிறது. இதில் சுப்பிரமணியம் அவர்கள் ஜாக்கிரதையாக இருந்து திட்டக்கமிஷனுடன் போராடி இதை பெறுவார்கள் என்று நம்புகிறேன்.

11th August 1960] [Sri A. Govindasami]

இந்த சந்தர்ப்பத்தில், குடியரசுத் தலைவர் ராஜேந்திர பிரசாத் அவர்கள் தூத்துக்குடிக்குப்போக இருந்தார்கள். அதன் பின்னால் சுகமில்லாமல் இருப்பதாகவும் அதன் காரணமாக அங்குபோக வில்லை என்றும் தெரிவிக்கப்பட்டது. உடம்புக்கு சுகமில்லாமல் ஆகிவிட்ட பிறகு இரண்டு மூன்று தினங்கள் ஓய்வு எடுத்துக் கொண்டார்கள். அதன் பின்னாலாவது தூத்துக்குடிக்குப் போயிருந்தால் அங்குள்ள மக்களின் எண்ணம் என்ன என்பதை அறிய அவர்களுக்கு ஒரு வாய்ப்பு இருந்திருக்கும்.

SRI S. LAZAR : On a point of Order, Sir. The Assembly Rules specifically state that during the course of any debate or discussion the name of the President or the Governor shall not be dragged in so as to influence the debate. The hon. Member is trying to drag in the name of the President to support his cause that the Tuticorin port development has been left out and if only had the President toured that way he would have been convinced of the difficulties and all that. This reference to the President's tour is prejudicial to the particular rule and I therefore want to know whether it is in order.

MR. SPEAKER : I heard the hon. Member, Sri A. Govindasamy, was simply expressing his regret at the President's not being able to visit Tuticorin due to his indisposition and nothing else. There is nothing out of order in it.

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir. It would appear there is an aspersion cast on the President in the hon. Member's statement that the President instead of visiting Tuticorin had gone somewhere else. I did not want to take notice of it. But since the matter has been raised, I am sorry to state that the hon. Member's statement that the President's tour should not have been altered and even his doubt whether he was ill or well is a reflection on the President. (Interruption.)

I am glad to hear that the hon. Member did not mean to cast any aspersion on the President. But even then, to criticise the tour in one or the other direction is not a matter relevant for discussion now.

SRI A. GOVINDASAMI : ராஜேந்திர பிரசாத் அவர்களைப் பற்றி நான் குற்றஞ் சாட்டிப் பேசவில்லை. அவர்களுக்கு உடம்பு சுகமில்லாமல் இருந்திருக்கலாம் என்பதை நான் ஒத்துக்கொள் கிறேன். ஓய்வு எடுத்துக்கொண்ட பின்னால் இரண்டு நாட்கள் கழித்து போயிருக்கலாம் என்றுதான் சொன்னேன். அதற்காக அவர்களை நான் குற்றஞ்சாட்டுவதாக இவர்கள் வக்கீல் வாதம் செய்யவேண்டிய தேவையில்லை. (குறுக்கீடு)

THE HON. SRI C. SUBRAMANIAM: நான் வக்கீல் வாதம் செய்யவில்லை, வக்கீல் வாதம் எப்படிச் செய்யவேண்டும் என்பதும் எனக்குத் தெரியும். ஆனால் இந்தச் சபையில் எப்படி

[Sri C. Subramaniam] [11th August 1960

பேசவேண்டும் என்பதைப்பற்றி எடுத்துச்சொல்ல எனக்கு கடமையுண்டு. அதல்லாமல் வேஷம் போட்டுக்கொண்டு நான் பேசவில்லை. . .

**MR. SPEAKER:** பிரெஸிடெண்டைப்பற்றி பேசாமல் வேறு விஷயங்களைப் பற்றி பேசுங்கள்.

**SRI A. GOVINDASAMI:** மேலும் இந்தச் சபையில் சுவர்களை எல்லாம் ஆபாசப்படுத்துவதை தடுக்கவேண்டும் என்பதற்காக நமது நிதி அமைச்சர் அவர்கள் ஒரு சட்டத்தைக் கொண்டு வந்தார்கள். ஆட்சேபகரமான சுவரொட்டிகளை ஒட்டக் கூடாது, சுவர்களை ஆபாசப்படுத்தக்கூடாது என்கின்ற அடிப்படையில் இந்தச் சட்டத்தை நிறைவேற்றினார்கள். ஆனால் இப்போது அந்தச் சட்டத்தை ஒரு கருவியாக வைத்துக்கொண்டு எதிர்க்கட்சிகளை அடக்குவதற்கு, அவர்களுடைய பிரசாரங்களை அடக்குவதற்கு முயற்சித்து வருகிறது இந்த அரசாங்கம். சென்னைப் பகுதியில் இப்போது எந்தப்பக்கத்திலும் எதிர் கட்சிகளுக்கு கூட்டம் நடத்துவதற்கு வழியில்லாதபடி செய்திருக்கிறது இந்த அரசாங்கம். சுவற்றில் தான் எழுத முடியவில்லை என்றாலும், ரோட்டில் எழுதுவதையும் தடுத்து விடுகிறது இந்த அரசாங்கம். எதிர்க்கட்சிகளை ஒடுக்குவதற்காக ஏற்படுத்தப்பட்ட ஒரு சதியா இது என்று கேட்கவிரும்புகிறேன். வீட்டுச் சொந்தக்காரர்களே சுவரொட்டிகளை ஒட்டிக்கொள்வதற்கு சம்மதித்தாலும் கூட, அந்த இடங்களில் சுவரொட்டிகளை ஒட்டப் போகின்றவர்களை கைது செய்து, அவர்கள் தண்டிக்கப்படுகின்றார்கள். இத்தகைய முறை மாற வேண்டும். சரியான விதத்தில் இந்தச் சட்டத்தை அமல் செய்வதில் எங்களுக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் இல்லை. ஆனால் இதை துணையாக வைத்துக்கொண்டு எதிர்க்கட்சிகளை ஒடுக்குவதற்கு முயற்சிக்க வேண்டாம் என்று கேட்டுக்கொண்டு எனது பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* **SRI N. R. THIAGARAJAN:** தலைவர் அவர்களே, கவர்னர் அவர்கள் உரை மீது ஆதரித்துப் பேசுமுன், கவர்னர் அவர்

10-00 a.m. களுடைய உள்ளத்திலே எது உறுத்திக்கொண்டு இருந்ததோ—அதாவது மத்திய சர்க்கார் ஊழியர்களின் வேலை நிறுத்தம்—அது தான் எனது உள்ளத்திலேயும் உறுத்திக்கொண்டிருந்தது. மத்திய சர்க்கார் ஊழியர்களின் வேலைநிறுத்தம் வராமல் இருக்கவேண்டும் என்று எதிர் பார்த்தவர்களில் நானும் ஒருவன். வேலை நிறுத்தம் எப்படியோ வந்து விட்டது. வந்துவிட்ட பிறகு அவர்களே வாபஸ் வாங்கி விட்டார்கள்—வேலை நிறுத்தம் முடிந்து விட்டது. நமது மாநில சர்க்காருக்கு இந்த வேலை நிறுத்தம் சம்பந்தமாக மத்திய சர்க்காரிலிருந்து சில ஆலோசனைகள் வந்திருப்பதாகத் தெரிகிறது. அதாவது வேலை நிறுத்தம் செய்த மத்திய சர்க்கார் ஊழியர்கள் விஷயத்தில் அனுதாபமாக நடந்துகொள்ளுங்கள் என்று கேட்டுக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. நான் மாநில சர்க்காரைக் கேட்டுக் கொள்வதெல்லாம், அனுதாபம் அவர்கள் விஷயத்திலே காட்டவேண்டியதுதான்—குறைந்த சம்பளத்தில்

11th August 1960] [Sri N. R. Thiagarajan]

அதிக வேலை வாங்குகிறார்கள் என்று வேலைக்கு வராமல் இருந்தார்கள். ஆகையால்—இப்போதும் வேலை செய்ய வேண்டாம், உங்கள் மீது அனுதாபம் காட்டுகிறோம், தயவு செய்து வீட்டிலேயே இருந்துவிடுங்கள் என்று கூறி, இது தான் நாங்கள் உங்களுக்குக் காட்டும் அனுதாபம் என்று அரசாங்கம் கூற வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மத்திய சர்க்கார் ஊழியர்கள் ஏதோ டாட்டா, பிர்லா, டால்மியா போன்ற கம்பெனிகளில் வேலை செய்வதாக நினைத்துக் கொண்டு, சர்க்கார் என்று ஏதோ ஒன்று தனியாக இருக்கிறது, அதற்கு எதிராக இந்த வேலை நிறுத்தம் என்று நினைத்துக் கொண்டார்கள் போலும். மற்ற இடங்களில் எப்படியோ. எங்கள் ஊரில் இந்த வேலை நிறுத்தம் பொது மக்களுக்கு எதிரானது என்பதைத் தெரிந்து கொண்டார்கள். போஸ்டல் உத்தியோகஸ்தர்கள் இருக்கக் கூடிய வீட்டுக்குப் பொது மக்கள் போய் வேலை நிறுத்தம் செய்தால் நாங்கள் உங்களுடன் பேச மாட்டோம், அந்த மாதிரி எங்கள் காங்கிரஸ் தலைவர்கள் சொல்லியிருக்கிறார்கள், நாவிதர்கள் உங்களுக்கு க்ஷவரம் செய்ய மாட்டார்கள், சலவைத் தொழிலாளர்கள் உங்கள் துணிமணிகளை எடுத்துச் செல்லமாட்டார்கள், ஓட்டல்களில் உங்களுக்கு காப்பி, பலகாரம் வழங்க மாட்டார்கள், வேலை நிறுத்தம் எங்களுக்கு எதிரானது என்று ஒவ்வொரு தபால் இலாகா சிப்பந்தி வீட்டிற்கும், டெலிபோன் எக்ஸ்சேஞ் சிப்பந்தியின் வீட்டுக்கும் சென்று கூறினார்கள். அதன் பிறகு அங்கு எப்படி வேலை நிறுத்தம் நடைபெறும்? அலுவலகங்களுக்கு 8 மணிக்குச் செல்லவேண்டியவர்கள் 7-45 மணிக்கே சென்று நுழைந்து கொண்டார்கள். அதனால் தான் படு தோல்வி அடைந்து இவ்வளவு சீக்கிரமாக வாபஸ் வாங்கிவிட்டார்கள். அவர்களுக்கு அனுதாபம் காட்ட வேண்டும். சம்பளம் போத வில்லை என்று கூறுவதைக் காட்டிலும் "உங்களால் குறைந்த சம்பளத்திற்கு வேலை செய்ய முடியாது, வேறு வேலைக்குப் போய் விடுங்கள்" என்று வேலைக்கு வராமல் இருந்து கொண்டவர்களுக்கு பிரிவு உபசாரப் பத்திரம் ஒன்று வாசித்தளித்து அவர்களை வீட்டுக்கு அனுப்பிவிட வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். இதைத் தான் மறைமுகமாக கவர்னர் அவர்கள் நினைத்திருக்கவேண்டும் என்று நினைக்கிறேன். அதைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கவர்னர் உரையிலே திருத்தணியைப் பற்றி கூறியிருக்கிறார். அவர்களுக்கு வரவேற்பு அளிக்கப்பட்டுள்ளது. கன்னியாகுமரி வாசிகள் முன்பு வந்துசேர்ந்தார்கள். வந்து சேர்ந்தவுடன் இங்கே பிறந்த வீட்டுப் பெருமையையே பேசிக்கொண்டிருந்தார்கள். அதே நேரத்தில் திருத்தணி வாசியாக இருக்கின்றவர் நல்வரவு கூறும் வகையில், வாழ்த்துக் கூறும் வகையில் புகுந்த வீட்டுப் புகழ் பாடிக்கொண்டு வந்தார். ஆறு மாதத்திற்குள் வேலை நன்றாக இருக்கிறது என்று சந்தோஷப்பட்டிருக்கிறார். அதைக் கண்டு நானும் சந்தோஷப்படுகிறேன்.

மூன்றாவதாக, மொழிப் பிரச்னையில் இந்த நாட்டிலே இந்தியை எதிர்க்கப்போகிறோம் என்று ஒரு கூட்டத்தார் கறுப்புக் கொடி காட்டவேண்டுமென்று ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள். இப்போது நல்ல வகையில் தமிழன் பண்பாடு காக்கப்படும் முறையில் வாபஸ் வாங்கிக்கொண்டார்கள். ஏதோ நேருஜி உறுதி மொழி, ராஜன் பாபு அறிக்கை என்று ஒரு சால்ஜாப்பைக் கூறி எப்படியோ புத்திசாலித்தனமாக இந்த இயக்கத்தை விட்டு விட்டார்கள். நான் நேரு அவர்கள் முன்பு கூறியதையும் படித்துப் பார்த்தேன், இப்போது கூறியதையும் படித்துப் பார்த்தேன்.

SRI P. U. SHANMUGAM : நேரு கொடுத்த வாக்குறுதியை சால்ஜாப்பு என்று சொல்லுகிறார். அம்மாதிரி இந்த மன்றத்தில் சொல்வது முறைதானா என்று கேட்க விரும்புகிறேன்.

SRI N. R. THIAGARAJAN : நேரு அவர்களின் வாக்குறுதியைப் பற்றிக் கூறவில்லை. ஏதோ சால்ஜாப்புக் கூறி இவர்கள் வாபஸ் வாங்கிக்கொண்டார்கள் என்றுதான் சொன்னேன். எப்படியோ பண்போடு நடந்து கொண்டார்கள். இதற்கு முன்பு எனக்கு இவர்களைப் பற்றி உயர்வான எண்ணம் கிடையாது. இப்போது இதை வாபஸ் வாங்கிக்கொண்ட பிறகு சற்று நினைக்கும்படி ஏற்பட்டிருக்கிறது. இப்போதுதான் நம் தமிழ் நாட்டுப் பண்பாடு காப்பாற்றப்பட்டது. ஏதோ புத்திசாலித்தனமாக யோசனை செய்து வாபஸ் வாங்கி விட்டார்கள். நாட்டுப் பிரிவினை, இனத் துவேஷம் இவைகளை ஒழித்துவிட்டால் இங்கு மட்டுமல்ல இந்திய பாராளுமன்றத்திலும் கூட பிரதான எதிர் கட்சியாக இருக்கவேண்டுமென்று விரும்புவேன். இதை நான் சொல்லவில்லை. அவர்கள் கட்சியிலிருந்து விலகிய ஒருவரே கூறியிருக்கிறார். “இன வெறி அதிகமாக இருக்கிறது, ஆகையால் அதிலே இருக்க முடியவில்லை” என்று கூறியிருக்கிறார். இன வெறி, நாட்டுப் பிரிவினை ஆகிய இரண்டையும் விட்டு விட்டால் நல்ல எதிர் கட்சியாக இருக்க முடியும் என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம்பற்றி ஐந்தாவது பாராவில் கூறியிருக்கிறார். போட்ட கணக்குக்கு மேல் செலவு செய்து திட்டங்கள் நிறைவேறியிருக்கின்றன. பெரியார் மின்சாரத் திட்டம் வைகை அணைக்கட்டுத்திட்டம் எல்லாம் கோடி கணக்கில் செலவு செய்யப்பட்டு நிறைவேறியிருக்கின்றன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றி மதுரை ஜில்லாவைப் பொறுத்த வரையில் ஒரு புத்தகம் இருக்கிறது. இந்தப் புத்தகத்தில் கண்டுள்ளவை பெரும்பாலும் நடைபெறவில்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன். அதோடு மராமத்து சம்பந்தமாக ஒரு புத்தகம் கூட இருக்கிறது. அந்தப் புத்தகத்தில் கண்டுள்ளவைகளும் பெரும்பாலும் நடைபெறவில்லை. கல்வி இலாகாவைப் பொறுத்த வரையில் நன்றாக கவனித்துக் கொண்டால் போதும், கல்வி நன்றாகப் பரவினால் போதும் என்று இருந்து விடக்

11th August 1960] [Sri N. R. Thiagarajan]

கூடாது. மின்சாரத்தைப் பொறுத்த வரையில் நமது இலாகா நன்றாக வேலை செய்கிறது என்று அவர் பேசாமல் இருந்து விடக் கூடாது. எல்லா இலாகாக்களும் சரியாக இருக்கின்றனவா, வேலைகள் சரிவர நடைபெற்றிருக்கின்றனவா என்று பார்க்க வேண்டும். எங்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள்தான அரசாங்கத்தை நடத்தி வந்தாலும், மனதில் உள்ளதைக் கூற வேண்டியிருக்கிறது. இந்தப் புத்தகத்தில் போட்டுள்ளபடி சில திட்டங்கள் அதிகமாக நடந்திருக்கின்றன. எங்கள் தாலூகாவில் நான்கு உயர்நிலைப்பள்ளிகள் இருந்தன, ஆனால் இப்போது 23 உயர்நிலைப் பள்ளிகள் இருக்கின்றன. இப்போது பள்ளி இல்லாத ஊரே கிடையாது. மூன்று மைலுக்கு ஒரு உயர்நிலைப் பள்ளி இருக்கிறது. பத்து ஆண்டுகளுக்கு முன்பு என்னுடைய தாலூகாவில் மூன்று கிராமங்களுக்குத்தான் மின்சாரம் கொடுக்கப்பட்டு வந்தது. இப்போது 100 கிராமங்களுக்கு மேல் மின்சாரம் விஸ்தரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு எம்.எல்.ஏ.-யின் தொகுதியை எடுத்துக்கொண்டாலும் இன்னின்ன காரியங்கள் நடந்திருக்கின்றன என்று கண்டு கொள்ளக்கூடிய வகையில் வேலை நடக்க வேண்டும். இன்றைய தினம் பார்த்தால் கல்வி இலாகா, மின்சார இலாகா தவிர மற்ற இலாகாக்களில் சரிவர வேலை நடைபெற வில்லை என்று சொல்லிக்கொள்கிறேன். அதற்கு வேண்டிய தஸ்தாவேஜுகள், ரெக்கார்டுகள் வைத்திருக்கிறேன் அமைச்சர்கள் அதை நன்றாகப் பரிசிலனை செய்து நடைபெற்றிருக்கிறதா என்று பார்த்து, நடைபெறவில்லையானால் மார்ச் மாதம் 31-ம் தேதிக்குள்ளாகவாவது வேலைகளை நடத்துவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் பற்றி பேசிய கவர்னர் அவர்கள் விலைவாசி கூடிக்கொண்டு வருகிறது என்று கூறியிருக்கிறார். அதற்கு நாம்தான் காரணம். சர்க்கார்தான் காரணம். "மாநில சர்க்கார் ஊழியர்களுக்கு 7 கோடி ரூபாய் கொடுத்தார்கள், யாரைக் கேட்டுக் கொண்டு கொடுத்தார்கள்? எங்களைக் கேட்டார்களா கொடுப்பதற்கு முன்னால்? எங்களைத்தான் கேட்கவில்லையென்றாலும் என். ஆர். தியாகராஜனையாவது கேட்டார்களா?" என்று ஒருவர் கேட்டார். ஏழு கோடி ரூபாய் கொடுத்ததன் பலன் மார்க்கெட்டுக்குச் சென்று பார்த்தால் கடைக்காரர்கள் கூறுகிறார்கள் விலைவாசி கூடி விட்டது என்று. சென்ற சட்ட சபைக் கூட்டத்திற்கு வந்தபோது ஒரு ரூபாயாக இருந்த அரிசி இப்போது 1 ரூபாய் 2 அணாவாக ஆகி யிருக்கிறது. அவர்களைக் கேட்டால் முதல் தேதியிலிருந்து 10 தேதி வரையில் சர்க்கார் ஊழியர்கள் எல்லாவற்றையும் வாங்கிக்கொண்டு போய் விடுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். விலைவாசி உயர்வுக்குக் காரணம் நாம் சம்பளம் அதிகமாகக் கொடுப்பது தான். சம்பளம் அதிகமாகக் கொடுப்பதைவிட அண்டை நாடுகளிலிருந்து அரிசி போன்ற உணவுப் பொருள்களை வாங்கி குறைந்த விலையில் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதைப் பரிசீலிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

[Sri N. R. Thiagarajan] [11th August 1960

அடுத்தபடியாக கவர்னர் அவர்கள் தஞ்சை உணவுத் திட்டத்தைப்பற்றி பேசியிருக்கிறார். தஞ்சை ஜில்லாவிலே எனது கணக்குப்படி 15 லட்சம் ஏக்கர் நிலம் இருக்கிறது. ஏக்கருக்கு 30 கலம் விளைந்தால் கூட தமிழ்நாட்டு மக்களுக்கு ஆளுக்கு மூன்று மூட்டை நெல் கொடுக்கலாம். உணவு நெருக்கடி வருவதற்கே வழியில்லை. வேறு நாடுகளுக்குக் கூட ஏற்றுமதி செய்ய முடியும். எனது ஜில்லாவையே எடுத்துக்கொண்டாலும் பெரியார் பாசனத்தின் கீழ் 1½ லட்சம் ஏக்கர்கள் இருக்கின்றன. ஒரு ஏக்கருக்கு 30 மூட்டை நெல் விளைகிறது என்று வைத்துக் கொண்டாலும் 90 லட்சம் மூட்டை விளைகிறது. அங்குள்ள மக்களுக்கு மூன்று மூட்டை விதம் கொடுத்து விட்டு பாக்கி கூட இருக்கும். எனது தொகுதியில், எனது தாலூகாவில் 30 கலம் அல்லது 40 கலத்திற்கும் அதிகமாக விளைவிக்கிறார்கள். ஒவ்வொரு விவசாயியும் 30 கலத்திற்குக் குறைவாக விவசாயம் செய்யக் கூடாது என்றும் அவ்வாறு 30 கலத்திற்குக் குறைவாக விவசாயம் செய்தால் தண்ணீர் கொடுப்பதில்லை என்று கூட சட்டம் போடலாம். இந்த முறையில் விவசாயம் செய்தால் ஜில்லாவிற்கு 10, 15 லட்சம் ஏக்கர் கூடத் தேவையில்லை; ஒன்று அல்லது ஒன்றரை லட்சம் ஏக்கரே போதுமானது என்று சொல்ல விரும்பு கிறேன். அப்படியிருந்தால் தஞ்சாவூர் அரிசியை வைத்துக் கொண்டு இந்த நாடே வாழ முடியும் என்று சொல்லிக்கொண்டு கவர்னர் பெருமானுடைய உரையை ஆதரித்து என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

**SRI C. N. ANNADURAI** : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்தமுறை கவர்னருடைய பேருரையின் மீது நான் எடுத்துச் சொல்ல இருக்கின்ற கருத்துக்களின் அளவையும், அதனுடைய சிக்கலையும் என்னுடைய கழகத்தைச் சேர்ந்த நண்பர்கள் இங்கே பேசுகின்ற நேரத்தில் எடுத்துச் சொல்லி என்னுடைய சுமையை வெகுவாகக் குறைத்திருக்கின்றார்கள். அதுமட்டுமல்லாமல் இதற்கு எதிரான கருத்துக்களை எடுத்துச் சொன்ன காலத்தில், மற்ற கனம் அங்கத்தினர்களும் கவர்னர் பேருரையிலே இருக்கக் கூடிய குறைகளை நல்ல முறையிலே அலசிக் காட்டி "என்றாலும் நாங்கள் வரவேற்கிறோம்" என்ற முறையிலே தங்களுடைய பேச்சை முடித்திருக்கிறார்கள். என்னுடைய அலுவல் குறைந்திருக்கிறது என்பது மட்டுமல்ல; கவர்னர் பேருரையின் மீது நாங்கள் கொண்டிருக்கின்ற கருத்துக்களை எடுத்துச் சொல்லும் நேரத்தில் அது ஆளும் கட்சியினரால்—அமைச்சர்கள் உள்பட எந்த வகை யிலும் அளவிலும் கவனிக்கப்படுகிறது என்பதைப் பார்க்கும் நேரத்தில், இவைகளைப்பற்றி விரிவாகப் பேசிக் கொண்டிருப் பதால் ஏதாவது பலன் கிடைக்குமா என்றால் இல்லை. விருப்பு வெறுப்பு இல்லாமலும், கட்சிக் கண்ணோட்டத்தில் பிரச்னைகளைக் கவனிக்காமலும் எல்லாக் கட்சிகளும் ஒன்றுபட்ட உணர்ச்சியுடன் செயலாற்றி இந்த மாகாணத்திற்குப் பெருமை தேடித்தரவேண்டு மென்று கவர்னர் பெருமான் தம்முடைய பேருரையில் வலியுறுத்திச் சொல்லியிருப்பதை அமைச்சர்களும் அடிக்கடி

11th August 1960] [Sri C. N. Annadurai]

தங்களுக்குக் கவனத்திற்கு வருகிற நேரத்தில் எடுத்து விளக்கி யிருந்தும்கூட, ஒவ்வொரு முறையும் எங்கள் கழகத்தின் சார்பில் எடுத்துச் சொல்லப்படுகின்ற கருத்துக்கள் எள்ளிநகையாடப்பட்டு எரிச்சலூட்டப்படுகின்றதே தவிர முன் பின் நடவடிக்கைகளை ஆராய்ந்து, உள்ளபடியே சொல்லப்படுகின்ற குறைபாடுகளை உணர்ந்து கவனிக்கத்தக்க அக்கறை இந்த அமைச்சரவைக்கும், ஆளும் கட்சிக்கும் இல்லாமலிருப்பதைப் பார்த்து மிகுந்த வருத்த மடைகிறேன்.

கவர்னர் பெருமான் தம்முடைய உரையிலே எல்லா நிலைமை களும் திருப்தியாக இருக்கிறது என்று சொல்லியிருந்தாலும் அவரும் அதை வெளிப்படையாகக் கூறவில்லை. இந்த நாட்டை ஆளுகின்றவர்களாக இருந்தாலும் கூட, அவர்கள் இன்று இருக்கும் நிலைமை போதுமானது, திருப்திகரமாக இருக்கிறது என்று பூரித்துக்கொள்ள இயலாத நிலையிலேதான் நாட்டில் பல்வேறு சிக்கல்கள் தொடர்ந்து இருந்து கொண்டிருக்கின்றன. எடுத்துக் காட்டாகச் சொல்லவேண்டுமானால், கவர்னர் பெருமான் தம் முடைய உரையிலே "அகவிலையைக் கட்டுப்படுத்தவில்லை என்றால் மக்களுடைய வாழ்க்கைத்தரம் குறைந்து சிக்கல்கள் அதிகமாகி விடும்" என்பதை ஒவ்வொரு முறையும் வலியுறுத்திச் சொல்லி வருகிறார். இந்த விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்துவதற் காகத்தான் இந்த ஆட்சியிருக்கிறது என்று நம்பி இந்த மன்றத் திற்கு வெளியே உள்ளவர்கள் இவர்களைப் பதவியில் அமர்த்தி யிருக்கிறார்கள். ஆனால் இவர்கள் கடை வீதியில் இருப்பவர்களைப் போல், சாலையோரத்தில் இருப்பவர்களைப் போல், அடுப்படியில் இருப்பவர்களைப் போல் அதே பாணியில் பேசிக் கொண்டு இங்கே ஆட்சிப் பொறுப்பில் உட்கார்ந்து கொண்டு "விலைவாசிகளைக் கட்டுப்படுத்த வேண்டும்" என்று யாரைப் பார்த்துச் சொல்லு கிறார்கள்? இன்றைக்கு இவர்கள் ஆட்சிப் பொறுப்பில் இருக்கிற காரணத்தால் நாம் இவற்றை இந்த மன்றத்திலே எடுத்துச் சொல்கிறோம். இங்கே எடுத்துச் சொல்லப்படுகின்ற கருத்துக்களை இவர்கள் உள்ளபடியே உதாசீனப்படுத்துகிறார்களே தவிர யோசித்துப் பார்ப்பதில்லை. உள்ளே பேசினாலே கவனிப்பதில்லை யென்றால் வெளியே பேசினால் இவர்கள் கவனிக்கப் போகிறார்களா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். ஒரு கட்சி ஆட்சி மிகப் பலம் பொருந்தியதாகத் தெரிகிற நேரத்தில் அவர்கள் மற்றக் கட்சியினர் சொல்லுகின்ற குறைபாடுகளை அக்கறையுடன் கவனித்துச் செயலாற்றுவது அந்தக் கட்சிக்கு மட்டுமல்ல; அந்த ஆட்சிக்கே, நாட்டுக்கே நல்லது என்பதை அவர்கள் உணர வேண்டும். நம்மிடத்தில் இருக்கும் பலம் அசைக்க முடியாதது என்று அவர்கள் எதிர்க்கட்சிகளை அசிரத்தையாக நினைத்தால்— நான் அவர்களுக்குக் கவனமூட்ட விரும்புகிறேன்—அவ்வித அரசுகள், எதேச்சதிகார ஜனநாயக அரசுகள் கவிழ்க்கப்பட்டு விட்ட சரித்திரத்தை ஓய்வு நேரத்தில் ஆட்சியாளர்கள் படித்துப் பார்க்கவேண்டுமென்று நான் பணிவோடு தெரிவித்துக்கொள்ளு கிறேன்.

[Sri C. N. Annadurai] [11th August 1960

விலைவாசிகளைக் குறைப்பதற்காக இந்த ஆட்சி எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் என்ன என்று துருவித் துருவிப் பார்க்கின்ற நேரத்தில் ஒவ்வொரு முறையும் "விலைவாசிகள் ஏறி விட்டன" என்றுதான் சொல்லிக் கொண்டிருக்கிறார்களே தவிர, இப்படிக் குறிப்பிட்டிருக்கிறோம் என்ற புள்ளி விவரக் கணக்கை எடுத்துச் சொல்லக் கூடிய அவல நிலையிலேதான் இருக்கிறார்களே தவிர வேறில்லை. இதைச் சொல்லும் நேரத்தில் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள், அதிலும் குறிப்பாக காங்கிரஸ் கட்சிக் கொரடா வாக இருக்கும் திரு. கருத்திருமன் அவர்கள் நெல், அரிசி விலை மட்டுந்தான் ஏறிவிட்டது என்று சொல்லுவது போல் பேசியிருக் கிறார். உணவுப் பொருள்களின் விலைவாசி குறையவேண்டுமென்று சொல்லும் நேரத்தில், நெல், அரிசி ஆகியவற்றின் விலை மட்டும் குறைந்தால் போதாது, உழவன் உற்பத்தி செய்வதற்குப் பயன் படக்கூடிய கருவிகளின் விலையும் குறையத்தான் வேண்டுமென்பது உள்ளடங்கியதுதான். கனம் கருத்திருமன், நெல், அரிசி முதலிய வற்றின் விலையைக் குறைப்பதன் மூலம் உழவர்கள் தங்களுக்கு வேண்டிய மண்வெட்டி, ஏர் போன்ற கருவிகளை வாங்க முடியாத நிலைமையில் செயலற்றவர்களாகிவிடுவார்கள் என்றார். அவர்களை இந்த நாட்டிலே செயலற்றவர்களாக்க வேண்டுமென்ற முறையிலே யாரும் வாதாடவில்லை என்பதை அவருக்கு எடுத்துச் சொல்லுவதன் மூலம் மற்றவர்களுக்கும் தங்கள் மூலமாக எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். பொதுவாக இந்த 10, 15 ஆண்டு காலத்தில் விலைவாசி ஏறிக்கொண்டேயிருக்கிறது என்று ஆட்சி யாளர்களும், ஆட்சியாளர்களுக்கு அவ்வப்போது ஆலோசனை சொல்கிற பொருளாதார நிபுணர்களும் சரியான முறையில் வகுத்துக்காட்டவில்லை என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன். இரண்டொரு தினங்களுக்கு முன்னால், டில்லியில் பொருளாதார நிபுணர்கள் இந்த இந்தியத் துணைக் கண்ட பிரதம அமைச்சரின் முன்னால் உட்கார்ந்து இந்த விலைவாசிகளின் ஏற்றத்திற்குக் காரணம் என்ன என்பதுபற்றிப் பேசிய பேச்சைப் படித்துப் பார்த்ததில் அவர்களுக்குள்ளாகவே ஒருமித்த கருத்து ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. இப்படிப் பட்ட சிக்கல் நிறைந்த இப் பிரச்சினையைப்பற்றி எதிர்த்தரப்பில் சொல்லப்படுகிற குறைபாடுகளைப் பரிசீலிக்க வேண்டுமென்றும், அவர்களைக் கலந்து வழிவகைகளை வகுக்கலாம் என்றும் கூற விரும்புகிறேன். அதை விடுத்து இரு முறை கவர்னர் உரையில் "அகவிலை குறைக்கப்பட வேண்டும்" என்று எடுத்துச் சொல்லி விட்டால் விலைவாசிகள் குறைந்துவிடாது என்பதை மட்டும் பணிவோடு இந்த மன்றத்தில் எடுத்துக்கூற விரும்புகிறேன்.

இந்த அகவிலையைக் குறைப்பதற்கு, கட்டுப்படுத்துவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளாமல் நீங்கள் எத்தனைதான் திட்டங்களைத் தீட்டினாலும், அந்தத் திட்டங்களை நிறைவேற்றுவதற்காகப் பெரும் பெரும் நிபுணர்களைக் கலந்தாலோசித்தாலும், வெளிநாடுகளிலிருந்து பெருந்தொகை கடனாகவோ, தானமாகவோ தரப்பட்டாலும், எவ்வளவு அதிகமான வரிச் சுமையை இந்த நாட்டு மக்கள் மீது சுமத்

11th August 1960] [Sri C. N. Annadurai]

திலும் இந்தத் திட்டங்களுக்கு முழு வெற்றி கிடைக்காமல் போய்விடும்; நல்ல பலனைத் தராது என்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன். இந்த ஆட்சி விலைவாசிகளைக் கட்டுப்படுத்த வில்லையென்ற குற்றச்சாட்டிலிருந்து தப்பித்துக் கொள்ள முடியாது.

"சுதந்திரப் போராட்ட காலத்தில் எங்கே போயிருந்தீர்கள்?" என்று காங்கிரஸ் கட்சிக் கொரடா, ஏதோ போராட்ட காலத்தில் ஆள் சேர்க்கும் வேலை இவரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்ததைப் போலவும், இவர் தேடித் தேடிப் பார்த்த நேரத்தில் நாங்கள் யாரும் சிக்காமல் இருந்ததைப் போலவும், தளபதி பட்டத்தைத் தன்னிடம் தந்துவிட்டதைப் போலவும் பேசினார். யார் யாரோ தளபதியாகும்போது கனம் கருத்திருமன் அவர்கள் தளபதி யாவதில் தவறில்லை. உண்மையிலேயே சொல்ல விரும்பு கிறேன்—நான் இருந்த இடம் உங்களுடைய மாணிக்கவேலு பக்கத்தில்; நான் இருந்த இடம் உங்கள் ஹாஜா ஷெரிப் இருந்த இடத்தில்; நான் இருந்த இடம் உங்கள் சி. ஆர். ராமசாமி இருந்த இடத்தில்; நான் இருந்த இடம் உங்கள் ராஜா சர் முத்தையாச் செட்டியார் இருந்த இடத்தில். ஆனல் அவர்கள் எல்லாம் இன்றையதினம் உங்கள் கட்சியில் இருக்கிருர்கள் என்பதாலும், நாங்கள் எதிர்க்கட்சியில் இருக்கிறோம் என்பதாலுந்தான் பொறுப்புள்ள ஒருவர் அவ்வாறு பேசினர்.

SRI C. R. RAMASWAMI: Sir, I was never a member of the Justice Party.

SRI C. N. ANNADURAI: கனம் ராமசாமி அவர்கள் என்னுடைய வாதத்திற்கு வலுவூட்டுகிருர்கள். அப்போது அவர் காங்கிரஸ் கட்சியில் கூட இல்லை.

(Sri K. S. G. Haja Sheriff rose.)

SRI C. R. RAMASWAMI: நான் 1938-லிருந்தே காங்கிரசில் இருக்கிறேன்.

MR. SPEAKER: If any hon. Member wants clarification I will give a chance to him at the end of the speech of the hon. Member Sri Annadurai. So let hon. Members do not disturb him please.

SRI C. N. ANNADURAI: அவர்களெல்லாம் இன்றைய தினம் ஆளும் கட்சியினுடைய திட்டங்களை ஆதரிக்கிருர்கள், அல்லது அதிலே சில பேர் தங்களுடைய மனதிலே இருக்கும் குமுறலை, அரசியல் நாகரீகத்திற்காகவோ, கட்சிக் கட்டுப்பாட்டுக் காகவோ, அல்லது சலுகைகள் கிடைக்காமல் போய்விடும் என்று அஞ்சுவதினலோ, வெளிப்படுத்தாமலிருக்கிருர்கள் என்ற ஒரே காரணத்திற்காக அவர்களை அணைத்துக்கொள்ளத் தவருத காங்கிரஸ் கட்சிக் கொரடா, எதிர்த் தரப்பிலுள்ள எங்களைப் பார்த்து, "நீங்கள் அப்பொழுது என்ன செய்தீர்கள்?" என்று கேட்டு, அவர்களுக்கு இருக்கும் இராமாயண ஞானத்தை நேற்றையதினம் இங்கே காட்டிக்கொண்டு அங்கதனைப்பற்றியும், இராவணனைப்பற்றியும் சொன்னர்கள்.

[Sri C. N. Annadurai] [11th August 1960

அங்கதன் இராவணனைப் பார்த்துக் கேட்டதற்கு அப்பொழுது இராவணன் என்ன பதில் சொன்னான் என்பதை, இராமாயணத்தை அவ்வளவு படிக்காத காரணத்தால் எனக்குத் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால், எண்ணிப் பார்க்கும் நேரத்தில், இராவணன் என்ன பதில் சொல்லி இருந்திருப்பான் என்று கருதுகிறேன் என்றால், "ஏடா, மூடா, தந்தைக்குப் பக்கத்தில் நின்றுகொண்டு நீ இவ்வளவு தைரியமாகப் பேச வந்துவிட்டாயாடா?" என்று ஒரு சமயம் இராவணன் கேட்டிருக்கக்கூடும். அப்பொழுது எழுதப் படாவிட்டாலும் இனி எழுதி இணைக்கப்படும் என்று இராமாயண நிபுணருக்கு நான் எடுத்துச்சொல்ல விரும்புகிறேன். ஏனென்றால், பழைய புராணங்களிலிருந்து ஆதாரங்கள் எடுத்துக்கொண்டு அலசுவது என்றால் சபையிலே நேரம் போதாது; நேரம் இருக்குமானால், எழுதியவருக்கே நடுக்கம் எடுக்கும் அளவுக்கு, அதற்கு உட்பொருள் எடுத்து விளக்க அனைவருக்கும் தெரியும். ஆனால், அதற்கு வேறு இடங்கள் இருக்கின்றன என்ற காரணத்தால் அவைகளை எடுத்துச்சொல்லவில்லையே தவிர, கனம் கருத்திருமன் சொல்வது போல, ஒவ்வொரு இடத்திற்கும் அங்கதன், வாலி, சுக்கிரீவன் என்று சொல்லி வால் படைத்த மனிதர்களைச் சபை முன்னால் இழுத்துவந்து, தனது வாதத்திற்குத் துணை தேடுவதைப் பார்த்து நான் மிக்க பரிதாபப்படுகிறேன்.

சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபடாதவர்கள் இருந்தாலும் அவர்களையும் சேர்த்து அணைத்துக்கொண்டு ஆட்சி நடத்துவதற்குத்தான் 'குடியரசு' என்று பெயர். இது உண்மையிலேயே புரட்சிக்குப் பிறகு ஏற்படுத்தப்பட்ட சர்க்காராயிருந்தால், அந்தப் புரட்சிக்கு எதிரிடையாக இருந்தவர்கள் ஒன்று சுட்டுத் தள்ளப் பட்டிருப்பார்கள்; அல்லது நாட்டை விட்டு விரட்டியடிக்கப் பட்டிருப்பார்கள்; அல்லது நாட்டைவிட்டு வெளியேற அனுமதிக்கப்பட்டிருப்பார்கள்; அல்லது அவர்கள் என்ன செய்திருப்பார்கள் என்றால், பர்மாவில் நடந்ததைப்போல, அமைச்சர்கள் கூடியிருக்கும் இடமாகப் பார்த்து, உள்ளுக்குள் தெரியாமல் இருந்து கொண்டு, கையிலே துப்பாக்கியை வைத்துக்கொண்டு, ஒவ்வொரு அமைச்சராகத் தேடிப் பார்த்து, அவர்கள் செய்த அக்கிரமங்களைச் சொல்லிச் சொல்லி, சுட்டுத்தள்ளியிருப்பார்கள். நாங்கள் அப்படிப்பட்ட முறைக்குச் செல்லவில்லை; செல்லவும் மாட்டோம்; நீங்களும் அப்படிப்பட்ட முறைக்குப் போகமாட்டீர்கள். ஏனென்றால், நாம் அனைவரும் ஜனநாயகத்தை ஒத்துக்கொண்டு இந்த மன்றத்திலே அமர்ந்திருக்கிறோம். ஆகையால், 'நாங்கள் என்ன செய்திருக்கமுடியும், தெரியுமா' என்று பேசிக்கொண்டிருப்பது உண்மைப் பிரச்னைக்குப் பரிகாரம் ஆகாது; ஜனநாயகத்தை வளர்ப்பதும் ஆகாது. ஆகையால், அகவிலையைக் குறைக்க வழி என்ன என்று எடுத்துச்சொல்லப்படுகிற நேரத்தில், 'அதுபற்றி கூடிக் கலந்து பேசுவோம்' என்று ஒரே ஒரு வரியில் பதில் சொல்வது ஆட்சியாளருக்குக் கண்ணியமே தவிர, ஆட்சியாளர் பொறுப்பை உணர்ந்திருக்கிறார்கள் என்று எடுத்துக் காட்டுமே தவிர, "நீங்கள் எப்படிபட்டவர்கள் தெரியுமா?" என்று உங்கள் வீர தீரத்தைச் சொல்லி, வாதாடிக்கொண்டிருப்பதானது மாலைநேரத்தில் எங்கோ பேச வேண்டிய பேச்சை இங்கே வந்து பேசுகிறார்கள் என்ற

11th August 1960] [Sri C. N. Annadurai]

நிலையை ஏற்படுத்திவிடக்கூடாது. ஆகையால், அந்த முறையிலே இருப்பதால், கவர்னர் தம்முடைய பேருரையில் எல்லாக் கட்சிகளும் ஒத்துழைக்கவேண்டும், நல்லபடி ஒத்துழைத்துப் பணியாற்றவேண்டுமென்று கேட்டுக்கொண்டிருப்பது ஆட்சியாளர்களாலேயே நிறைவேற்றப்படவில்லை என்பதை நான் வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இரண்டாவது, கவர்னர் தம்முடைய பேருரையில் குறிப்பிட்டிருப்பது, இந்த நாட்டினுடைய மொழிப் பிரச்னையைப்பற்றி. இந்த மொழிப் பிரச்னையைப்பற்றி என்னுடைய கழகத்தைச் சார்ந்த உறுப்பினர்கள் இந்த இடத்திலே மிக விளக்கமாக எடுத்துப்பேசியிருக்கிறார்கள். அதைப்பற்றிக்கூட அனுதாபத்தோடு கவனிக்க அவர்கள் தவறிப்போயிருப்பதைப் பார்த்து நான் வருத்தப்படுகிறேன். அதைப்பற்றி பேசப்பட்ட நேரத்தில், கனம் சர்தார் வேதரத்னம் அவர்கள் எடுத்துச்சொன்ன கருத்துக்களை நான் பெருவாக வரவேற்கிறேன். 'வரவேற்கிறேன்' என்றால், ஆதரிக்கிறேன் என்ற முறையில் அல்ல; உள்ளத்தைத் திறந்து பேசியிருப்பதை நான் வரவேற்கிறேன். அப்படிப் பட்டவர்களை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. அப்படிப் பட்டவர் சொல்கிற வாதங்கள் சரியா தவறா என்பது வேறு விஷயம். அதை ஏற்றுக்கொள்வதா, வேண்டாமா என்றால், அதுவும் வேறு விஷயம். என்றாலும், தங்கள் உள்ளத்திலே இருப்பதை வெளிப்படையாக எடுத்துப் பேசக் காண்கிறேன். அப்படிப்பட்டவர்கள் மறைமுகமாக எந்தக் காரியத்தையும் செய்யாமல் நேரடியாகச் செய்கின்றார்கள். அந்த வகையிலே அல்லாமல், மொழியைப் பற்றி நாமெல்லோரும் கலந்து, ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்பதிலே முயற்சி எடுத்துக்கொண்டு, சென்னை துரைத்தனத்தைச் சேர்ந்த அமைச்சர்களும், ஆளும் கட்சி அங்கத்தினர்களும் மொழிப் பிரச்னைக்கு யார் யாராலோ என்ன காரணத்தாலோ ஏற்பட்டிருந்த பெரிய நெருக்கடி தவிர்க்கப்பட்டு, உலகம் பூராவும் கூர்ந்து கவனித்து, 'ஐயோ! இப்படியா நடந்தது!' என்று சேத்தக்க ஒரு விபரீதமான நிலைமை தவிர்க்கப்பட்டு, 'கறுப்புக் கொடி காட்டுவது' என்ற நிகழ்ச்சி கைவிடப்பட்டது. அதைப்பற்றி ஒரு வார்த்தை பாராட்டிப் பேச மனம் இல்லாவிட்டாலும், அப்படிப் பாராட்டிப் பேசினால், அதனால் எங்களுடைய கழகத்திற்கு வலு வந்துவிடும் என்ற கிலி பிடித்துக் கொண்டதாலோ, என்னவோ, நேற்றையதினம் காங்கிரஸ் கட்சிக் கொரடா சொன்னபோது, 'சரணாகதி அடைந்துவிட்டார்கள்' என்று சொன்னது உண்மையிலேயே பிரச்னையிலுள்ள சிக்கலை மேலும் அதிகரிக்கச் செய்வதாகும்; அதைத்தான் அவர்கள் விரும்புகிறார்கள். மனிதர்கள் உணர்ச்சிவசப்பட்டவர்கள்—அரசியல்வாதிகள் உட்பட. உணர்ச்சிவசப்பட்ட மனிதர்களை, உணர்ச்சிவசப்பட்ட அரசியல்வாதிகளை, ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள், அந்த உணர்ச்சிகள் நியாயமான ஆதாரத்தின் பேரில் ஏற்பட்டதா என்று ஆராய்ந்து பார்த்து, அந்த உணர்ச்சிகளுக்கு மதிப்பு அளிக்கவேண்டுமே தவிர, எரிகிற நெருப்பில் எண்ணெயை வார்ப்பதுபோல, 'நீங்கள் சரணாகதி அடைந்துவிட்டீர்கள்' என்று காங்கிரஸ் கட்சிக் கொரடா பேசியிருப்பது

[Sri C. N. Annadurai] [11th August 1960

மேலே இருக்கும் பெருந் தலைவர்கள் கையாண்ட ராஜதந்திர முறைக்கு முற்றிலும் முரணாகும். அதுதான் இவர்களுக்கும் அவர்களுக்கும் உள்ள வித்தியாசமோ என்றுகூட நான் அஞ்சுகிறேன். உண்மையிலேயே, 'சரணாகதி அடைந்துவிட்டோம்' என்று எங்களைப் பார்த்துப் பேசி, கீர்த்தியோ, கிதாப்போ அவர் கட்சிக்குத் தேடிக்கொண்டார் என்றால், உண்மையிலேயே நம்முடைய நிதி அமைச்சர் பத்திரிகை நிருபர்களை வரவழைத்து, நிலைமையையெல்லாம் எடுத்துச்சொன்ன அந்த அறிக்கையைப் படிக்கின்ற கனம் கருத்திருமன் போன்றவர்கள் 'நிதி அமைச்சர் சரணாகதி அடைந்துவிட்டார்' என்று தப்பாகக் கருதிக்கொண்டிருக்கக்கூடும் என்பதற்காக நான் எடுத்துச் சொன்னேன். இந்தக் கழகக்காரர்கள், அல்லது இந்தி விஷயத்தில் மாறுபட்ட கருத்துக் கொண்டவர்களைக் கலந்து பேசுவதற்குக் கனிவோடு அழைக்கிறேன் என்று சொன்னார்கள், அமைச்சர் அவர்கள். அவர் ஒரே ஒரு வரியிலும் பதிலளித்திருக்க முடியும். அதாவது, 'அவர்கள் போகிற பாதை தவறானது; சட்டம் தன்னுடைய வேலையைச் செய்யும்' என்று சொல்லியிருக்கக்கூடும். அதுவும் இப்பொழுது அவர்கள் சொல்ல முடியும். சட்டத்தை காப்பற்ற வேண்டிய பெரும் பொறுப்பும், போலீஸ் படையும் அவர்களிடத்தில் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. ஆனால், கல்வியமைச்சராக இருப்பதால், பல பாடங்கள் அவர்கள் படித்திருப்பதால், அவர்கள் பத்திரிகை நிருபர்களை அழைத்து இந்தப் பிரச்னையை விளக்கினார். நான் காங்கிரஸ் கட்சிக் கொறடாவைக் கேட்கிறேன்—'சரணாகதி அடைந்தாரா, நிதி அமைச்சர்?' என்று தாழ்மையாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். நிதி அமைச்சர் சரணாகதி அடைந்துவிட்டார் என்று பொருளா? அல்லது அவருக்கு இல்லாத அளவுக்கு அந்தக் கட்சியினுடைய கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு தங்களுக்குத்தான் இருக்கிறது என்று மற்றவர்கள் ஏன் முந்திக்கொள்ளவேண்டும் என்று என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

இப்போதும் சொல்கிறேன்—அந்தப்பிரச்னையிலுள்ள சிக்கலைத் தீர்ப்பதற்கு ஒரு முடிச்சு அவிழ்க்கப்பட்டிருக்கிறதே தவிர, பரிபூரணமாக சிக்கல் தீர்க்கப்படவில்லை. இன்னும், கனம் நிதி அமைச்சர் தங்களுடைய அறிக்கையில் கொடுத்திருக்கிறபடி, குடியரசுத் தலைவர் ஆணைக்கும், பண்டித நேருவின் வாக்குறுதிக்கும் ஒன்றுக்கொன்று முரண்பாடு இருக்கிறதா, இல்லையா என்பதுகூட இன்னும் அவர்கள் கொடுத்திருக்கிற அபிப்பிராயமாக இருக்கிறதே தவிர, அறுதியிட்டு, உறுதியாக, உண்டு இல்லை என்று சொல்லக்கூடிய அளவுக்கு நிலைமை இல்லை. இதை நன்றாக உணர்ந்த காரணத்தால், நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள், 'நான் அதைத் துருவித் துருவிப் படித்துப் பார்த்தேன்; ஒரு முரண்பாடும் தெரியவில்லை; என்னுடைய தீர்ப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது இல்லை; இதை மற்றவர்கள் மீது திணிக்கக் கூடாது என்ற காரணத்தால் இரண்டு உயர்தர மேலதிகாரிகளைப் பார்க்கச் சொன்னேன்; அவர்களும் நான் சொன்ன கருத்தை ஆதரித்தார்கள்; அதுவும் போதாது என்று கருதினால், இன்னும் கருத்து வேற்றுமை இருக்குமானால், பொதுவான நிபுணர்

11th August 1960] [Sri C. N. Annadurai]

களிடத்தில் சென்று கருத்தைக் கேட்கலாம் வாருங்கள்' என்று எடுத்துச்சொன்ன கனிவை, ராஜதந்திரத்தை நான் பெரிதும் போற்றுகிறேன். அவர்கள் மேல்நாட்டுக்குப் போவதற்கு முன்னால் ராஜதந்திர உணர்வு அவர்களுக்கு வந்திருப்பது பற்றி நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : ராஜதந்திரம் மேல் நாட்டிலேதான் இருக்கிறதா ? நம்மிடத்தில் இல்லையா ?

SRI C. N. ANNADURAI : நம்முடைய கனம் தொழில் அமைச்சர் அவர்கள், 'மேல் நாடுகளுக்குப் போவதற்கு முன்பே' என்று நான் சொன்னது மேல்நாட்டு ராஜதந்திரத்தைப் பாராட்ட என்று எடுத்துக் கொண்டுவிட்டார். என்னுடைய அடுத்த வாக்கியத்தைத் தொழில் அமைச்சர் அவர்கள் பொறுமையோடு கேட்டிருந்தால் இப்பொழுது குறுக்கிட்டிருக்கமாட்டார். மேல்நாடு போவதற்கு முன்பே இந்த ராஜதந்திர உணர்ச்சி அவர்களுக்கு வந்திருப்பதை நான் பாராட்டுகிறேன், என்று சொன்ன நேரத்தில், மேல்நாட்டிலிருக்கும் ராஜதந்திர முறைப்படி எதிர்ப்புகளைச் சமாளிக்க எதையாவது சொல்லிவிடக்கூடிய அந்த ராஜதந்திரத்தை அங்கிருந்து கற்றுக்கொண்டு வரவேண்டாம் என்றுதான் அவர்களுக்கு எடுத்துச்சொல்ல விரும்புகிறேன்.

எதிர்ப்பாளர்கள் எதை உண்மையாக, மனதார நம்பிச் சொல்கிறார்களோ, அதை ஆராய்ந்து பார்த்து, அன்போடு, அனுசரணையோடு கவனிப்பதுதான் உண்மையில் ராஜதந்திரமாகும். அந்த முறையில் அவர்களுடைய அறிக்கை அமைந்திருந்தது கருதி எங்களுடைய உள்ளமே கொஞ்சம் ஆடியது. ஆனால், காங்கிரஸ் கட்சிக் கொறடா அவர்கள் நேற்று பேசிய பேச்சினால் நாங்கள் ஆடிவிட்டிருப்போம் என்று அவர் கருதினால், அது சரியல்ல; அது எங்களைப் பலப்படுத்திற்று. நிதி அமைச்சர் போன்றவர்கள் கொடுக்கும் அறிக்கைகள் தான், கனிவான அறிக்கைதான் ஓரளவுக்கு எங்கள் உள்ளத்தை ஆட வைக்கிறது. மனித சுபாவம், யார் அணுகி வருகிறார்களோ அவர்களை அணுகிச் செல்லவேண்டும் என்ற எண்ணத்தை ஏற்படுத்துமே தவிர, எழுந்து நின்று, 'ஆகா' என்று கூச்சல் போட்டால், அதற்குப் பதிலாக 'ஓகோ' என்று கூச்சலிடத்தான் மற்றவர்களுக்குத் தோன்றும். இதிலே குரல் வலிமையைக் காட்டுவதிலே ஒரு லாபமும் இல்லை. ஆகையால், இனி நம்முடைய காங்கிரஸ் கட்சிக் கொறடா அவர்கள், இந்த மொழிப் பிரச்சினையைப் பற்றிப் பேசும்போது, யார் சரணாகதி அடைந்தார்கள் என்று ஆராயத் தேவையில்லை. இப்பொழுது திட்டவட்டமாக சொல்லுகிறேன். இந்தப் பிரச்னைக்கு நல்ல முற்றுப்புள்ளி 10-30 a.m. வைக்கத்தக்க அளவுக்கு ஒரு முடிவுகட்டப்படவில்லை. இன்றைக்கு குடியரசுத் தலைவர் ஆணைக்கும் நமது பிரதம மந்திரி அவர்களின் வாக்குறுதிக்கும் முரண்பாடு இருக்கிறது என்று கருதுபவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். அமைச்சர் அவர்களுடைய அறிக்கையை நாம் கூர்ந்து கவனித்துப்பார்த்தால் அவர் இந்தப் பிரச்னையை விளக்குகின்ற நேரத்தில், அவர் ஒரு கருத்தை விளக்கு

[Sri C. N. Annadurai] [11th August 1960

வதற்கு என்னென்ன பதங்களை கையாண்டிருக்கிறார்கள் என்பது தெரியும். Contrary to; not in consonance with; militating against என்ற ஆங்கிலப் பதங்களை ஒவ்வொரு இடத்திலும் வைத்திருப்பது அவருக்கு இதில் ஏற்படுகின்ற தடுமாற்றத்தை வெளிக்காட்டியிருக்கிறது. அத்தனையும் ஒத்துக் கொள்ளப்படவில்லை. குடியரசுத் தலைவர் ஆணை பிரதம மந்திரியினுடைய வாக்குறுதியை உள்ளடக்கியதாக இல்லை என்ற முறையில் இருக்கிறது. It is complete. நிதி அமைச்சர் அவர்கள் ஒரு வழக்கறிஞர். அவர்களுக்குத் தெரியும். Commission is an offence. Omission is also an offence. குடியரசுத் தலைவர் ஆணையில் பிரதம மந்திரியின் வாக்குறுதி சேர்க்கப்படாமல் இருப்பதும் குற்றத்தின்பாற்பட்டது தான். அவர்களுக்கு உள்ளூர இருக்கும் எண்ணத்தைத் தெரிவிக்கும் வகையில் அதைத் திருத்திக்கொள்வதற்கு modify செய்வதற்கு தேவையானால் நான் அதற்குத் தயாராக இருக்கிறேன், வாதாடுகிறேன், போராடுகிறேன், இந்த ஆட்சியாளர்களையே பணிய வைக்கிறேன் என்று சொல்லக்கூடிய அளவுக்கு பேசியிருக்கிறார்கள். இதைப் படித்த நேரத்தில் ஆளும் கட்சியினருக்கு ஒரு நல்ல மனமாற்றம் ஏற்பட்டிருக்கிறது என்ற ஒரு எண்ணத்தோடு உள்ளே வந்திருக்கிறோம். அந்த நேரத்தில் காங்கிரஸ் கட்சி கொரடா அங்கதன் சொன்னதாக உள்ள பாட்டை பாடுகிறார்கள். அதனால் ஆளும் கட்சியினருக்கு இந்த விஷயத்திலே எந்த வகையான கருத்து இருக்கிறது என்று திட்டவட்டமாக தெரிந்துகொள்ளக்கூடிய அவசியம் இருக்கிறது என்று எங்களுக்கு தோன்றுகிறது.

மொழிப் பிரச்னையில் எல்லா கட்சியினர்களும் ஒப்பம் அளித்து மத்திய சர்க்காருக்கு அனுப்பியிருக்கிறார்கள் என்ற கருத்தை நிதி அமைச்சர் அவர்கள் அடிக்கடி உள்ளேயும், வெளியிலும் வலியுறுத்திக்கொண்டு வருகிறார்கள். எல்லாக் கட்சிகளையும் கலந்து ஆலோசிக்கப்பட்டது உண்மை. எங்களுடைய கட்சியின் சார்பில் வந்திருந்த நேரத்தில் ஆங்கிலம் 1965-க்குப் பிறகும் நீடித்து, தொடர்ந்து காலகேடு இல்லாமல் இருந்துவரவேண்டும் என்ற ஒரு வார்த்தைக்குத்தான் நான் ஒப்பம் அளித்தேன் என்று இந்த மன்றத்தில் பல முறை நான் எடுத்துச் சொல்லி, கனம் நிதி அமைச்சர் ஏற்றுக்கொண்டிருக்கிறார். அந்த அறிக்கை இங்கே விவாதத்திற்கு வந்த நேரத்தில் எங்களுடைய கட்சி சார்பிலே, நாங்கள் எந்த மக்களுக்கு பிரதிநிதிகள் என்று உண்மையாக நம்பிக் கொண்டிருக்கிறார்களோ அந்த மக்கள் சார்பிலே, எந்த மக்கள் எங்களுடைய பிரதிநிதித்துவத்தை ஏற்றுக்கொள்ளவில்லையென்றாலும், நாங்கள் சொல்லுகின்ற கருத்தை நாளாவட்டத்தில் ஏற்றுக்கொள்ளுவார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறதோ அந்த மக்கள் சார்பில் பல திருத்தங்கள் அந்த அறிக்கைக்கு கொடுக்கப்பட்டிருக்கின்றன. கனம் அன்பழகன் அவர்கள் இந்திய அரசியல் சட்டத்திற்கு ஒரு திருத்தம் கொண்டுவரவேண்டும், அந்தத் திருத்தம் நிறைவேறுதவரை இந்த மொழிப் பிரச்னைக்கு நிரந்தரமான பரிகாரம் கிடைக்காது என்பதாக ஒரு திருத்தம் கொடுத்து, அது விவாதிக்கப்பட்டு, கனம் நிதி அமைச்சர் அவர்கள் 'இப்படிப்பட்ட மாறுபாட்டை இப்பொழுது எழுப்பாதீர்கள்'

11th August 1960] [Sri C. N. Annadurai]

என்று கேட்டுக்கொண்டும் கூட, அவர்கள் வார்த்தைக்கு மதிப்பு அளிக்கவேண்டிய பெரும் பொறுப்பு எங்களுக்கு இருந்தாலும் கூட, அவர்களுடைய கனிவு உரை எங்களுக்கு மகிழ்ச்சி அளித்தாலும் கூட, எங்களுடைய கொள்கை நட்பிற்கும் மேற்பட்டது என்ற காரணத்தினால், எங்களுடைய கொள்கை கட்சிக்காக மட்டும் அல்ல, நாட்டிற்காகவும் இருக்கிறது என்ற காரணத்தினால், அதுபற்றி வோட்டு எடுக்கவேண்டுமென்று நாங்கள் வலியுறுத்தி, இந்த மன்றத்தில் வாக்கெடுப்பு நடத்தப்பட்டது. எங்கள் தரப்பில் உள்ளவர்கள் இந்திய அரசியல் சட்டத்திற்கு திருத்தம் வேண்டும் என்பதற்கு வாக்களித்து, எதிர் தரப்பில் உள்ளவர்கள் வேறு பல கட்சியைச் சேர்ந்தவர்கள் ஒன்றாகச் சேர்ந்து—எனக்கு கவனம் இருக்கிறது—ஏறக்குறைய 72 உறுப்பினர்கள் அதற்கு எதிரிடையாக வாக்களித்து அந்தத் திருத்தத்தை தோற்கடித்திருக்கிறார்கள். அதுபோலவே, கல்விக்கூடங்களிலும் 3 மொழிகள் படிக்கப்பட வேண்டும் என்ற முறையை மாற்றி இரண்டு மொழிகள் இருந்தால் போதும், தமிழும் ஆங்கிலமும் போதும் என்று ஆத்தூர் தொகுதி உறுப்பினர் திரு. எம். பி. சுப்பிரமணியம் அவர்கள் திருத்தம் கொடுத்து, அதுவும் தோற்கடிக்கப்பட்டிருக்கிறது. திருவண்ணாமலை அங்கத்தினர் திரு. ப. உ. ஷண்முகம் சுப்ரீம் கோர்ட்டில் கடைசி வரையில் ஆங்கிலம் தொடர்ந்து இருக்கவேண்டும் என்று ஒரு திருத்தம் கொண்டுவந்து, அதுவும் தோற்கடிக்கப்பட்டிருக்கிறது. என்னுடைய நண்பர் கோவிந்தசுவாமி அவர்கள் பாராளுமன்றத்தில் எந்த மொழியில் பேசினாலும், உடனுக்குடன் அதை வேறு எல்லா மொழிகளிலும் மொழிபெயர்ப்புச் செய்து அளித்தாக வேண்டுமென்ற திருத்தத்தைக் கொடுத்து, அதுவும் தோற்கடிக்கப்பட்டிருக்கிறது. என்னுடைய கரத்தில் இருக்கிற, எல்லா உறுப்பினர்களுக்கும் கொடுக்கப்பட்டிருக்கிற 'Language Problem of India-III Memorandum' மூன்றாவது அறிக்கையில்—நான் கனம் நிதி அமைச்சர் அவர்களைக் கேட்கிறேன். இதிலே அதுபற்றி குறிப்புகள் இடம் பெறவேண்டாமா? அதிலே இடம் பெறச் செய்வது ஜனநாயக மரபு அல்லவா? அந்த அறிக்கையை படித்துப் பார்த்தால் சென்னை துரைத்தனத்தார் கொடுத்திருக்கிற கருத்துக்களை எல்லாக் கட்சிகளும் ஏற்றுக்கொண்டிருக்கின்றன என்று தெளிவுபட எழுதப்பட்டிருக்கிறதே தவிர, அடிப்படையை ஏற்றுக்கொண்டாலும் கூட, அதிலே மிக முக்கியமான பிரச்னைகளில் நாங்கள் மாறுபட்டிருக்கிறோம் என்பதைக் காட்ட அதுபற்றி எங்களால் இங்கே திருத்தங்கள் கொடுக்கப்பட்டு அவைகளெல்லாம் தோற்கடிக்கப்பட்டிருக்கின்றன என்பதாக ஒரு 'அபெண்டிக்ஸ்' இணைப்பு இதிலே சேர்த்திருக்க வேண்டுமா? இப்படி நாங்கள் எல்லோரும் மொழிப் பிரச்னையிலே ஒன்று பட்டிருக்கிறோம் என்று எடுத்துக் காட்டுவதன் மூலம்—நான் அறிந்து கொள்ள விரும்புகிறேன். நீங்கள் எதற்காக இந்த இருட்டடிப்பு செய்ய விரும்புகிறீர்கள்? அதனால் எங்களுக்கு பெருமை தேடிக்கொள்ளவேண்டும் என்று நாங்கள் உங்களைக் கேட்கவில்லை. எங்களுக்கு நாங்களே பெருமை கொள்ள எங்களாலேயே முடியும். எங்களுக்கு நாங்களே பெருமை தேடிக்கொள்ள முடியாவிட்டால் அப்பொழுது உங்களிடம் வரலாம். ஓரளவுக்கு நாட்டு மக்கள் எங்களிடம் வைக்கவேண்டிய மதிப்பை வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று எங்களுக்கு

[Sri C. N. Annadurai] [11th August 1960

குறைவற்ற நம்பிக்கை இருக்கிறது. ஆகையால் என் சேர்க்கவில்லை என்று கேட்கிறேன். என்னுடைய கட்சிக்கு தொப்பு தேடிக் கொள்ளக் கேட்கவில்லை. வடக்கே உள்ளவர்கள் மொழி விஷயத்திலே இங்கு இருக்கிற கட்சிகளுக்குள் ஒரு கட்சி இவ்வளவு தீவிரமாக இருக்கிறது என்பதை உணர்ந்தால்தான், துரைத்தனத்தார் எடுத்துச் சொல்லுகிற கருத்துக்களை மிகவும் கவனித்துக் கேட்டு, உண்மையிலேயே அதற்கு ஒப்ப காரியங்களைச் செய்வார்கள் என்ற காரணத்தினுல்தான், இதை இணைத்துக்கொள்ளவேண்டும் என்று பல முறை இந்த மன்றத்தில் எடுத்துச் சொல்லியிருக்கிறேன்.

ஒரு மாறுபாட்டைக் காண்கிறேன். அதை வெளிப்படையாகச் சொல்லுவதினுல் நிதி அமைச்சர் அவர்கள் வருத்தப்படாமல் இருக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். மற்ற மாநிலங்களில் அவர்கள் தங்களுக்கு கிடைத்தது போதாது, தங்களுக்கு ஏற்பட்ட முன்னேற்றம் போதாது, தங்களை மத்திய சர்க்கார் சரிவர நடத்தவில்லை என்று எடுத்துச்சொல்லி காரியங்களை சாதித்துக்கொள்ளுகிருர்கள். ஆனல் இந்த மாநிலத்தில் உள்ளவர்கள் நான் முன்பு ஒரு முறை இந்த மன்றத்தில் எடுத்துச் சொன்னதுபோல, மத்திய சர்க்காராலே குத்தகைக்கு எடுக்கப்பட்டவர்கள் போல, வாடகைக்கு அமர்த்தப்பட்டவர்கள் போல, அவர்களுக்கு ஏஜெண்டாக நியமிக்கப்பட்டவர்கள் போல 'இங்கு எல்லாம் நிறைவேற்றப்பட்டு விட்டன' என்று எடுத்துச்சொல்லுவதன் மூலம் மத்திய சர்க்கார் நம்முடைய மாநில துரைத்தனத்தாருடைய திறமையை பாராட்டவேண்டும் என்று கருதலாமே தவிர, கிடைக்கத்தக்க சலுகைகள் நமக்கு கிடைக்காமல் போய் விட அவர்கள் செய்திருக்கிருர்கள். நான் நிதி அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். இந்த மாநிலத்தில் இருக்கிற உயர்நீதி மன்றத்தில் தமிழ், ஆங்கிலம் என்ற இரண்டிற்குமிடையே எது இருக்கலாம் என்ற பிரச்னை தீர்க்கப்படவேண்டுமே தவிர, ஆங்கிலம் அகற்றப்பட்டால் தமிழ்தான் இருக்கவேண்டும் என்று அறுதியிட்டு உறுதியாக நிதி அமைச்சர் அவர்கள் கூறினுர்கள். அவர்கள் போயிருந்த ஸ்ரீநகர் மகாநாட்டில், இந்திய துணைக்கண்டத்தின் பல்வேறு மாநிலங்களின் சட்ட அமைச்சர்களை உடன் வைத்துக்கொண்டு, டெல்லி அரசில் இருக்கிற சட்ட அமைச்சர் . . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : வங்காளத்துக்காரர்.

SRI C. N. ANNADURAI : வங்காளத்துக்காரர் என்று சொல்லுகிருர் அமைச்சர் அவர்கள். அதிலே இருக்கிற அர்த்தம் எனக்குத் தெரிகிறது. 'வங்காளத்துக்காரர் உங்கள் பக்கத்தில் இருக்கிருர்' என்று எண்ணுகிருர். எங்கள் பக்கத்தில் இல்லாத நீங்களே இருக்கும்பொழுது, வங்காளத்தில் ஒருவர், இருவர் அப்படி இருக்கிருர் என்பதில் ஆச்சரியப்படுவதற்கில்லை. நமது நிதி அமைச்சர் நெஞ்சுரம் படைத்தவர், நிதி அமைச்சர் வாதத் திறமை படைத்தவர், எதிர்கட்சியினரை துவம்சம் செய்வதற்கே அவதாரம் எடுத்திருப்பவர் உடனே எழுந்து நின்று 'அப்படிச் சொல்லாதீர்கள். நான் எங்களுடைய மக்களுக்கு வாக்குறுதி

11th August 1960] [Sri C. N. Annadurai]

தந்திருக்கிறேன். எங்களுடைய மாநிலத்தில் உயர்நீதி மன்றத்தில் தமிழ்தான் ஆட்சி மொழியாக இருக்கும்' என்று சொல்லியிருக்க வேண்டும். சட்டக் கல்லூரியில் பேசுகிறபோது மாணவர்கள் மகிழ்ந்திருக்கிறார்கள். பேராசிரியர்கள் பூரித்திருக்கிறார்கள் அல்லவா? மற்ற மாநிலங்களில் உள்ளவர்களைக் காட்டிலும் தாய் மொழிப் பற்று தனக்கு இருக்கிறது என்று சொல்லியிருக்கிறார்கள். "எப்பொழுதும் என்னைக் கண்டித்துப் பேசுகிற அண்ணாத்துரை கூட, 'இந்த விஷயத்திலே நிதி அமைச்சர் அவர்களை பாராட்டு கிறேன்' என்று சொல்லியிருக்கிறார்" என்று கூறியிருக்கிறார்கள். இவை அத்தனையும் பாழ்படத்தக்க வகையிலே . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே ஒரு கஷ்டம் என்னவென்றால், ஒவ்வொருவரும் அவரவருடைய கருத்தைச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அண்ணாத்துரை அவர்கள் அரசியல் சட்டத்தைப் பார்ப்பார்களேயானால், அதிலே ஆங்கிலம் வைத்துக்கொள்ளுவதா, இந்தி வைத்துக்கொள்ளுவதா அல்லது தமிழ் வைத்துக்கொள்ளுவதா—உயர் நீதி மன்றத்தில்—என்று முடிவு செய்யவேண்டியது இந்தச் சட்டசபை என்பது தெரியும். ஆகையினால் வேறு என்ன கருத்து வைத்திருந்தாலும் அவர்கள் சொல்லுவதற்கு உரிமை இருக்கிறது. மறுத்துச் சொல்லவேண்டுமென்று சொல்கிறார். மறுத்துச் சொல்ல வேண்டிய இடத்தில் சொல்லுவேன் யாரோ ஏதேதோ சொல்லு கிறார்கள் என்று. நமக்கு உடனே கஷ்டம் வந்துவிடும் என்று நினைக்கவேண்டியதில்லை. அரசியல் சட்டத்தைப் பார்த்து யாருக்கு அதிகாரம் இருக்கிறது என்பதை புரிந்து கொண்டிருந் தால், ஒருவர் சொல்லுவதைப் பார்த்து, இம்மாதிரி உடனே ஆபத்து வந்துவிட்டது என்று குதிக்கமாட்டார்கள்.

SRI C. N. ANNADURAI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் இப்படிக் குதிக்கவேண்டாம் என்று சொல்லத்தக்க உணர்ச்சி அவர்களுக்கு இப்பொழுது வந்தது, அந்த உணர்ச்சி அவர் களுக்கு அங்கே வரவில்லையே என்று வருத்தப்படுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அங்கு நீங்கள் இருக்க வில்லை.

SRI C. N. ANNADURAI : நான் அங்கே இருப்பதற்கு சந்தர்ப்பம் கிடைத்திருந்தால், அப்படிப் பேசுவதை அனுமதித் திருக்க மாட்டேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அதுதான் உங்களுக்கும் எனக்கும் வித்தியாசம்.

SRI C. N. ANNADURAI : எனக்கும் அவர்களுக்கும் இருக்கிற வித்தியாசம் மட்டுமல்ல, இடத்தினுடைய வித்தியாசமும் அப்படித்தான். நான் நிதி அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அவர்கள் அப்படி மறுத்துச் சொல்லி இருப்பார்களேயானால், இந்தியை எல்லா இடத்திலும் புகுத்திவிட எண்ணம் கொண்டு வந்தவர்களுக்கு ஒரு எச்சரிக்கையாக இருந் திருக்கும். அவர்கள் அடக்க உணர்ச்சி பெற்றிருப்பார்கள்.

[Sri C. N. Annadurai] [11th August 1960

இன்று பார்ப்பது, நாம் மேலும் மேலும் அடக்க உணர்ச்சியோடு இருப்பதினால், அவர்கள் எந்த அளவுக்கு இந்தி வெறி தலைவிறித்து ஆடுவதற்கு இடம் அளிக்கிறார்கள் என்பதை கூர்ந்து கவனிக்க வேண்டும் என்று நான் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

அரசியல் சட்டத்தைப் பார்க்கவேண்டுமானால் அதை நன்கு புரிந்துகொண்டிருக்கவேண்டும். கனம் நிதி அமைச்சரவர்கள், ஆசிரியர்போல் ஆசிரியர் வேலை பார்ப்பதில் குற்றம் ஒன்றுமில்லை—படித்ததில், புரிந்து கொண்டிருப்பதில், குடியரசுத் தலைவர், மொழிபற்றி அறிக்கை மீது, அதற்கு ஒரு ஆணை பிறப்பிக்க வேண்டும் என்று சட்டத்தில் இருக்கிறதா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன். ஆணையிடலாம்: 'How may' என்று தான் இருக்கிறது; 'may' implies 'may not' also. ஆகவே, ஆணை பிறப்பித்தும் இருக்கலாம், பிறப்பிக்காமலும் இருக்கலாம். அவர்கள் அவசர அவசரமாக ஆணையிடவேண்டிய அவசியம் என்ன என்று எனக்குப் புரியவில்லை. இந்திய அரசியல் சட்டத்தை புரிந்து கொள்வது மட்டுமல்லாமல், ஒவ்வொரு வார்த்தையையும், வார்த்தையின் பொருளையும் கூர்ந்து கவனிக்கும் அளவில் அவர்கள் செய்த காரியம் விளங்கவில்லை. ஆகையினால் நான் சொல்லுவேன், மொழி விஷயத்தில், எங்கள் கழகம் கோருவதுபோல், இந்திய அரசியல் சட்டத்திற்கு திருத்தம் ஏற்படும் வரை, சட்ட பூர்வமாக நிம்மதி கிட்டாது, நிலைமை சிக்கலாகவே இருக்கும், அடிக்கடி தொந்தரவுகள் ஏற்படும் நிலை நீடிக்கும் என்று. ஆகவே, இந்த மன்றத்தில், மன்றத்தின் சார்பில் 'அரசியல் சட்டத்தைத் திருத்தவேண்டும் என்ற முடிவு எடுத்து, சட்ட ரீதியாக மொழிப்பிரச்னைக்கு தீர்வு காண வேண்டும் என்று வலியுறுத்திச் சொல்லவேண்டும் என்று வேண்டிக்கொள்கிறேன். கவர்னர் அவர்கள் அந்த மொழிப் பிரச்னை குறித்துச் சொல்லும் நோக்கில், நாட்டு மக்களின் மனதில் எவ்வளவு தூரம் அது ஆங்காரத்தைத் தூண்டியிருக்கிறது, இந்த மாநில மக்கள் எவ்வளவு நிதான புத்தியோடு இருந்திருக்கிறார்கள் என்பதைச் சொல்லவில்லை. அஸ்ஸாமிலே மக்களைத் தாக்குவதும், அகதிகளாக்கித் துரத்துவதுமான சூழ்நிலை அவர்கள் மாகாணத்தில் இருப்பதும், இந்த மாநிலத்தில், காங்கிரஸ் கட்சிக்கொரடா ராமாயணத்தைச் சொல்லி, கதை சொல்லிப் பேசினாலும், நிதானமான சூழ்நிலை இருப்பதை அவர்கள் குறிப்பிட்டு இருந்தால், உண்மையிலேயே மகிழ்ச்சியடைந்திருப்பேன். முதல் ஆண்டிலேயே அவர்கள் நமக்குச் சொன்னார்கள்; நான் வடகோடி மாநிலமாகிய அஸ்ஸாமிலிருந்து வருகிறேன். வடகோடியில் இருந்துகொண்டு இந்தியாவை ஒரே கண்ணோடு நோக்கும் நிலையை நமக்கு எடுத்துச் சொன்னார்கள். அப்படிப்பட்ட ஒருமைக் கண்ணோடு இந்தியாவைப் பார்ப்பவரின் மாநிலத்தில் வங்காளியைப் படுத்தும் பாட்டைப்பற்றி, மொழிப் பிரச்னைமீது இந்தத் திங்கள் 24, 25 நாட்களில் நடக்கவிருக்கும் விவாதத்தின்போது கூறலாம் என்று கருதுகிறேன்.

இறுதியாக ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கனம் நிதியமைச்சரவர்கள் வருந்த வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன். ஆர அமர யோசித்த பிறகே இந்த முடிவுக்கு

வந்திருக்கிறேன். நேற்றைய தினம் கழகத்தைச் சேர்ந்தவர்கள் துரைத்தனத்தார் குழுக்களுடன் சேர்ந்திருப்பதைக் குறித்து மிகக் கேவலமான முறையில், காங்கிரஸ் கட்சிக் கொரடா அவர்கள் பேசினார்கள். கனம் நிதி அமைச்சரவர்கள் இருந்தார்களோ என்னவோ. அவர்கள் சொன்னார்கள், எங்கள் விதி; மக்கள் உங்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள் என்றெல்லாம் சொன்னார்கள். இனி அந்த சங்கடத்தை நாங்கள் உங்களுக்குக் கொடுக்கவில்லை. நாங்கள் வரவேண்டிய அளவில் வந்து, பெறவேண்டிய பெருமையைப் பெருவோம் என்று நம்பிக்கையோடு கூறுவேன். எங்கள் கழகக் கூட்டங்களில்கூட, எந்தக் குழுக் கூட்டத்து நடவடிக்கைகளிலும் நாங்கள் கேவலமான முறையில் மரபில்லாமல் பேசியது கிடையாது. கனம் நிதியமைச்சர் சொன்னார்கள்; அறிக்கை வெளியிட்டார்கள். நான் எந்த நிருபரையும் கழகக் கூட்டத்திற்கு அழைக்கவில்லை, பத்திரிகை அறிக்கை கொடுத்தது கிடையாது. எந்த விஷயத்தைப் பற்றியும் பகிரங்கமாகப் பேசியது இல்லை. கனம் நிதி அமைச்சர் அறிக்கைக்குப் பிறகு, உங்கள் பதில் என்ன என்று கேட்டதின் பேரில், அவர்கள் பண்டாரக் கதை சொன்னதின் பேரில், நான் ஒரு பாதுஷா கதையை மறுப்பு காட்டத்தக்க வகையில் சொன்னேன். அதுகூட காங்கிரஸ் கட்சிக் கொரடாவிற்கு பொருக்கவில்லை போலும். அரசியல் குழுக்களில் இடம் பெற்று இருப்பதும் அவருக்குப் பிடிக்கவில்லை போலும். கனம் நிதி அமைச்சரவர்கள் அந்தக் கட்சித் தலைவர் மட்டுமின்றி, இந்த சபைக்கும் தலைவராக இருக்கும் காரணத்தினால், தங்கள் மூலம் "உங்களுக்கு சங்கடம் எதற்கு; ஏதோ சேர்த்து வைத்துக் கொண்டோம், கோவிலைத் திறந்ததும் அர்ச்சகர் ஓரமாக நின்றாற்போல், அரசியல் தீண்டாதவர்களாக நினைத்து, உள்ளே இங்கு இருக்கிறார்களே என்று எண்ணி சேர்த்துக்கொண்டு கிட்ட வந்தால் தீட்டு பட்டுவிடுமோ என்று இருக்கிற அந்த சங்கடம் உங்களுக்கு வேண்டாம் என்று நானும், என்னைச் சேர்ந்தவர்களும் உங்கள் குழுக்களிலிருந்து விலகிக் கொள்ளுகிறோம்" என்பதை தெரிவிக்கிறேன். நாங்கள் சொல்லும் கருத்துக்களும், இழிவான முறைகளும் உங்களிடம் வராமல் பாதுகாக்க நாங்களே விலகிக் கொள்ளுகிறோம். உங்கள் திட்டங்கள் இந்த மன்றத்திற்கோ, நாட்டுக்கோ வரும்போது எங்கள் கருத்துக்களைச் சொல்லிக் கொள்ளுகிறோம். இன்று காங்கிரஸ் கட்சிக் கொரடா அவர்கள் தலையில் அடித்துக் கொள்கிறார்கள்; பின்னால் வயிற்றிலே அடித்துக் கொள்வார்கள், இரண்டு கையாலும் அடித்துக் கொள்வார்கள். ஓங்கி ஒரு சமயம் கனம் சுப்பிரமணியத்தையே அடித்து விடுவார்கள். அப்படி சுப்பிரமணியத்தை கொரடாவின் கையில் விடாமல், எங்களுக்கு இடம் வேண்டாம் என்று சொல்லிக் கொண்டு, அகவிலை குறித்தும், மொழிப் பிரச்சினை குறித்தும் சரியானபடி தீர்வுகாணாததாலும், தூத்துக்குடி, சேது சமுத்திரம் திட்டங்கள் பற்றி உத்திரவாதம் இல்லாததாலும், இந்தப் பேருரையை—தமிழ்ப் புலவர்கள் "பேருரை" என்று சொல்வதற்கு தவறாக நினைக்க மாட்டார்கள் என்று எண்ணுகிறேன்—பேருக்கு உரை என்று இருப்பதால், அதைப் பாராட்டவோ, அதைக் கண்டு மகிழ்ச்சியடையவோ இடம் இல்லை என்று சொல்லிக் கொள்ளுகிறேன்.

[11th August 1960

SRI P. G. KARUTHIRUMAN : கனம் சபா நாயகர் அவர்களே, திராவிடக்கட்சித் தலைவர் பேசியபோது, அங்கதன் தூதுபோல் என்று நான் சொன்னதைக் குறித்து என்னைப் பற்றிப் படலம் படலமாக பேசினார்கள். அவர்கள் பேச்சில் பெரும்பாகம் அதிலேயே செலவிட்டார்கள். கம்பராமாயணம் தனக்கு அதிகம் தெரியாது என்றும் குறிப்பிட்டார்கள். அவர்கள் கம்பரசம் எழுதினபிறகுதான் நான் கம்பராமாயணத்தைப் படித்தேன். நேருஜி அவர்களுக்கு சம்பத்து எழுதின கடிதமும் அதற்கு நேருஜி எழுதிய பதிலும், எல்லாப் பத்திரிகைகளிலும் வந்தது எல்லாரும் அறிவார்கள். ராமாயணத்தில்கூட, அங்கதன் தூதிலும் . . . . . . . . . . . .

SRI P. U. SHANMUGAM : தலைவர் அவர்களே, அங்கத்தினர் இரண்டாவது முறையாகப் பேச விதி அனுமதிக்கிறதா ?

MR. SPEAKER : 'பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன்' என்று எழுந்து தவறாகப் புரிந்துகொண்ட கருத்தைத் தாங்கள் திருத்தலாம். ஆனால் இரண்டாவது முறை பேச முடியாது.

SRI P. G. KARUTHIRUMAN : பதிலில் என்னைப்பற்றி குறிப் பிட்டதினால், நான் விளக்கம் தரும் முறையில் சில வார்த்தைகள் சொல்லுகிறேன். திராவிடக் கழகத் தலைவர், எதிர்க்கட்சியைத் தழுவி இருக்கவேண்டுமென்பதை சர்க்கார் கட்சி தவறிவிட்டது என்று குற்றஞ்சாட்டுகிறார். அங்கதன் தூது அனுப்பின அடிப் படையே "புறத்துறை வலியரேனும், பொறையுடன் பொருந்தி வாழ்தல் ஜயத்துறை அறனும் அஃதே" என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

SRI A. VEDARATHNAM : ஸார், 'ஆன் எ பாயிண்ட் ஆப் கிளாரிபிகேஷன் . . . . . . . . . . .

MR. SPEAKER : The hon. Member can raise, a point of order or give personal explanation, but no 'point of clarification.'

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்களின் உரையின்மீது அநேகம் அங்கத் தினர்கள் தங்களுடைய கருத்துக்களையெல்லாம் தெரிவித்திருக் கிறார்கள். அவர் தன்னுடைய உரையில் எவ்வளவோ குறைகளை நிவர்த்தி செய்யப்பட்டிருக்கின்றன என்று சொல்லிய போதிலும், முக்கியமாக அதை கவனித்தால் அது பெரிய ஏமாற்றத்தைத்தான் அளிக்கிறது என்பதைப்பற்றி அதிகமாகச் சொல்ல வேண்டிய தில்லை.

MR. SPEAKER : There is too much noise. I want hon. Members to move out slowly without making noise when they are going out of the Chamber. I hear noise from the galleries. If I hear the noise anymore I will clear the galleries. I want silence.

11th August 1960]

**Sri V. K. RAMASWAMI MUDALIYAR**: அது ஒரு பெரிய ஏமாற்றத்தைக் கொடுத்திருக்கிறது. முக்கியமாக என்ன ஏமாற்றத்தைக் கொடுத்திருக்கிறது என்றால் விலைவாசிகள் உயர்ந்திருக்கிறது என்று சொல்லிவிட்டு அதைக் கட்டுப்படுத்துவதற்கு என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது என்பதைப்பற்றி உரையில் சொல்லவில்லை. அதைப்பற்றி அவருடைய உரையில் திட்டவட்டமாகச் சொல்லியிருக்கவேண்டும். விலைவாசிகள் விஷம்போல் ஏறிக்கொண்டிருக்கிறது. இந்த ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்குள் 500 பாயிண்ட்டுக்கு மேல் ஏறி இருக்கிறது. ஆனால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்குள் இன்னும் 700 பாயிண்ட்டுக்குப் போய்விடுமோ என்று கூட தோன்றுகிறது. இன்னும் 1,000 பாயிண்டுக்குக்கூட போய்விடுமோ என்று ஒரு பெரிய கவலையை மக்களுக்கு உண்டு பண்ணி இருக்கிறது. அதனுடைய காரணம் என்னவென்றால் அரசாங்கம் போட்டு நிறைவேற்றி வரக்கூடிய ஐந்தாண்டு திட்டங்கள்தான். ஐந்தாண்டு திட்டங்களைப்போட்டு ஒவ்வொரு வருஷமும் ஒவ்வொரு திட்டத்தை அரசாங்கம் நிறைவேற்றி வருவதால் அதற்கு எவ்வளவு தூரம் செலவு ஆனபோதிலும்கூட அதற்கு ஆகக்கூடிய செலவை மக்களின்மீது வரி மூலமாக சுமத்தி வசூலித்து வருகிறார்கள். அதனால் அவர்களுடைய வாழ்க்கைத்தரம் குறைந்துகொண்டே வருகிறது. இதை உண்மையில் வெற்றிகரமாக நடத்த முடியுமா என்பதைப்பற்றி சர்க்கார் திட்டவட்டமாக யோசிக்கவேண்டும். வரிக்குமேல் வரி போட்டுக்கொண்டும், நோட்டுக்களை அதிகமாக அச்சடித்துக் கொண்டு அவற்றை விஸ்தரித்துக்கொண்டு அதன் மூலம் பண வீக்கத்தை அதிகரித்துக்கொண்டும் வருவதுதான் இப்படிப் பட்ட விலைவாசி உயர்வுக்குக் காரணம். அதனால்தான் விலைவாசிகள் நாளுக்கு நாள் விஷம்போல் ஏறிக்கொண்டிருக்கிறது. அதைப்பற்றி சர்க்கார் என்ன செய்யப்போகிறார்கள் என்பதைப்பற்றி கவர்னர் உரையில் ஒன்றையும் காணோம். ஆனால் வருத்தம்தான் தெரியப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆனால் அதற்கு என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது என்பதைப்பற்றி திட்டவட்டமாக ஒன்றும் சொல்லப்படவில்லை. அதை எவ்விதம் கட்டுப்படுத்தப் போகிறார்கள் என்பதைப்பற்றி ஒன்றும் தெரிவிக்கவில்லை. அதைப் பற்றியேதான் இரண்டு பக்கத்திலும், அங்கத்தினர்கள் எல்லோரும் ஆளும் கட்சியிலும் சரி, எதிர் கட்சியிலும் சரி எடுத்துச் சொன்னார்கள். ஆனால் சர்க்காருடைய நோக்கம் என்னவாக இருக்கும் என்பதைப்பற்றி யோசித்துப் பார்த்தால் கடைசியில் அவர்கள் மறுபடியும் கண்ட்ரோல்களைக் கொண்டு வருவார்களோ என்றுதான் தோன்றுகிறது. கண்ட்ரோல்கள் சில வருஷங்களுக்கு முன்பு இருந்தது. அப்பொழுது அது எப்படி நடைபெற்றது என்பது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும்.

(Sri S. Ranganatha Mudaliar in the Chair.)

இதற்கு முன்பு கண்ட்ரோல் எப்படி நடந்தது என்பதைப் பற்றி நான் அதிகமாகச் சொல்லவேண்டியதில்லை. கண்ட்ரோல் என்றால் அதைக் காரணமாக வைத்துக்கொண்டு சர்க்கார்

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [11th August 1960

துஷ்பிரயோகம் செய்வார்கள், அதிகப்படியான கஷ்டம் ஏற்படும், அதன் காரணமாக 'அபிஷியல் டாமினேஷன்' (official domination) ஏற்படும், 'பேவரிட்டிஸம்' இதற்கெல்லாம் இடம் ஏற்படுகிறது. அதனல் கண்ட்ரோல் இருக்கவேண்டிய அவசியம் இல்லை. அதன் காரணமாக பொருளாதாரத் துறையில் நஷ்டம் ஏற்படும், எல்லாவிதங்களிலும் ஜனங்களுக்கு கஷ்டம் ஏற்படும். கண்ட்ரோலைக்கொண்டு வந்தால் அதை வைத்துக்கொண்டு யாராலும் நியாயமாக நடத்தமுடியாது. அது திருப்திகரமாக நடக்காது. கண்ட்ரோல் வருவதால் தவறுகள்தான் நடைபெறுவதற்கு ஏதுவாக இருக்கும், அதனல் பலவிதமான ஊழல்கள் ஏற்படலாம். பலர் அதிகப்படியான நஷ்டம் அடைவார்கள். ஆகவே நாங்கள் கண்ட்ரோல் வருவதை ஆதரிக்கவில்லை என்பதை மட்டும் எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

விவசாயத்துறையை எடுத்துக்கொண்டால், இந்த விலைவாசியின் உயர்வின் காரணமாக விளை பொருள்களில் விலையெல்லாம் அதிகமாக உயர்ந்துவிட்டது. 'காஸ்ட் ஆப் கல்டிவேஷன்', அதாவது உற்பத்திச் செலவு ஒன்றுக்கு பத்து மடங்கு அதிகமாகி இருக்கிறது. இதைப்பற்றி நான் ஏற்கனவே புட் அட்வைசிரி கமிட்டியில் சொல்லியும் இருக்கிறேன், அடிக்கடி எழுதியும் இருக்கிறேன். பல அறிக்கைகள் மூலமாகவும் தெரிவித்திருக்கிறேன். (The price should be acceptable both to the consumer and to the producer.) உற்பத்தி செய்யக்கூடிய பொருள்களின் விலை அவைகளை உபயோகிப்போர்கள் வாங்கக்கூடிய அளவில் இருக்கும்படியான நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். அந்த முறையில் சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். அந்த முறையைக் கையாண்டால் எந்தவிதமான கட்டுப்பாட்டுக்கும் தேவையில்லை. உணவு உற்பத்திக்கு அதிகச் செலவு ஆவதால்தான் அதிகப்படியான விலைவாசிக்குக் காரணமாக இருக்கிறது. அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அதற்கு அதிக கூலி கொடுப்பதும் முக்கியமான காரணமாக இருக்கிறது. இதைத் தவிர உரமும் சரிவர கிடைப்பதாக இல்லை. நேற்றுகூட பத்திரிகையில் பார்த்தேன் கனம் தொழில் அமைச்சர் அவர்கள் சென்னை மேல் சபையில் ஒரு கேள்விக்கு பதில் அளிக்கும்போது பதில் சொல்லி இருக்கிறார் "உரங்கள் அதிகமாகக் கிடைக்கின்றன, ஆனல் விவசாயிகள்தான் அதை வாங்குவதற்குத் தயாராக இல்லை" என்று. ஆனல் எங்கள் பிராந்தியத்தை எடுத்துக் கொண்டால் . . . . . . . .

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : அந்தக் கேள்வி தஞ்சை ஜில்லாவைப்பற்றிய கேள்வி. இரண்டு மாதங்களுக்கு முன்னல் உள்ள நிலைமை கிடைக்காமல் இருந்திருக்கலாம். ஆனல் இப்பொழுது கிடைக்கிறது என்று சொன்னேன்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : எங்கள் பிராந்தியத்தில் உரம் கிடைக்கவில்லை. அதனல் அநேகம் பேர்கள் கஷ்டப்படுகிறார்கள். உரம் விநியோகத்தில் கறுப்பு மார்க்கெட்தான்

11th August 1960] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

தாண்டவம் ஆடிக்கொண்டிருக்கிறது. சர்க்காருடைய கண்ட்ரோல் சரிவர நடைபெறவில்லை. கண்ட்ரோலை சரிவர நடத்தாவிட்டால் ப்ளாக் மார்க்கெட்தான் நடக்கும் என்பதைத் திட்டவட்டமாக கனம் அமைச்சருக்கு நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கண்ட்ரோல்கள் சரிவர நடந்தால் ப்ளாக் மார்க்கெட்டுகள் இருக்கவே முடியாது. கண்ட்ரோல் இருந்து அது சரிவர நடை பெருவிட்டால் அந்த மாதிரியான சூழ்நிலையில் விவசாயிகள் அதிகப்படியாகக் கஷ்டப்படுவார்கள்.

அடுத்தபடியாக மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் சம்பந்தமாக வரக்கூடிய அறிக்கைகளைப் பார்த்தால் மறுபடியும் அதிகப்படியாக சர்க்கார் லாண்ட் ரிவினியூ தீர்வை போடப்போவதாகத் தோன்றுகிறது. அப்படிப்பட்ட ஒரு யோசனையையும் கூறியிருக்கிருர்கள். அது ரூபாய்க்கு ரூபாய் அதிகப்படுத்தப் போகிருர்களோ அல்லது ரூபாய்க்கு அரை ரூபாய் விதம் அதிகப்படுத்தப்போகிருர்களோ தெரியவில்லை. அதைப்பற்றி ஒன்றும் திட்டவட்டமாகத் தெரியவில்லை. இப்பொழுதே ஒவ்வொரு வருஷமும் வரி ஏறிக்கொண்டே போகிறது. அதனல் விவசாயிகள் ரொம்பவும் கஷ்டப் பட்டுக்கொண்டிருக்கிருர்கள். சமீபத்தில் தேர்தல் வரப் போகிறது. அப்பொழுது எந்த வரியையும் போட மாட்டார்கள், அதுவும் கண்டிப்பாக போடமாட்டார்கள். தேர்தல் முடிந்து 1962-க்குப் பிறகு என்னென்ன வரிகளைப் போடப் போகிருர்கள் என்பதைப்பற்றி கொஞ்சம் நிதானித்துப் பார்க்க வேண்டியதாக இருக்கிறது. எப்படியும் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குப் பத்து ஆயிரம் கோடி ரூபாய் இந்தியா பூராவும் செலவு செய்யவேண்டுமென்ருல் அதற்கு அதிகப்படியான வரிகள் மூலம் சம்பாதித்தாக வேண்டும். அல்லது கடன் மூலமாகவாவது சம்பாதித்தாக வேண்டும். அப்படிச் சம்பாதித்துத்தான் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை மக்களிர்த்தில் திணிக்க முடியும். அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலை வரும் என்பதைப்பற்றி சந்தேகம் இல்லை. அதனல் மக்கள் கஷ்டப்படப்போகிருர்கள். இப்போது சமீபத்தில் இங்கிலாந்து தேசத்தில் பார்த்தோம். அங்கு தேர்தல் நடந்தது. அதன் காரணமாக கன்சர்வேடிவ் கட்சியார் No control—but prosperity என்று கோஷித்தார்கள். ஆனல் இங்கு All plan but no prosperity என்று சொல்லும்படியாக இருக்கிறது. அந்த சூழ்நிலை இங்கு வந்திருக்கிறது. இது ரொம்பவும் வருந்தத்தக்க விஷயமாக இருக்கிறது. இதையெல்லாம் இந்தச் சர்க்கார் மத்திய சர்க்காருக்கு எடுத்துச் சொல்லி இவைகளையெல்லாம் நன்ருக எடுத்துக்காட்டி பண வீக்கம் ஏற்பட்டால் அதன் விளைவு என்னவாகும் என்பதையும் எடுத்துக்காட்டி அப்படி ஏற்படாதவாறு அதற்கு வழி செய்யவேண்டும். அதற்கு இந்தச் சர்க்கார் முன் வரவேண்டும்.

இரண்டாவதாக சமீபத்தில் நடந்த மத்திய அரசாங்க ஊழியர்களுடைய வேலை நிறுத்தத்திற்கு நாங்கள் எந்த விதமான ஆதரவும் கொடுக்கவில்லை. அதைத் தடுக்க சர்க்கார் எடுத்துக்கொண்ட முறைகளையெல்லாம் நாங்கள் மிகவும் பாராட்டுகிறோம். அதாவது எந்தவிதமான நிகழ்ச்சியும் ஏற்படா

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [11th August 1960

வண்ணம் அதைச் சமாளித்ததற்காக அதைப்பற்றி அதிகம் சொல்லவேண்டியதில்லை. முக்கியமாக மக்களிடத்தில் ஒரு நல்ல உணர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. வேலைநிறுத்தம் செய்தது தவறு என்ற எண்ணம் சாதாரணமாக மக்களிடத்தில் ஏற்பட்டிருக்கிறது. அதனை சமாளித்ததைப்பற்றி மக்கள் பாராட்டுகிறார்கள். ஆனால் அதே சமயத்தில் இப்படிப்பட்ட வேலை நிறுத்தம் செய்வதற்கு ஏற்பட்ட காரணம் என்ன என்பதைப்பற்றி ஆராய வேண்டியது அவசியமாக இருக்கிறது. பொருளாதாரத் துறையில் மக்கள் கஷ்டப்படுவதன் காரணத்தால்தான் இந்த நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இது ஏற்படாமல் அவர்கள் சமாளித்திருக்க வேண்டும். இதை முன்கூட்டியே செய்திருந்தால் இந்த வேலை நிறுத்தம் நடைபெற்றிருக்காது. சீனாவிலிருந்து வந்த ரேடியோ செய்திகளிலிருந்து ஏதோ இந்திய பிரதம மந்திரியால் இந்த வேலை நிறுத்தம் சமாளிக்க முடியவில்லை என்றும் இன்னும் ஏதோ சிலர் இதை தூண்டி விட்டார்கள் என்றும் சொல்லப்படுகிறது. அது எப்படி இருந்தாலும் வேலை நிறுத்தம் வராமல் முன்கூட்டியே நடவடிக்கை எடுத்துக்கொண்டு அதைத் தடுத்திருக்கலாம். ஏதோ நடந்துவிட்டது. அநேகம் உத்தியோகஸ்தர்கள்மீது ஏதோ கேஸ்கள் போடப்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது. எப்படியாவது அவைகளை வாபஸ் வாங்கிக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்கள்மீது பழி வாங்கும் முறையைக் கைவிடவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதைப்பற்றி நம்முடைய சர்க்கார் மத்திய சர்க்காரிடம் எடுத்துச் சொல்லி அவர்கள்மீது போடப்பட்டிருக்கும் கேஸ்களை வாபஸ் வாங்கும் படியாகச் செய்தால் நன்றாக இருக்கும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

11-00 a.m. தவிர யூனியன் லீடர்ஷிப்புகளுக்கு யூனியனுக்குள்ளேயே இருக்கும் நபர்கள்தான் வரவேண்டும், வெளியில் இருந்து ஆட்கள் தலைவர்கள் வரக்கூடாது என்பதற்கு ஒரு சட்டம் கொண்டுவரப் போவதாக அநேக நாட்களாக வெளியில் பேச்சுக்கள் நடந்து வருகின்றன. நம்முடைய சர்க்காரும் திட்டவட்டமாக மத்திய சர்க்காருக்குச் சொல்லி அந்தமாதிரியான ஒரு சட்டத்தைக் கொண்டுவருவதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக மொழிப் பிரச்சனை. மொழிப் பிரச்சனையைப் பற்றி விவாதிக்கத் தனியாக இரண்டு நாட்கள் ஒதுக்கப்பட்டிருப்பதனால் நான் அதிகமாக இப்போது அதைப்பற்றி சொல்லப்போவதில்லை. அப்பொழுது விஸ்தாரமாகப் பேசலாம் என்று நினைக்கிறேன். பொதுவாக இந்தியைத் திணிக்கக் கூடாது. தமிழ் ஆட்சிமொழியாக இருக்கவேண்டும். இன்னும் கொஞ்ச நாளைக்கு டெக்னிகல் எஜுகேஷன் போன்றவைகள் ஆங்கிலத்தில் படிப்பதற்கு வசதியாக ஆங்கிலம் நீடிக்கவேண்டும் என்பதே என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். சர்க்கார் இதைப் பற்றி திட்டவட்டமாக உத்தரவு போடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

11th August 1960] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

அடுத்தபடியாக பே கமிஷன் ரெக்கமெண்டேஷன் (Pay Commission recommendation). இதைப்பற்றி பொதுவாக எங்கே பார்த்தாலும் திருப்திதான். ஆனாலும் அதிருப்தி ஏற்படவில்லை என்று சொல்வதற்கில்லை. பே கமிஷன் சில இலாகா சம்பந்தமாகச் செய்திருக்கும் சிபார்சுகள் ஒப்புக்கொள்ளப்படவில்லை. மாறாக பே (சம்பள) கட் கூடச் செய்யப்பட்டிருக்கிறது. குறிப்பாக பே கமிஷன் ரிப்போர்ட்டை சீனியர் ஆபீசரைப் போட்டுப் பரிசீலனை செய்யாமல் நிதி இலாகாவில் ஒரு செக்ஷனைக் கொண்டு பரிசீலனை செய்ததுதான் இந்தக் குறைகளுக்குக் காரணம். இதைப்பற்றியும் சர்க்கார் நன்றாகப் பரிசீலனை செய்ய வேண்டும்.

(Mr. Speaker in the Chair.)

இன்னும் டீசர்கள் (teachers) சம்பந்தப்பட்டவரை இரண்டு கிரேடுகள்—அந்த இலாகா அட்டெண்டர்கள் இன்னும் இதர சிப்பந்திகள் சம்பந்தமாக—ஏன் டிஸ்பாரிடி disparity இருக்க வேண்டும் என்பதை யோசிக்கவேண்டும். இதன் காரணமாக சிலர் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

இன்னும் சில இலாகாக்களில் டென்யூர் போஸ்ட் என்று ஏற்படுத்திவிட்டு மூன்று வருஷம், நான்கு வருஷமாக ஒருவரையே வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இதன் காரணமாக டென்யூர் போஸ்ட் என்றால் என்ன அர்த்தமோ அதுவே தெரியாமல் போகிறது. இதைப்பற்றியும் நன்றாக யோசிக்கவேண்டும். ஐ.ஏ.எஸ். ஆபீசர்கள் சிலருக்கு எக்ஸ்டென்ஷன் (extension) கொடுக்கப்படுகிறது. சிலருக்கு மறுக்கப்படுகிறது. ஒருவருக்கு ஒரு இலாகாவில் சூப்பர்ஆன்யுவேஷன் (superannuation) கொடுக்கப்பட்டது. ஆனால் அந்த போஸ்ட் அபாலிஷ் ஆனதினால் வேறு இலாகாவிற்கு மாற்றப்பட்டிருக்கிறார். இப்போது அவர் இருக்கக்கூடிய போஸ்ட் ஒரு டெபுடி செக்ரடரி இருக்க வேண்டியது. இதனால் சர்க்காருக்கு எவ்வளவு நஷ்டம்? அது அவசியமா என்பதைப்பற்றி நன்றாக யோசிக்கவேண்டும். தவிர போர்டு மெம்பர் என்ற ஸ்தானத்தைக் கொடுத்து இரண்டு போர்டு மெம்பர்களை இங்கே வைத்துக்கொண்டு இவர்களுக்குப் பதிலாக ஜூனியர் ஆபீசர்கள் இரண்டுபேரை போர்டு மெம்பர்களாக ஏற்படுத்தியிருக்கிறார்கள். இதன்காரணமாகவும் சர்க்காருக்கு எவ்வளவு நஷ்டம்? இது அவசியம்தானா என்பதையும் அமைச்சர்கள் யோசிக்கவேண்டும். இம்மாதிரி செய்வதன் காரணமாக நமக்குச் செலவுகள் அதிகமாகின்றன. இந்த இனங்களில் செலவுகளைக் குறைக்க தக்க முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னும் ஒவ்வொரு இலாகாவையும் பிரித்துக் கொண்டிருப்பதன் காரணமாக செலவுகள் எல்லாம் அதிகப்பட்டுக்கொண்டிருக்கிறது. முக்கியமாக இப்போது கவுன்சிலைப் பிரித்தோம். அதன் காரணமாகக் கொஞ்சம் அதிகச் செலவு. இன்னும் ஸ்தல ஸ்தாபன இலாகா போன்றவைகள் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இவையெல்லாம் அதிகச் செலவுதான். இப்படி இலாகாக்களைப் பல

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [11th August 1960

லாகப் பிரித்திருப்பதன் காரணமாகப் பேப்பர்கள் ஒன்றும் சீக்கிரத்தில் டிஸ்போசல் செய்யப்படவில்லை. நாளுக்கு நாள் செலவு தான் அதிகமாகிக் கொண்டிருக்கிறது. அநேகம் பேர்களுக்கு பல மாதங்கள் ஆகியும் பதில் வரவில்லை. அங்கத்தினர்களும் சரி, வெளி ஆட்களும் சரி, இந்த பதில்களை எதிர்பார்த்துக்கொண்டே இருக்கவேண்டியதாக இருக்கிறது. முக்கியமாக மக்களிடத்தில் ஒரு பிரச்சனை. அமைச்சர்கள் அடிக்கடி சுற்றுப்பிரயாணம் என்று போய்விடுவதன் காரணமாகத்தான் இந்த பேப்பர்கள், மனுக்கள் எல்லாம் பரிசீலனை செய்யப்படுவது தாமதமாகிறது என்று. இன்னும் அநேகம் சரிவர பரிசீலனை செய்யப்படாமலேயே டிஸ்போசல் செய்யப்படுகிறது. அதையும் கவனித்துத் தக்க முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னொன்று புதிதாகத் தொழில் ஆரம்பிப்பது என்றால் நகரத்திற்கு 50 மைல்கள் தள்ளியே ஆரம்பிக்கவேண்டும். இன்னும் பிற்போக்கான பகுதிகள் என்ன என்ன என்று பார்த்து ஆரம்பிக்க வேண்டும். இப்படி அநேகம் தொல்கழில் ஆரம்பிக்கப்பட்ட நம் தமிழ்நாட்டை தொழில்வளம் நிரம்பிய நாடாகச் செய்வதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னும் பரம்பிக்குளம், ஆரணியாறு திட்டங்கள்பற்றி எடுக்கப்பட்ட முடிவுகளைப்பற்றி சந்தோஷம். ஆனால் சிறு நீர்ப்பாசனங்கள் விஷயத்தில் நன்றாக முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்றைய தினம் தமிழ்நாட்டில் அநேகம் குளங்கள் மராமத்து செய்யப்படாமல் கிடப்பதனால் நீர்ப்பாசன வசதி பாதிக்கப்பட்டிருக்கிறது. இவற்றை மராமத்து செய்யவேண்டும். வறண்ட கிணறுகளைத் தோண்டுவதற்கும் ஏற்பாடு செய்யவேண்டும். இந்த வேலைகள் எல்லாம் தற்போது ஆமை வேகத்தில் நடந்துகொண்டிருக்கின்றன.

மின்சாரம் நல்லமுறையில் நம் ராஜ்யத்தில் விஸ்தரிக்கப்படுகிறது. இருந்தபோதிலும் காலையில் பத்திரிகையில் பார்த்தேன். பிரதம மந்திரி அவர்கள் ஆடாமிக் எனர்ஜி பிளாண்ட் வடக்கே ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதைப்போலவே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் நம் பிராந்தியத்திலும் ஆடாமிக் எனர்ஜி பிளாண்ட் ஏற்படுத்த முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்று முக்கியமாக ஜில்லா போர்டுகளை ஸ்தல ஸ்தாபன இலாகா எடுத்த பிறகு—பஞ்சாயத்து கவுன்சில்கள் ஏற்பட்டு அமுலாக்கப்படாமல் இருக்கிறது. அக்டோபர் மாதத்திற்குள் எல்லாம் பஞ்சாயத்து கவுன்சிலின்கீழ் வரவேண்டுமென்பது திட்டம். இப்போது நிலைமை எப்படி இருக்கிறது? ரோடுகள் எல்லாம் சரிவர போடப்படவில்லை. எங்கள் ஜில்லாவை எடுத்துக்கொண்டால் ஆயிரத்து ஐந்நூறு ஆரம்பப் பள்ளிகள் இருக்கின்றன. ஹைஸ்கூல்கள் 45 இருக்கின்றன. ஒரு வருஷ காலமாக இவைகள் எல்லாம் சரியான முறையில் இன்ஸ்பெக்ஷன் செய்யப்படவில்லை. சர்க்கார் இதை நல்ல முறையில் எடுத்துக்கொள்ள வழிவகை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

11th August 1960] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

ஹைஸ்கூல் ஏற்படுத்துவதில் கட்சி நோக்கத்தோடுதான் செய்யப் படுகின்றன. மாணவர்கள் நிறைந்த இடங்களில் பள்ளிகள் போட வேண்டுமென்றால் அந்த இடங்களில் போடுவது கிடையாது. பள்ளிகள் ஏகனாமிக்காக வேலை செய்யுமே என்பதைக் கவனிப்ப தில்லை. என்னுடைய தொகுதியில் நல்ல ஹையர் எலிமெண்டரி ஸ்கூல் (Higher Elementary School) இருக்கிறது. அங்கே 900 பேர் படிக்கிறார்கள். ஹைஸ்கூல் இருப்பதற்கு வேண்டிய வசதிகள் யாவும் இருந்தும், அங்கே ஹைஸ்கூல் ஏற்படுத்த அனுமதி கொடுக்கவில்லை. முதல் அமைச்சர் அவர்கள் இந்த இடத்தைப் பார்த்தும் அனுமதி அளிக்கவில்லை. ஏகனாமிக்காக வேலை செய்யாத இடங்களில் எல்லாம் ஹைஸ்கூல் வைத்திருக் கிறார்கள். ஐந்து மைல்களுக்கு அப்புறம் ஒரு ஹைஸ்கூல்தான் இருக்கவேண்டுமென்று இருக்கிறது. ஆனால் ஒன்று, இரண்டு மைல் தூரத்தில் இன்னொரு பள்ளி நடத்துவதற்கு அனுமதி கொடுக்கி றார்கள். இதுவும் கட்சி நோக்கத்துடன்தான் செய்கிறார்கள். அப்படியில்லாமல் பரந்த நோக்கத்துடன் பரிசிலனை செய்து மக்களைத் திருப்தி பண்ணக்கூடிய வகையில் செய்யவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

எலிமெண்டரி ஸ்கூல்கள் சரிவர நடப்பதில்லை. அதுவும் ஜீப் போகாத இடங்களில் எலிமெண்டரி ஸ்கூல் வாத்தியார்கள் சரி யாக வேலை செய்வது கிடையாது. அவர்களுக்கு பள்ளி சீரமைப்பு உதவிக்காக சர்க்காரிடமிருந்து உத்தரவு வந்திருக் கிறது. அதன் காரணமாக உபாத்தியாயர்கள் மத்தியான உணவிற்காக அரிசி வாங்குவதற்காகவும், கடிகாரம் முதலி யவைகள் வாங்குவதற்காகவும் பக்கத்து கிராமங்களுக்கு போக வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. இதனால்தான் அவர்கள் பள்ளிகளில் இருப்பது கிடையாது. இந்த நிலைமை நீடித்தால் பள்ளிக்கூடங்கள் சரிவர நடக்குமா? ஆதலால்தான் அநேக பள்ளிகளெல்லாம் மிகவும் சீர்கேடான நிலைமையில் இருக் கின்றன. இதைப்பற்றி நான் அதிகமாக பேச விரும்பவில்லை.

பஞ்சாயத்துக்களை எடுத்துக்கொண்டால், பஞ்சாயத்துக்களை ஏற்படுத்துவதிலும்கூட கட்சி மனப்பான்மையில்தான் ஏற்படுத்து கிறார்கள். 15 மைல்களில் உள்ள அநேக கிராமங்கள் சேர்ந்து பஞ்சாயத்து ஏற்பட்டிருக்கிறதை பிரித்து ஏற்படுத்தவேண்டும் என்று இருந்தாலும் பிரிப்பதில்லை. போதுமான வருமானம் இல்லாத சிறு சிறு கிராமங்களிலும் பஞ்சாயத்துக்கள் நிறுவப் படுகின்றன. ஒரு பிர்க்காவில் இரண்டு மூன்று பஞ்சாயத்துக்கள் தனித்தனியாக இயங்குகின்றன. மற்றொரு பிர்க்காவில் இருக்கும் கிராமத்தை இவைகளுடன் சேர்த்திருக்கிறார்கள். இம்மாதிரியான நிலைமையை ஏன் உண்டுபண்ணவேண்டும்? எந்தெந்த இடங்களில் பஞ்சாயத்துக்கள் அமைந்தால் சரிவர இயங்கும் என்று யோசித்து நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதற்கப்புறம் லோகல் பண்டு ஆடிட்டை (local fund audit) -ஐ எடுத்துக்கொண்டால், இதில் நிறைய ஊழல் ஏற்பட்டிருக்கிறது. இதைப்பற்றி பப்ளிக் அக்கவுன்ட்ஸ் கமிட்டி

கூட்டத்தில்கூட அங்கத்தினர்கள் சொல்லியிருக்கிறார்கள். இந்த ஆடிட் விஷயத்தைக் கட்சி நோக்குடன் கவனிக்காமல் மக்கள் நலனை பாதிக்காத வகையில் எந்தெந்த நடவடிக்கை எடுக்கவேண்டுமோ அதைச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். பிளானிங் கமிஷன் சிற்சில பகுதிகளுக்கு அதிகமாகவும், சில இடங்களுக்குக் குறைவாகவும் பணம் விநியோகம் செய்கிறது. பிற்போக்கான பகுதிகளுக்கு சரியாகப் பணம் ஒதுக்குவது கிடையாது. ஆகையால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது மக்களுக்குத் திருப்தி அளிக்கக்கூடிய வகையில் சமமாகப் பிரித்துக் கொடுக்க வேண்டியிருப்பதற்கான நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக சேரி ஒழிப்பை எடுத்துக்கொண்டால் இது முக்கியமாகக் கவனிக்கப்படவேண்டிய விஷயம். இதுவும் கட்சி நோக்கத்துடன்தான் கவனிக்கப்படுகிறது. ஆங்காங்கே சேரிகள் திடீர் திடீர் என்று உற்பத்தியாகின்றன. இப்படி ஒரு சேரியைப் பார்த்தேன். அதற்கு காமராஜ் நகர் என்று பெயரிட்டு, காங்கிரஸ் கொடியைப் பறக்க விட்டிருக்கிறார்கள். இம்மாதிரி நினைத்த இடங்களில் எல்லாம் சேரிகளை அமைக்காமல் பார்த்துக்கொண்டு, அதை மீறுகிறவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஜெனரல் அட்மினிஸ்ட்ரேஷனை எடுத்துக்கொண்டால் இதில் லஞ்சத்தைக் (corruption) குறைத்து அட்மினிஸ்ட்ரேஷனை டோன் அப் (tone up) செய்ய வேண்டும். இந்தச் சமயத்தில் ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். ஜனாதிபதி அவர்களை எடுத்துக்கொண்டால் அவர்கள் எந்தக் கட்சியையும் சேர்ந்தவர் அல்ல. அப்படியிருக்கும்போது அவர்களை வரவேற்கும்போது கவர்ன்மென்டைச் சேர்ந்தவர்களுக்குத்தான் அழைப்பு அனுப்பியிருக்கிறார்கள். இரண்டு நாட்களுக்கு முன்புதான் அவர்களுக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது. மற்ற கட்சித் தலைவர்களுக்கு அழைப்பு அனுப்பியிருந்தால் அவர்களும் வந்திருப்பார்கள். அவ்வாறு செய்யவில்லை. ஆகையால் இம்மாதிரியான விஷயங்களில் கட்சிக் கண்ணோட்டத்துடன் பார்க்காமல் எல்லாக் கட்சித் தலைவர்களையும் கலந்தாலோசித்து நாட்டுக்கு நன்மை செய்யவேண்டும் என்ற எண்ணத்துடன் நடவடிக்கை எடுக்கவேண்டும். இதைப்பற்றி இன்னும் அதிகமாகச் சொல்ல விரும்பவில்லை. எந்த நல்ல காரியத்தை செய்வதானாலும் எல்லாருடைய அபிப்பிராயங்களைக் கேட்டு நடவடிக்கை எடுத்துக்கொண்டால் மக்களுக்குத் திருப்தி ஏற்படும் என்று சொல்லிக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர்களே, இதுவரை அறுபத்திரண்டு கனம் அங்கத்தினர்கள் இவ்விவாதத்தில் பேசி இருக்கிறார்கள். நான் 63-வதாக இங்கு பேசுகிறேன். (சிரிப்பு) இங்கு நடந்த விவாதத்தில் பல முக்கியமான, அடிப்படையான விஷயங்கள் விவாதிக்கப்

11th August 1960] [Sri C. Subramaniam]

பட்டன. முதல் முதலாக மத்திய அரசாங்கத்தின் வேலை நிறுத்தத்தைப்பற்றி குறிப்பிடப்பட்டது. இந்த வேலை நிறுத்தத்தைப்பற்றிச் சொல்லும்போது நாம் இதை ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சியாக எடுத்துக் கொள்ளக் கூடாது. இதன் மூலமாக நாட்டில் இருக்கக்கூடிய பிரச்னையை, மக்கள் எல்லோரும் யோசனை செய்யக்கூடிய ஒரு கட்டத்தை ஏற்படுத்தியிருக்கிறது. இப்பொழுது நடந்த மத்திய அரசாங்க வேலை நிறுத்தம் காரணமாக பொதுமக்கள் நிலைமை என்ன? தொழிலாளர்கள் உரிமை என்ன? தொழிலாளர்கள் கடமை என்ன? அரசாங்கத்திடம் பணிபுரியக்கூடிய ஊழியர்களின் உரிமை என்ன? கடமை என்ன? என்பதையெல்லாம் யோசித்து ஒரு முடிவிற்கு வரக்கூடிய வாய்ப்பும் கொடுத்திருக்கிறது. இந்த முறையிலே பார்க்கும் பொழுது ஓரளவிற்கு இந்த வேலை நிறுத்தம் ஏற்பட்டதை நான் வரவேற்கிறேன். இதில் இன்றைக்கு இருக்கக்கூடிய அடிப்படையான பிரச்னை என்னவென்றால் அரசாங்க ஊழியர்களாக இருக்கக்கூடியவர்கள் வேலை நிறுத்தம் செய்யலாமா என்பதைப் பற்றி ஒரு முடிவிற்கு வர நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

முடிவிற்கு வந்து அதற்கேற்ப நடவடிக்கைகள் எடுக்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம். ஏனெனில், இன்று அரசாங்கத்தின் மூலம் பல்வேறு பணிகளை நிறைவேற்றும் பொறுப்பை நாம் மேலும், மேலும் ஏற்றுக்கொண்டு வருகிறோம். அப்பொறுப்புக்களை நிறைவேற்றவேண்டுமென்று சொன்னால் நிர்வாக இயந்திரம் சரியான முறையில் அமைந்து அது வேலை செய்து வந்தாலொழிய இந்தப் பொறுப்புகளையெல்லாம் நாம் நிறைவேற்ற முடியாது. மத்தியில், எந்தக் காரணத்தினுலும் சரி ஒடிந்து போகக் கூடிய இயந்திரம் இருந்தால் இத்தகைய பொறுப்புக்களை நாம் ஏற்றுக் கொள்ளக் கூடாது. இதெல்லாம் நம்மால் ஆகாத காரியம் என யோசித்து நாம் செய்யும் பணிகளைக் குறைத்திருக்க வேண்டும். அரசாங்கம் பல்வேறு துறைகளில் தீவிரமாக ஈடுபட்டு பல்வேறு பணிகளைச் செய்ய வேண்டுமென்று சொல்கிற கட்சிகள் இதை மிகவும் ஆழ்ந்து யோசிக்க வேண்டியதொரு கட்டம் ஏற்பட்டிருக்கிறது என்று நான் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். முக்கியமாக ஒரு சில பகுதிகளில் அல்ல இந்த வேலை நிறுத்தம் ஏற்பட்டது. அது, பொது வேலை நிறுத்தம். இதைத் திரும்பத் திரும்ப எடுத்துச் சொல்லக் காரணம், வெறுமனே அரசியல் வாதிகள் தலைவர்களாக இருந்தார்கள் என்ற காரணத்திற்காக அல்ல. அது ஒரு புறமிருக்க அடிப்படை நோக்கம், அடிப்படை முறைகள் எவை எவை கையாளப்பட்டன என்று யோசித்துப் பார்த்தால் உண்மையில் ஏதோ தொழிலாளர்களுக்காக அவர்களின் உரிமைக்காக, அவர்களுக்கு அதிகச் சலுகை பெறுவதற்காக ஏற்பட்ட வேலை நிறுத்தம் இது என்று இதை யாரும் ஒப்புக் கொள்ளவே முடியாது. மத்திய சர்க்காரில் பணியாற்றக் கூடியவர்களுக்கு ஏற்பட்ட கஷ்டத்தையொட்டி பே கமிஷன் நியமிக்கப்பட்டது. அவர்கள் சிபாரிசு செய்து அந்தச் சிபாரிசுகள் பூராவும் அமுலுக்குக் கூட வரவில்லை. அவை அமுலுக்கு வந்த பிற்பாடு, இதன் மூலம் நன்மை ஏற்படும் என்று நினைத்தோம். ஆனல் அதனல் நன்மை ஏற்படவில்லை, இன்னென்ன

கஷ்டங்கள் இருக்கின்றன, இவைகளைத் தீர்க்க வேண்டுமென்று சொல்லி ஏதாவது நடவடிக்கைகள் எடுத்திருப்பார்களேயானால் அது தொழிலாளர்களின் நன்மையைப் பாதுகாக்கக் கூடியது. அவர்கள் கஷ்டங்களைத் தீர்க்க எடுக்கும் நடவடிக்கைகள் இது என்று சொல்லலாம். ஆனால் அவை பரிசீலனையில் இருந்து அவை பூராவும் தீர்க்கப் படவில்லை. அவைகளை எல்லாம் உடனடியாக நிறைவேற்றவேண்டுமென்று சொல்கிற ஸ்ட்ரைக் அல்ல இது. கொடுக்கப்பட்டிருக்கிற சலுகை போதாது, இன்னும் அதிகப்படியாக வேண்டுமென்று கேட்கக்கூடிய நிலை ஏற்பட்டது. இப்பொழுதுதான் நான் தொழில் அமைச்சர் அவர்களைக் கேட்டேன், தொழிலாளர்கள் என்று சொன்னால் ஏதாவது ட்ரிப்யூனல் ஏற்படுத்தி தீர்ப்புச் சொன்னால் அது எவ்வளவு ஆண்டுகள் செல்லும் என்று கேட்டேன். ஒரு வருடம் செல்லும் அதற்கு மேல் இரண்டு வருடங்களுக்கு நீடிக்கச் சட்டம் இடம் கொடுக்கிறது என்று அவர்கள் சொன்னார்கள். இதுவோ அமுலுக்கு வரவேயில்லை. அதற்கு முன்பே வேலை நிறுத்தம் ஏற்பட்டது. இது சட்ட விரோதம் என்பது ஒருபுறமிருக்க அதன் உண்மை நோக்கு தொழிலாளர் உரிமைக்காக அல்ல, வேறு நோக்கமாகத்தான் இருக்க வேண்டுமென்கிற முடிவுக்கு வர வேண்டியிருக்கிறது. அந்த அடிப்படையில் இதை யார் முடிவு செய்தார்கள் என்பது பற்றி திரு. ராமசந்திரன் அவர்கள் அவர்களுக்குத் தெரிந்ததை விளக்கினார்கள். ஸ்ட்ரைக் வேண்டுமா, வேண்டாமா என்று கேட்டதாகத் தெரியவில்லை, அவர்கள் முழித்துக் கொண்டிருந்தார்கள், என்ன செய்யப் போகிறார்கள் என்று தெரியவில்லை, ஆக கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது மாதிரி பல ஊழியர்கள் இருந்தார்கள் என்று அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். "கௌன்சில் ஆப் ஆக்ஷன்" என்று வைத்துக்கொண்டு எப்படி இருந்தாலும் சரி இந்த வேலை நிறுத்தம் செய்தேயாக வேண்டுமென்று அவர்களால் முடிவு செய்யப்பட்டது. எதற்காக எந்தச் சூழ்நிலையில் இந்த முடிவு செய்யப்பட்டது என்று பார்க்கும்போது இது அரசியல் நோக்கத்தோடு ஏற்பட்ட வேலை நிறுத்தமே தவிர வேறு ஒன்றுமல்ல என்று முதலில் முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. இதோடு இன்னொரு கோணத்திலும் பார்க்கலாம். இன்று அரசாங்கத்தில் பணியாற்றக் கூடியவர்களுக்குச் சம்பளம் கொடுக்கக் கூடியது, எவ்வளவு கொடுக்க வேண்டும், எந்த விதத்தில் கொடுக்க வேண்டும் என்பது பற்றிக் கடைசியாக முடிவு செய்ய வேண்டியது எது? பார்லிமெண்ட். நாம் ஏற்றுக் கொண்டிருக்கக் கூடிய அரசியல் முறைப்படி ஜனப்பிரதிநிதிகள் கொண்ட பார்லிமெண்ட் செய்வதுதான் கடைசி முடிவு. அந்தப் பார்லிமெண்டைப் பணிய வைத்து, அல்லது வேறு பல முறைகளை உபயோகப்படுத்தி, நிர்ப்பந்த முறைகளைப் பயன்படுத்தி அவர்கள் சரி என்று நினைக்காத முடிவை எடுக்க வேண்டுமென்ற முறையில் நடவடிக்கைகள் எடுத்தால் அது ஜனநாயக அடிப்படைக்கு விரோதமானது. இன்று கொடுக்கக்கூடிய சம்பளம் போதுமா, போதாதா, இன்றைய நாட்டு நிலைமைக்கு எந்த அளவிற்கு இவர்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று முடிவு செய்ய வேண்டியது, பார்லிமெண்ட். இந்த ஸ்ட்ரைக் செய்ய வேண்டுமென்று முடிவு எடுத்தவர்கள் கூட பலர் பார்லிமெண்டில்

இருக்கக் கூடியவர்கள். அங்கு எடுத்துச் சொல்லி அங்குள்ள மக்கள் பிரதிநிதிகளுக்கு எதிராக, விரோதமாக முடிவு செய்வதாகயிருந்தால் அல்லது வேறு விதமாக மாற்றவேண்டுமென்ற முறையில் நேர் நடவடிக்கைகள் எடுத்தால் அது தொழிலாளர் உரிமை அல்ல, அது ஒரு பெரிய அரசியல் நடவடிக்கை என்பதைத்தான் இங்கு நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். ஆக, அரசாங்கத்தைப் பணிய வைத்து ஒரு முடிவு எடுக்க வைத்து அதன்படி பார்லிமெண்ட் ஒரு முடிவு செய்து வைக்க வேண்டும். அவர்கள் எண்ணம் வேறு எதுவாகயிருந்தாலும் சரி, வெளி நடவடிக்கைகள் எடுப்பதால், அப்படி எடுத்து பார்லிமெண்டை வேறு விதமாக முடிவு செய்ய பணிய வைக்க வேண்டுமென்று முயற்சி செய்வது பார்லிமென்ட்டரி டெமாக்ரசிக்கு—வேறு அடிப்படையில் இருந்தால் எப்படியோ--பார்லிமென்ட்டரி டெமாக்ரசிக்கு—அது விரோதமானது. அப்படி எடுப்பது தொழிலாளர் உரிமைக்காக அல்ல, அது அரசியல் நடவடிக்கை என்பதை நான் வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இன்று விலைவாசி ஏறிக்கொண்டே போகிறது, ஆகவே தொழிலாளர்களுக்குக் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது, ஆகவே தான் வேலை நிறுத்தம் செய்தார்கள் என்று கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். வாஸ்தவம் ஆனால் 'விலையை எப்படி கட்டுப்படுத்த வேண்டும்? எந்த முறையில் கட்டுப்படுத்துவது' என்பதெல்லாம் பொருளாதார அடிப்படையில் நாம் யோசிக்க வேண்டியது. கடைசியாக முடிவு எடுக்க வேண்டியது பார்லிமெண்ட். கட்டுப்பாடு வேண்டுமா, அதை எந்த விதத்தில் செய்வது, இப்பொழுதுள்ள நிலையில் கட்டுப்பாடு இல்லாமல் செய்து கொண்டு போகலாமா என்பதைப் பற்றியெல்லாம் செய்து கொண்டு போகலாமா என்பதைப் பற்றியெல்லாம் பார்லிமென்ட்தான் முடிவு எடுக்கவேண்டும். ஆனால் அரசாங்க ஊழியர்கள், கட்டுப்பாடு வந்துதானாக வேண்டும், அல்லது வேறு விதமான நடவடிக்கைகள் எடுக்கத் தான் வேண்டுமென்கிற முறையில் தங்கள் வேலை நிறுத்தம் மூலம் அதை நிறைவேற்ற வேண்டுமென்று வரும்போது, அவர்கள் பார்லிமெண்ட் செய்ய வேண்டிய வேலையை, மக்கள் பிரதிநிதிகள் செய்ய வேண்டிய வேலையை, அரசியல் அமைப்பின் கீழ் செய்ய வேண்டிய வேலையை அவர்கள் தாங்களே ஏற்று "இந்த பார்லிமென்ட்டுக்கு யோக்கியதையில்லை, இந்த பார்லிமென்டில் இருக்கிறவர்களுக்கு அறிவு இல்லை, ஆகவே நாங்கள் இந்த நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தித்தான் விலைக் கட்டுப்பாட்டை ஏற்படுத்துவதற்கு முயற்சி செய்யவேண்டும் என்று சொல்லும்போது அது தொழிலாளர் இயக்கம் அல்ல, பெரிய அரசியல் நடவடிக்கை. அதோடு மட்டுமல்ல. இன்று அதிக ஊதியம் வேண்டுமென்று கேட்கிறார்கள். பொது வேலை நிறுத்தம் என்ற முறையில் 'ரயில் ஓடக் கூடாது, தந்தி போகக் கூடாது, தபால் போகக் கூடாது, விமானம் ஓடக் கூடாது, மத்திய அரசாங்கத்தைச் சேர்ந்த எந்தப் பணி நிலையங்களும் வேலை செய்யக் கூடாது' என்கிறார்கள். அதன் மூலம் என்ன நேர்ந்திருக்கும்? அவர்கள் இதில் வெற்றி பெற வேண்டுமென்ற நோக்கத்தோடு செய்திருப்பார்கள், அதற்கு வேண்டிய ஆயத்தங்களும் செய்திருப்பார்களா என்பது கம்யூ-

[Sri C. Subramaniam] [11th August 1960

னிஸ்ட் கட்சிக்கும், பிரஜா சோஷியலிஸ்ட் கட்சிக்கும் இடையே உள்ள கருத்து வேறுபாடாகயிருக்கலாம். வேலை நிறுத்தத்தின் நோக்கம், ரெயில் போவது, தந்தி போவது எல்லாம் ஸ்தம்பித்துப் போக வேண்டுமென்ற முறையில் ஏற்படுத்த வேண்டுமென் பதற்காக ஏற்பாடு செய்தார்கள். அப்படி நின்று போனுல் நாட்டின் பொருளாதாரம் என்னவாகியிருக்கும்? உற்பத்தி எவ்வளவு குறைந்திருக்கும்? சர்க்கார் வருமானம் எவ்வளவு குறைந்திருக்கும்? சர்க்கார் வருமானம் குறைந்த பிற்பாடு, நாட்டின் பொருளாதாரம் பாதிக்கப்பட்ட பிற்பாடு எப்படி அதிக மாக இவர்களுக்கு ஊதியம் கொடுக்க முடியும்? ஆக, ஊதியம் அதிகம் வேண்டுமென்று நினைத்திருப்பார்களேயானுல் அதை சர்க்கார் கவனத்தில் கொண்டு வர ஒரு நாள் அல்லது இரண்டு நாட்கள் வேலை நிறுத்தம் செய்திருக்கலாம். அப்படியில்லாமல் நீடித்த பொது வேலை நிறுத்தம் என்ருல், அவர்கள் எடுத்த நட வடிக்கைகள் மூலம் அதிக ஊதியம் என்பது இருக்க, இப் பொழுது கொடுக்கக் கூடிய ஊதியம் கூட கொடுக்கக் கூடிய நிலைமையை பாழ்படுத்தக் கூடிய நிலைமையை ஏற்படுத்தும் நிலை யில் அவர்கள் நடவடிக்கைகள் இருந்தால், ஊதியத்தை நினைத்து வேலை நிறுத்தம் செய்தார்களா அல்லது சர்க்காரைக் கவிழ்க்க வேண்டும், இன்றுள்ள அரசியல் அமைப்பையே மாற்றவேண்டு மென்று முன்வந்தார்களா? ஆக, அது தொழிலாளர்களுக்காக செய்யப்பட்ட வேலை நிறுத்தம் அல்ல, அரசியல் அமைப்பை மாற்றியமைக்க வேண்டுமென்ற நோக்கத்தை மனதில் வைத்துக் கொண்டு, அதை வெளியில் சொல்லாமல் மற்றவர்களை இந்த வழி யில் இட்டுச் சென்றிருப்பார்கள் என்று ஊகித்தால் அது தவறு என்று சொல்ல முடியாது. திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னுர்கள், அப்படி நினைத்திருந்தால் ஆயத்தங்கள் செய்யா மல் அதற்கு வேண்டிய முன்னேற்பாடு இல்லாமல் இறங்கியிருப் பார்களா என்று கேட்டார்கள்.

11 30 a.m. ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு "Who dares call treason, when it succeeds," இராஜாங்கத் துரோகம், அரசத் துரோகம், சதி என்றெல்லாம் சொல்லும்போது இவைகள் எல்லாம் ஜெயித்து விட்டால் சதியாகாது. அது தோற்று விட்டால்தான் சதி யாகும். "when you are tried for treason" இதைப் பொறுத்த வரையில் நாம் தோற்றுப் போய் விட்டோம், ஆகவே இதை எப்படிச் சதி என்று சொல்லுவது, ஆகவே இதை அடிப்படை யாக வைத்துக்கொண்டு வாதாடுவது சரியல்ல என்பதைத்தான் நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். திரு. கல்யாண சுந்தரம் அவர்கள் அவர்களுடைய கட்சியைப்பற்றி சொன்னுர். அவர்களுடைய கட்சி சொன்னது என்னவென்ருல், "நாங்கள் வேலை நிறுத்தம் செய்திருந்தால், இப்படியா செய்திருப்போம், அதுவும் இப்போதா செய்திருப்போம்" என்று சொல்லியிருக் கிருர்.

SRI M. KALYANASUNDARAM : நான் அவ்விதம் ஒன்றும் சொல்லவில்லையே.

[11th August 1960]

**THE HON. SRI C. SUBRAMANIYAM** : திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் சொல்லாவிட்டாலும் அவர்களுடைய கட்சி இப்படித் தான் சொல்லியிருக்கிறது. . . . .

**SRI V. K. KOTHANDARAMAN** : தனிப்பட்ட முறையில் யாராவது சொல்லி இருந்தால் அதைக் கேட்டுவிட்டு சபையில் வந்து ஞாபகப்படுத்திப் பேசுவது சரியா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM**: தனிப்பட்ட முறையில் சொல்லப்பட்டது அல்ல. 'உங்கள் கட்சி' தான் இவ்விதம் சொல்லியிருக்கிறது, வெளியிலுள்ள கருத்துக்கள் இந்தச் சபையில் வந்த பிறகு மாறுகிறது, அல்லது அதில் மயக்கம் ஏற்படுகிறது என்றால் அதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஏதோ சோஷியலிஸ்டுகள், பிரஜா சோஷியலிஸ்டுகள், லோகியா கட்சிக்காரர்கள் இவர்கள் எல்லாம், ஷர்டுகளை இழுப்பார்கள், கையைப்பிடித்து இழுப்பார்கள், மயிரைப்பிடித்து இழுப்பார்கள். ஆனால் கம்யூனிஸ்டு கட்சிக்காரர்கள் குரல்வளையையே பிடித்து நெறிப்பார்கள். அரசாங்க ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்வது தப்பு, அவர்கள் இப்படிப்பட்ட வேலை நிறுத்தங்களில் ஈடுபட்டால் நம்முடைய திட்டங்கள் எல்லாம் நிறைவேற முடியாமல் போகும். ஆகவே இந்த சந்தர்ப்பங்களில் எல்லாம் வேலை நிறுத்தம் செய்யக் கூடாது என்கின்ற அடிப்படையில் கம்யூனிஸ்டு கட்சிக்காரர்கள் சொல்லவில்லை. எப்படிப்பட்ட சமயத்தில் எவ்வாறு சர்க்காரை நசுக்கிவிடலாம் என்கின்ற முறையில் யோசனை சொல்லக்கூடியவர்கள் அவர்கள். ஆனால் இன்றைக்கு இருக்கின்ற அரசியல் அமைப்பை ஒத்துக்கொண்டு, அதற்கேற்ற ஜனநாயக முறையில் நம்பிக்கைக் கொண்டவர்கள்-(குறுக்கிடு)-பழனிசாமி அவர்களுக்கு வேண்டுமானால் இதைப்பற்றி தெரியாமல் இருக்கலாம், திரு. கல்யாணசுந்தரம் அவர்களுக்குத் தெரியும்.-இந்த ஜனநாயக அடிப்படையில் நாட்டை நடத்திச் செல்ல வேண்டும் என்று நினைக்கும்போது, இது மாதிரி அரசாங்க ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்யலாம் என்கின்ற உரிமை இருக்கவேண்டும். அவ்வித உரிமை இல்லாமல் இருப்பது ஜனநாயகத்திற்கு விரோதமானது என்று சொல்லக்கூடிய கூற்றை இன்று நாம் பார்க்கின்றோம். நான் வெகு தாழ்மையுடன் சொல்ல விரும்புவது, இம்மாதிரியான பொது வேலைநிறுத்த உரிமை வேண்டும் என்று சொல்லுவது, நாம் ஏற்றுக்கொண்டிருக்கிற ஜனநாயகத்திற்கு மிக பாதகமானது என்பதைத்தான். மற்ற நாடுகளில் எல்லாம் இதைப்பற்றிப் பேசவே முடியாது, இன்றைக்கு கம்யூனிஸ்டு நாடுகளை எடுத்துக்கொண்டால் அரசாங்க ஊழியர்களுடைய வேலை நிறுத்தத்தை விட்டு விட்டாலும் கூட, தொழில் நிலையங்களில்கூட இம்மாதிரியான வேலை நிறுத்தத்தைப்பற்றி பேச முடியுமா என்பதைப்பற்றிப் பார்த்தால் அது முடியாத காரியமாகத்தான் இருந்து கொண்டிருக்கிறது. ஆகவே இன்றைக்கு வேலைநிறுத்த உரிமை இருக்கக் கூடாது என்று சொல்லுவது ஜனநாயகத்திற்கு விரோதமானது என்று கம்யூனிஸ்டு கட்சியோ அல்லது கம்யூனிஸ்டு கட்சியிலுள்ளவர்களோ நினைத்துக்கொண்டு பேசுவார்களானால், அது ஒரு

[Sri C. Subramaniam] [11th August 1960

விநோதமான காட்சி என்று தான் எடுத்துக்கொள்ளவேண்டி இருக்கிறது அல்லது அதைத் தெரிந்தும் இப்படி பேசிக்கொண் டிருப்பார்களானல் அது நம்மைப்பார்த்து கேலி செய்வதற் காகவோ அல்லது ஏமாற்றுகின்ற முறையிலோ தான் சொல்லு வதாக எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. இன்றைக்கு இந்த அடிப்படையில் யோசனை செய்து பார்க்கின்ற நேரத்தில் மக்க ளுடைய பிரதிநிதிகள் அடங்கிய இந்தச் சபை, மக்களுடைய திட்டங்களை எல்லாம் நிறைவேற்ற வேண்டுமென்று வேலை செய்து கொண்டிருக்கும்போது, அரசாங்க ஊழியர்களின் ஊதி யத்தை அல்லது தொழிலாளர்களின் ஊதியத்தை எந்த அளவுக்கு உயர்த்திக்கொடுக்கலாம் என்பதைப்பற்றி முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. நம்முடைய ராஜ்யத்திலுள்ள இந்தச் சபைக்கு நம் மாகாணத்தைப் பொறுத்த வரையிலும், இந்தியா வைப் பொறுத்த வரையில், பார்லிமெண்ட் சபைக்கும் பொறுப்பு இருக்கிறது. இன்றைக்கு அரசாங்க ஊழியர்கள் வேலை நிறுத் தங்களில் ஈடுபடக்கூடாது, அதிலும் மிக முக்கியமான பணிகளில் ஈடுபட்டிருக்கக்கூடியவர்கள் இம்மாதியான வேலை நிறுத்தங் களில் ஈடுபடக்கூடாது என்று ஒரு முடிவுக்கு வரக்கூடாது என்று சொல்லுவது மிகவும் வருந்தத்தக்க விஷயம். திரு. கல்யாண சுந்தரம் அவர்கள் 'பிரான்ஸ், மற்றும் ஏதோ ஒன்றிரண்டு வெளி நாடுகளை எல்லாம் பாருங்கள் என்றும், அந்த நாட்டில் எல்லாம் இதற்கு உரிமை கொடுத்திருக்கிருர்கள், அப்படியானல் ஏன் நாம் அனுமதிக்கக்கூடாது' என்பதைப்பற்றி சொன்னுர்கள். அதே சமயத்தில், நம் நாட்டில் இருக்கின்ற நிலைமையையும், மற்ற நாடுகளில் இருக்கின்ற நிலைமையையும் நாம் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். அதிலும் முன்னேற்றம் அடைந்து, தொழில் துறையில் எவ்வளவோ முன்னேற்றம் அடைந்து உற்பத்தி பெருகி உயர் நிலைமையில் இருக்கின்ற நாடு வேறு. அதே நேரத்தில், பல காலமாக அரசியல் அடிமைகளாக இருந்து இன்றைக்குச் சுதந்திரம் பெற்று 'பொருளாதார முன்னேற் றத்தை கொண்டு வரவேண்டும், சுபீட்சத்தை ஏற்படுத்த வேண் டும்' என்று வேலை செய்து கொண்டிருக்கின்ற நம்போன்ற நாடு கள் வேறு. ஒரு பணக்காரன் இருக்கிறுன், அவனுக்கு ஒரு வருஷத்திற்கு வியாபாரம் ஒன்றும் செய்ய வேண்டாம் என்று நினைத்து சும்மா இருந்தாலும் அவனுக்கு எந்தவிதமான பாத கமும் ஏற்படாது. அவனுக்கு வேண்டிய சொத்து இருக்கிறது அல்லது வேறு விதமான வியாபாரம் ஆரம்பித்தாலும் அதில் நஷ்டம் ஏற்பட்டாலும், அதை ஈடு செய்வதற்கு அவனிடம் போதிய பணம் இருக்கிறது. ஆதலால் அவனுடைய வாழ்க்கை யில் கொஞ்சம் நஷ்டம் ஏற்பட்டாலும் அது அவனுடைய வாழ்க் கையை பாதிக்காது. அவ்வாறு இல்லாத அன்றுடக் கூலி செய்து பிழைக்கக்கூடிய ஒருவன் தானும் அந்தப் பணக்காரனைப் போல் ஓய்வு எடுத்துக்கொண்டு அமெரிக்கா போகிறேன் என்று சொன்னுல் அவனுடைய வாழ்க்கை என்ன ஆவது என்பதைப் பற்றி ஆலோசிக்க வேண்டும். இந்த நிலைமையில் தான் நாம் இன்றைக்கு இருந்து கொண்டிருக்கிறும். வறுமையை நீக்கி புதிய ஒரு பொருளாதார அமைப்பைக் கொண்டு வர வேண்டும், அதற்கான பொருளாதார அபிவிருத்தி ஏற்படவேண்டும்,

11th August 1960] [Sri C. Subramaniam]

அதற்காக எடுத்துக்கொண்டிருக்கிற முயற்சிகள் எல்லாம் வெற்றி பெறச் செய்து பின்னல், அமெரிக்காவைப்போல், ரஷ்யாவைப் போல் நாம் இருப்பதில் எந்தவிதமான தவறும் இல்லை. அவர்கள் அடைந்திருக்கக்கூடிய முன்னேற்றத்தை நாம் இன்னும் அடைய வில்லை. நாமும் அவர்களைப்போல் முன்னேற்றம் அடைந்துவிட்ட பிறகு என்ன சட்டங்களை வேண்டுமானாலும் போட்டு வேலை நிறுத்தங்களை அனுமதித்துக்கொண்டிருக்கலாம். ஆனல் இன்றைக்கு நிலைமை அவ்வாறு அல்ல. வறுமையை நீக்கிக் கொண்டு பொருளாதார அபிவிருத்தி ஏற்படவேண்டும் என்று நாம் வேலை செய்து கொண்டிருக்கிறோம், அதற்கான திட்டங்களை மேலும்மேலும் போட்டுக்கொண்டிருக்கிறோம். இவைகள் எல்லாம் எந்தவிதத்திலும் பாதிக்கப்படலாகாது என்பதை நாம் அனைவரும் மனதிலிருத்திக்கொள்ளவேண்டும். இந்தத் திட்டங் களுக்கு எதிராகவுள்ள காரியங்களை யார் செய்வதாக இருந் தாலும் சரி, தொழிலாளர்களாய் இருந்தாலும் சரி, முதலாளி களாய் இருந்தாலும் சரி, யார் வேலை நிறுத்தத்திற்குக் காரண மாய் இருந்தாலும் அது உற்பத்தியை பாதிப்பதாக இருக்கும், இதற்காக யாரும் ஜோஸ்யம் கேட்கத் தேவையில்லை. உற்பத்திப் பெருக்கம் மிகவும் அவசியம் என்று நினைக்கின்ற பொழுது, இம்மாதிரிப்பட்ட வேலை நிறுத்தங்களைத் தடுக்க முடியாதா என்ப தைப்பற்றியும் நாம் ஆலோசிக்கவேண்டும். அரசாங்கத்துறையில் மட்டுமல்ல, தனியார்த் துறையிலும் இதைத் தவிர்க்க முடியாதா என்பதைப் பற்றியும் நாம் பரிசிலனை செய்து பார்க்கவேண்டும். பொதுவாக, நாட்டில் தொழில்கள் மேலும் மேலும் பெருக வேண்டும் என்ற அடிப்படையில்தான் நாம் திட்டங்களை எல்லாம் போட்டு நிறைவேற்றிக்கொண்டு வருகிறோம். அதிலும் தொழி லாளர்களுக்கு ஏதேனும் குறைகள் இருந்தாலும் அவைகளை வேலை நிறுத்த முறைகள் அல்லாமல் வேறு ஏதாவது முறைகளினல் தவிர்க்க முடியாதா என்பதைப்பற்றியும் நாம் ஆலோசனை செய்ய வேண்டும். அதைப் பார்க்கும்பொழுது, இன்னும் பத்து அல்லது பதினைந்து அல்லது இருபது ஆண்டுகளுக்கு, மற்ற நாடுகளைப் போல் பொருளாதார உயர்வு அடைகின்ற வரையில் நாம் வேலை நிறுத்த முறைகளைக் கையாளலாமா என்பதைப்பற்றி யோசித்துப் பார்க்க வேண்டும். அதற்கு நாம் கடமைப்பட்டிருக்கிறோம், அதற்காகத் தொழிலாளர்களுடைய நலத்தையே பார்க்கவேண் டாம் என்று சொல்லவில்லை. தொழிலாளர்களுக்கு ஊதியத்தை அதிகப்படுத்தி கொடுக்கவேண்டாம் என்று அர்த்தமல்ல. கொஞ்சம் ஊதியத்தை அதிகப்படுத்துவதற்கு இம்மாதிரியான வேலைநிறுத்த முறைகளைத் தான கையாள வேண்டும், வேறு வழி கள் ஒன்றுமேயில்லையா என்பதைப்பற்றி நாம் யோசித்துப் பார்க்கக் கடமைப்பட்டிருக்கிறோம். எல்லாவற்றிற்கும் மேலாக சட்டம் செய்வதற்கான உரிமைகளை நாம் வைத்துக்கொண்டிருக் கிறோம். அதே போன்று பார்லிமெண்ட் சபைக்கும் இதற்கான அதிகாரம் இருக்கிறது. இதையெல்லாம் பரிசிலனை செய்து பார்த்துத் தொழிலாளர்களுக்கு ஊதியம் கூட்டிக் கொடுக்க வேண்டும் என்று நிர்ணயிக்கும்போது, அதற்கான நடவடிக்கை களைச் செய்வதற்கு நமக்குப் பூரணமான அதிகாரம் இருக் கின்றது. அதற்காக உற்பத்தியைப் பாதிக்கின்ற முறைகளைக்

[Sri C. Subramaniam] [11th August 1960

கையாள வேண்டுமா என்று பார்க்கின்றபொழுது, அது அவசியமில்லை, இதைத் தவிர்க்கலாம் என்ற முடிவுக்கு நம்மால் வரமுடிகின்றது. அதன் மூலமாகத்தான் நாம் முதலீடு செய்திருக்கின்ற பல தொழில்களையும் முன்னேற்ற மடையச் செய்யமுடியும். அதோடு அனைவரும் அனுசரிக்கக்கூடிய முறையில், நமக்கு ஏற்ற முறையில் சட்டங்களை வகுத்துக்கொள்ள வேண்டும் என்ற கருத்தை இந்தச் சபை முன்னும் மக்கள் முன்னும் வைக்க விரும்புகிறேன். இதிலே இருக்கக்கூடிய கஷ்டம் என்ன என்று சொன்னால், இன்றைக்குத் தொழிலாளர் களுக்கு ஒரு சட்டம் வரவேண்டுமென்று சொன்னவுடனேயே முதலாளிகள் என்ன நினைத்துக் கொள்கிறார்கள் என்று சொன்னால் 'தொழிலாளிகளுக்கு அதற்கு மேல் ஊதியம் கொடுக்கவேண்டிய தில்லை' என்று எண்ணிக்கொண்டு விடுகிறார்கள். தொழிலாளி களும் லாபம் வந்தாலும், லாபம் வராவிட்டாலும் தாங்கள் நினைத்த அளவுக்கு ஊதியம் தங்களுக்குக் கிடைக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். ஆகையால்தான் இதையெல்லாம் ஆலோசனை செய்து ஒரு சட்ட அமைப்பை ஏற்படுத்த முடியுமா, நாம் ஒரு கொள்கையை வகுத்துக் கொள்ளமுடியுமா என்று ஆலோசிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். இதைப் பற்றி ஆலோ சிக்கும்போது, அந்த அடிப்படையில் வேலை நிறுத்தம் கூடாது என்று சொல்லும்போது, அதனால் உற்பத்திப் பெருக வேண்டு மென்பதோடு, தொழிலாளிகளுக்கு எந்தவிதமான பாதகமும் எல்லாவிதமான சௌகரியங்களும் கிடைக்கக்கூடிய முறையில் இதன் மூலமாக ஏற்பாடு செய்யவேண்டிய அவசியம் ஏற்படு கிறது. அதையனுசரித்துச் செய்வோமானால் நாம் ஒரு நல்ல முடிவுக்கு வரமுடியும் என்று கருதுகிறேன். இதைப்பற்றி மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை ஆரம்பிக்கும்நிலையில் இருக்கிற இந்தக் காலத்தில் நன்றாக யோசித்துப் பார்க்க வேண்டும்.

அடுத்தபடியாக, இதற்கெல்லாம் அடிப்படையாக இருக்கக் கூடிய காரணம் எது? எல்லோரும் சொன்னார்கள் இந்த விலை உயர்வு காரணத்தினால்தான் ஊதியம் அதிகமாகக் கேட்கவேண்டி யதாக இருக்கிறது என்று. இதைப் பற்றி எல்லோரும் சொன்னார்கள். இதிலே கருத்து வேற்றுமையே கிடையாது. ஆனால் இன்றைக்கு இந்த விலை உயர்வை எப்படித் தடுப்பது என்று யோசித்துப் பார்க்கவேண்டும். இப்படி எந்தக் காரணத்தினால் தான் ஏற்படுகிறது என்பதையும் யோசித்துப் பார்க்கவேண்டும். ஏற்படாமல், தொழிலாளிகளுடைய உரிமை பாதிக்கப்படாமல், அதற்குப் பிறகு இதை எப்படித் தடுப்பது என்று யோசித்துப் பார்க்கவேண்டும். நாட்டிலே இருக்கக்கூடிய விலை உயர்வுக்குக் காரணம் பண வீக்கம் என்று சொல்லி, இந்தப் பண வீக்கம் என்ன காரணத்தினால் ஏற்பட்டிருக்கிறது என்று சுதந்திரா கட்சி சொல்லுகிறது என்றால், பெரிய திட்டங்களை நிறைவேற்றுகிற போது, அதிலிருந்து உடனடியாகப் பலன் ஏற்படாதபோது பண வீக்கம் ஏற்படுகிறது, அதனால் விலை உயர்வு ஏற்படுகிறது என்று-- ஒப்புக்கொள்ளுகிறேன். நாமெல்லோரும் யோசித்துப் பார்க்க வேண்டும். திட்டங்கள் எதையும் நிறைவேற்றாமல், பெரும்

11th August 1960] [Sri C. Subramaniam]

தொழில்கள், பெரிய அணைக்கட்டுத் திட்டங்கள், பெரிய மின்சாரத் திட்டங்கள் எதையும் ஏற்படுத்தாமல், பழைய காலத்தில் இருந்த மாதிரி போகலாம்—அதுதான் சுபீட்சம்—என்று மாற்றிக் கொள்வோமா என்று யோசித்துப் பார்க்கவேண்டும். முன்பு அரிசி நான்கு அணவிற்கு விற்று வந்தது. அரிசி நான்கு அணவிற்கு விற்ற காலம் இருந்ததே அதுதான் சுபீட்ச காலம் என்று சொல்ல முடியுமா? அப்போது எத்தனை பஞ்சங்கள் வந்தன? எத்தனை லட்சக்கணக்கான மக்கள் நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை, ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை பஞ்சம் வந்து இறந்திருக்கிருர்கள். அரிசி விலை குறைவாகத்தான் இருந்தது அப்போது. விலை குறைவாக இருந்தது என்பதற்காக அதை சுபீட்ச காலம் என்று சொல்ல முடியுமா? இன்றைக்கு உற்பத்தி எந்த அளவுக்குப் பெருகுகிறதோ அந்த அளவுக்குத்தான் சுபீட்சமே தவிர, பணம் என்பது மத்தியில் இருக்கக்கூடிய ஒரே காரணம் தான். இதிலே அடிப்படையாக இருக்கக்கூடியது உற்பத்தி. உற்பத்தி இருந்தால்தான் பஞ்சமும் பட்டினியும் ஒழியும். அப்போதுதான் எல்லோரும் வயிராறச் சாப்பிட முடியும், நல்ல உடை உடுத்திக்கொள்ள முடியும், வீடு கட்டிக்கொள்ள முடியும், ரோடுகள் போட்டுக் கொள்ள முடியும், கார்களை வைத்துக்கொள்ள முடியும், ஏரோப்ளான்களைக்கூடப் பயன்படுத்தமுடியும். உற்பத்தி இல்லாமல் இவைகளையெல்லாம் குறைத்துக்கொள்ளலாம், விலையைக் குறைத்துக் கொள்வோம் என்று சொன்னல் அது சுபீட்சம் ஆகாது. பழைய நிலையில்—பஞ்ச நிலையில்—எல்லோரும் இருக்கலாம், ஆண்டவன் விட்டவழி என்று. இந்த இரண்டு பஞ்சம் வந்தால் இன்னொரு ஆண்டு மழை வந்துவிடும், ஆண்டவன் இப்படி விதித்து விட்டார் என்று அந்த அளவுக்கு ஒப்புக்கொண்டால் நல்லதாகி விடும். ஆனல் புதிய விதி ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்று நினைக்கிருேம். அதற்காகத்தான் அணை கட்டி, ஒரு பக்கத்தில் பெய்யக்கூடிய மழையைத் தேக்கி வைத்து மழை இல்லாத இன்னொரு இடத்திற்குக் கொண்டுபோகிருேம். அப்படியே நடந்துகொண்டு போகட்டும், இதெல்லாம் செய்ய வேண்டாமென்று சொன்னல் நாட்டின் பொருளாதாரம் உயர்ந்து, மக்களுக்கு வேண்டிய காரியங்களைச் செய்து, மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயர்வதற்கு வழியாகாது. அதற்காக திட்டங்களை நிறைவேற்றியாகவேண்டுமென்பதில் சந்தேகமில்லை. நிறைவேற்றவேண்டுமென்று சொல்லும்போது, அதனல் பண வீக்கம் வந்துவிடுகிறது—கஷ்டம் வருகிறது. சில சமயத்தில் நாம் பார்க்கிருேம், வியாதியஸ்தருக்கு இருக்கக்கூடிய பெரிய வியாதியைத் தீர்ப்பதற்கு டாக்டர் மருந்து கொடுக்கிருர். மருந்து எதற்காகக் கொடுக்கிருரோ அந்த வியாதி குறைந்தாலும் அதே நேரத்தில் புதிய வியாதிகள் வருகின்றன. வைத்தியருக்குத் தெரியும், அந்த மாதிரியான சிறு வியாதிகளைப் போக்க உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுமா அல்லது தானகப் போய் விடும் என்று விட்டுவிடலாமா என்று. பெரிய பெரிய திட்டங்களை நிறைவேற்றுகிருேம். கற்ப காலம் என்று சொல்வார்கள்—அதாவது காலம் அதிகமாக இருக்கக்கூடிய திட்டங்கள்—மூன்று ஆண்டுகள், ஆறு ஆண்டுகள் கழித்துப் பலன்

[Sri C. Subramaniam] [11th August 1960

கிடைக்கக்கூடிய திட்டங்கள், கோடிக் கணக்கில் செலவு செய்து நிறைவேற்றுகிறோம். இதனால் பண வீக்கம் ஏற்படுகிறது. ஆகையால் பக்கத்தில் போகக்கூடாது என்று சொன்னால் அவர்கள் பெரிய வியாதி அப்படியே இருக்கட்டும் என்று சொல்பவர்களாகத்தான் இருப்பார்கள். பெரிய வியாதி போகிறது, ஆனால் இன்னொரு வியாதி வருகிறது என்றாலும் அப்படியே விட்டுவிட முடியுமா? அதற்கு என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று டாக்டர் ஆலோசனை செய்து நடவடிக்கை எடுத்துக்கொள்ளத்தான் செய்வார். சிறு கோளாறு ஏற்படுகிற காரணத்தினால் அடிப்படையான காரணத்திற்கு நடவடிக்கை எடுக்கக்கூடாது என்று சொன்னால், பெரிய வியாதி அப்படியே இருந்து கஷ்டம் கொடுத்துக் கொண்டிருப்பதைப் போலத்தான் ஆகும். வறுமை தீரவேண்டுமென்று சொன்னால், அதற்கு அடிப்படையாக இருக்கக்கூடிய உற்பத்தி பெருக வேண்டுமென்றால் பெரிய தொழிற்சாலைகள், பெரிய திட்டங்கள் இவைகளை நிறைவேற்றினால்தான் முடியும் என்று நான் வலியுறுத்த விரும்புகிறேன். பண வீக்கம் ஏற்படும்போது அதை எப்படித் தடுப்பது என்பதைக் கவனிக்கவேண்டும். சில பேர்கள்—முக்கியமாக சுதந்திரா கட்சி—கட்டுப்பாடு வைக்காதீர்கள், வேறு ஏதாவது வைத்துக்கொள்ளுங்கள், கட்டுப்பாடு கூடாது, கட்டுப்பாடு வைத்தால் வேறு கஷ்டங்கள் வந்துவிடுகின்றன என்று சொல்லுகிறார்கள். கட்டுப்பாடு வைத்து நமக்கு அனுபவம் இருக்கிறது. கட்டுப்பாட்டிலே சில கோளாறுகள் இருக்கின்றன—வாஸ்தவம் தான். இந்தக் குறைகளைத் தடுக்க முடியாதா என்று யோசித்துப் பார்க்கவேண்டும். இன்றைக்கு நாம் யோசித்துப் பார்க்கும் போது, பண வீக்கத்தைத் தடுக்க வேண்டுமென்று சொன்னால், கட்டுப்பாடு இல்லாமல், முக்கியமாக விலைக் கட்டுப்பாடு இல்லாமல், அதைச் செய்ய முடியுமா என்று யோசித்துப் பார்க்கும்போது, அத்தியாவசியமான பொருள்களுக்கு விலை கட்டுப்பாடு இருந்தாகவேண்டுமென்று பார்க்கிறோம். விலை தாறுமாறாக ஏறுவதால் உற்பத்தி பாதிக்கப்படும். இன்றைக்கு ஜவுளித் தொழிலை எடுத்துக்கொள்ளுங்கள். உற்பத்தி இருந்தபோது வாங்குவதற்கு ஆட்கள் இல்லை, லாபமும் கம்மி. உற்பத்தி குறைவு, டிமாண்டும் அதிகமாக இருக்கிறது, அதனால் உற்பத்தி குறைகின்ற காரணத்தினால் அதிக லாபம் வருகிறது. (குறுக்கீடு) போன வருஷத்திற்கும் இந்த வருஷத்திற்கும் கணக்குப் பார்த்தால் போதுமான பஞ்சு இல்லாத காரணத்தினால் உற்பத்தி குறைந்திருக்கிறது. சமீபத்தில் வெளிவந்த ரிஸர்வ் பாங்க் அறிக்கையிலிருந்து இது தெரியும். அதிலும் ஏழைகள் வாங்கக்கூடிய மட்ட ரகத் துணி உற்பத்தி மிகவும் குறைந்திருக்கிறது. அவைகளின் விலை ஏறியிருக்கிறது. இருபது எண் முதல் நாற்பது எண் வரை உள்ள நூலில் தான் அதிக லாபம் இருக்கிறது. சூபர்ஃபைன் துணிகள் நெய்வதற்கு வேண்டிய பஞ்சு இல்லாமல் அதிலும் இலாபம் வருகிறது. உற்பத்தி குறையும் போது—மீதி ரகங்கள் பற்றிச் சொல்லவில்லை, பொது மக்கள் வாங்கும் ரகத்தில் உற்பத்தி குறையும்போது—அதன் காரணமாக விலை உயருகிறது. மந்திரி திரு. பட்டீல் அவர்கள்கூட உற்பத்தி பெருகி விலை சரிந்து விட்டால் எப்படி-

11th August 1960] [Sri C. Subramaniam]

முட்டுக்கட்டை கொடுப்பது என்று சொல்லுகிறார்கள். அது எந்த காலத்தில் வருகிறதோ அதைப் பின்னால் பார்த்துக் கொள்ளலாம்.

இன்றைக்கு இருக்கக்கூடிய நிலையில் விலைக்கட்டுப்பாடு இல்லாமல் இஷ்டம்போல் மேலும் போகலாம், கீழும் போகலாம் என்பதால் உற்பத்தி பாதிக்கப்படுகிறது. திரு. கருத்திருமன் பொருளாதாரம்கூட அது மாதிரிதான்—விலை அதிகமாக இருந்தால் உற்பத்தி செய்ய ஊக்கம் இருக்கிறது என்று சொல்கிறார். உற்பத்தி பெருகப்பெருக விலை குறைந்தால்தான் நல்லது. இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையில் உற்பத்தி குறைவாகவும் விலை அதிகமாகவும் இருக்கிறது. இதையெல்லாம் அனுசரித்தே விலை நிர்ணயக் கொள்கை அவசியம் என்று முடிவு செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம். விலை சரிந்து போகாமல் இருக்க என்ன ஏற்பாடு செய்யவேண்டும்? ஜவுளித் தொழிலாக இருந்தாலும், அத்தியாவசியமான உணவுப் பொருள்கள் உற்பத்தியாக இருந்தாலும் அதிகமான ஏற்றத் தாழ்வுகள் இல்லாமல், குறைவான லாபம், குறைவான உற்பத்தி, அதிகமான லாபம் என்று இல்லாமல் ஒரு சரியான நிலைமையை ஏற்படுத்த வேண்டியது மிக அவசியம். அதற்காகத்தான் விலைக் கட்டுப்பாடு. காங்கிரஸ் கட்சிக்குள் மட்டுமல்ல, அதை எப்படிச் செய்கிறது என்பதைப் பற்றிய கருத்து வேறுபாடுகள் எல்லாக் கட்சிகளுக்குள்ளும் இருக்கிறது. திரு. அண்ணாத்துரையவர்கள் சொன்னதுபோல் நிபுணர்களுக்குள்ளேயே கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. நியாயமான கருத்து வேறுபாடு இருக்கும் நிலைமை இருக்கிறது. எந்தக் காரணத்தினாலாவது இதை இப்படியே விட்டுக்கொண்டு போவோமேயானால் அது நம்மையே விழுங்கி விடும். ஆகவே, கவர்னர் உரையில் மட்டுமல்ல; பட்ஜெட் உரையிலும் இதைப்பற்றி வற்புறுத்தியிருப்பதற்குக் காரணம் அதை இந்தச் சர்க்கார் எடுத்துக் காட்ட வேண்டுமென்பதற்காக அல்ல. இன்றைக்கு நாட்டு நிலைமையை ஒப்புக் கொள்ளக்கூடிய முறையில், மத்திய சர்க்காரிலே இதற்கு ஒரு முடிவு எடுத்துக் கொண்டாக வேண்டுமென்பதற்காக வலியுறுத்திக் கொண்டு வருகிறோம். இதில் இருக்கும் சிக்கல்கள் காரணமாக, பல்வேறு கஷ்டங்கள் காரணமாக ஒரு உறுதியான முடிவை உடனடியாக எடுத்துக்கொள்ளமுடியாமல் இருக்கிறது. இதை ஒத்திப் போட்டுக் கொண்டே போனால் நிலைமை மோசமாகிவிடும். நிலைமை தெளிவாகாது. ஆகையினால்தான் இதிலே நம்பிக்கையுள்ளவர்கள் எல்லாரும்—நம்பிக்கை இல்லாதவர்கள் வேண்டியதில்லை—எந்த வழி என்பதிலே கருத்து வேறுபாடு இருந்தாலும் கட்டுப்பாடு அவசியம் என்ற வகையில் வழி செய்யவேண்டும். பல முறைகளை நிபுணர்கள் காட்டியிருக்கிறார்கள். ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு விதமாக இருக்கிறது. இதையெல்லாம் பார்த்து மலைத்துப் போகாமல் ஆராய்ந்து முடிவுக்கு வந்து நடவடிக்கைகள் எடுப்போமானால் அந்த நடவடிக்கைகள் மூலமாக இதைக் கட்டுப்படுத்த முடியுமென்று நான் நம்புகிறேன். இதன் மூலம் தொழிலாளர்களுக்கும், ஏழைகளுக்கும், குறைந்த

[Sri C. Subramaniam] [11th August 1960

வரும்படி வாங்கி வாழ்க்கை நடத்துகிறவர்களுக்கும் ஒரு பெரிய பலன் ஏற்படும்; நன்மை ஏற்படும் என்பதை வலியுறுத்திச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

இந்தத் திட்டம் இது மாதிரி நடைபெற முதலீடு செய்ய வேண்டும். இது மாதிரி விலைவாசிகள் தாறுமாறாக இருந்து கொண்டிருந்தால் முதலீடு செய்வதற்கான பணத்தைச் சமுதாயத்தில் இருந்து பெறமுடியாது, என்பதைப் பற்றியும் நான் இப்போது பேசவேண்டிய அவசியமில்லையென்று நினைக்கிறேன். திட்டத்தைப்பற்றி விவாதிக்கும்போது சேமிப்பு அவசியம். அது பற்றி விரிவாகப் பேசலாம். ஆனால், இதற்கும் விலை நிர்ணயக் கொள்கை ஏற்படுத்தவேண்டியது அவசியம் என்பதை வலியுறுத்த விரும்புகிறேன். இவைகளையெல்லாம் நன்றாகக் கவனித்து, பரிசீலித்து நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று முடிவு செய்கிற காலத்திலே, விலைக் கட்டு மீறிப் போகிறது என்று சொல்லி "வேலை நிறுத்தம் செய்வோம்" என்று சொல்லும் அளவுக்குத் தொழிலாளர்களைத் தூண்டி விடக்கூடிய அரசியல் கட்சிகள் இருக்குமானால் உண்மையிலேயே அவைகள் நாட்டுக்கு நன்மை செய்யக்கூடிய கட்சிகள் அல்ல; நாட்டைப் பாழ்படுத்தக் கூடிய கட்சிகளாகத் தான் இருக்கும் என்பதைச் சொல்ல விரும்புகிறேன். இந்த மாதிரிக் குழப்பம் செய்தால்தான் தங்களுக்கு "சான்ஸ்" கிடைக்கும் என்று அவர்கள் நினைக்கலாம். வேலை நிறுத்தத்தால் தொழிலாளர்களுக்கு நன்மை கிடையாது. அதனால் கஷ்டந்தான் ஏற்படுகிறது; நாட்டின் பொருளாதாரம் பாதிக்கப் படுகிறது; உற்பத்தி பாதிக்கப்படுகிறது, பொருளாதார வளர்ச்சி தடைபடுகிறது. இதனால் மக்களுடைய வாழ்க்கைதரம் உயராமல் வீழ்ந்து போகிறது என்பதை எல்லாரும் ஒப்புக் கொள்ளுவார்கள். இந்த அடிப்படையில்தான் நாம் எல்லாரும் முடிவு எடுக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். அகில இந்திய ரீதியில் எடுக்கும் முடிவுகள் பல இருக்கும் காரணத்தால் இங்கே நாம் விவாதிப்பதன் மூலமாக, இந்தச் சூழ்நிலையை நாட்டிலே ஏற்படுத்தவேண்டும். நான் இன்னும் என்னென்ன காரியங்களைச் செய்யவேண்டும், எந்த அளவுக்குப் போகலாம் என்பதைப் பற்றியெல்லாம் உங்களுடைய யோசனைகளைச் சொல்லவேண்டு மென்ற அடிப்படையில் இந்தக் கருத்துக்களை உங்கள் முன்னால் வைக்க விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நாம் உருவாக்கிக் கொண்டிருக்கும் காலத்தில் இந்தச் சபையில் அங்கத்தினர்கள் தங்களுடைய கருத்துக்களைத் தெரிவித்துக் கொள்ள வேண்டுமென்று கவர்னர் உரையிலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதைப்பற்றி பேசும்போது, முக்கியமாக திரு. அண்ணாத்துரையவர்கள் "சொல்லி என்ன பிரயோஜனம்? சொன்னால் கிடைக்கவா போகிறது? சென்னை சர்க்கார் மந்திரிகள் இதையெல்லாம் கேட்கப் போகிறார்களா?" என்ற முறையில் பேசினார்கள். இன்றைக்கு நாம் கேட்பதெல்லாம் வந்துவிடு மென்று சொன்னால் உடனடியாக இருக்கும் குறைகளையெல்லாம்

11th August 1960] [Sri C. Subramaniam]

தீர்த்து விடலாம். நமக்கு நினைப்பதையெல்லாம் முடித்துவிடக் கூடிய சக்தி இருந்தால் உடனடியாக எல்லாவற்றையும் நிறைவேற்றிவிடலாம். இன்றைக்குப் பொதுவாக நாட்டிலே இருக்கக் கூடிய நிலைமையை அனுசரித்துக் கொண்டு, நம்முடைய ராஜ்யம் ஒன்று மட்டும் அல்ல; எல்லா ராஜ்யங்களும் சேர்ந்து பணியாற்றிக் கொண்டிருக்கும் நிலையில் அந்தந்த ராஜ்யங்களுக்கு இருக்கக் கூடிய கஷ்டங்களையும் உணர்ந்து நாமும் அந்த அளவுக்கு நம்முடைய திட்டங்களை நிறைவேற்றிக் கொண்டு வருகிறோம். திரு. அண்ணாத்துரை அவர்கள் கேட்கும் திராவிட நாடாக இருந்தாலும் நான்கு பேர் சேர்ந்து யோசிக்க வேண்டும். பெரியார் கேட்கும் தமிழ் நாடு வந்த பிறகும் 10 ஜில்லாக்கள் அடங்கியிருக்கும்போது ஒவ்வொரு ஜில்லாவுக்கும் எவ்வளவு என்று பார்க்க வேண்டும். ஒருவருக்கு மட்டும் வேண்டுமென்று நினைத்து எந்தக் காலத்திலும் எந்தக் காரியத்தையும் செய்ய முடியாது. இருக்கக் கூடிய அளவிலே ஒவ்வொரு பகுதிக்கும் எந்த முறையிலே காரியங்களைச் செய்ய வேண்டுமென்பதுபற்றி நாமும் நியாயமாக இருக்க வேண்டும்; மற்றவர்களும் நியாயமாக இருக்க வேண்டும். மற்றவர்கள் எப்படி வேண்டுமானாலும் போகட்டும், எங்களுக்கு ஆயிரத்தைக் கொடு, இரண்டாயிரத்தைக் கொடு என்று கேட்டால், நம்மைப் பார்த்து நமக்குப் பக்கத்தில் இருப்பவர்களும் தூரத்தில் இருப்பவர்களும் அவ்வாறு கேட்கக் கூடிய உரிமையைக் கொடுத்து விடுகிறோம். என்னைப் பொறுத்த வரையில் எது நியாயம் என்று முடிவு செய்து கேட்டால் அந்த அளவுக்குப் பெற முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

SRI C. N. ANNADURAI : எது நியாயம் என்று தங்களுக்குத் தோன்றி, எவ்வளவு தேவை, இன்னது தேவை என்று சொல்லிக் கேட்டு, கேட்ட அளவு தங்களுக்குக் கிடைத்த அனுபவம் இருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தேவையை வைத்துப் பார்ப்பது என்று சொன்னால் அது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் தீர்ந்து விடக் கூடியதல்ல. நான்கு, ஐந்து, ஐந்தாண்டுத் திட்டங்களுக்குப் பிறகும் கூட அந்தச் சமயத்தில் இருக்கக்கூடியவர்களுக்குத் தேவை இன்னும் அதிகமாக இருக்கும் என்பதுதான் என்னுடைய கருத்து. இன்றைக்கு நாட்டில் நிறைவேற்றப்பட்டு வரும் திட்டங்களை அடிப்படையாக வைத்துப் பார்க்கும்போது நமக்கு ஒன்றும் குறைவாகக் கிடைத்து விடவில்லை என்பதுதான் என்னுடைய எண்ணம். இதற்கு மேல் செய்திருக்க முடியாதா என்று சொன்னால் எங்களை விடத் திறமையானவர்கள் இருந்திருந்தால் செய்திருக்கலாமோ என்னவோ தெரியாது. இன்னும் அந்தப் பங்கை, போதுமான அளவுக்கு, நியாயமான பங்கைப் பெற முடியும் என்ற நம்பிக்கை கொண்டிருக்கிறேன். அந்த நம்பிக்கை குறையும் காலத்தில் நீங்கள் வேண்டுமானால் இந்தப் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொள்ளலாம் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

12 noon.

[11th August 1960

**SRI C. N. ANNADURAI:** அந்தப் பக்கத்தில் யார் சொல்லுகிறார்கள் என்பதற்காகச் சொல்லவில்லை. இவ்வளவு தேவை என்று கேட்டு, அதைவிடக் குறைச்சலாகக் கிடைக்கப்பட்டதாகத் தகவல் இருக்கிறது என்று சொல்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM:** முதலிலே எந்த அளவு திட்டம் போடவேண்டும் என்று அகில இந்திய ரீதியிலே போடுகிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் பற்றிய விவரங்களை எல்லோரும் படித்துக் கொண்டிருப்பார்கள். அந்த புள்ளி விவரம் நம் முன்னிலையில் இருக்கிறபடியினால் அதைக் குறிப்பிடுகிறேன். பத்தாயிரம் கோடி ரூபாய் முதலீடு செய்ய வேண்டுமென்று தற்காலிக முடிவுக்கு வந்திருக்கிறார்கள்.

இதற்கு முந்தி திட்டம் போட்டபோது, இருபதாயிரம் கோடி ரூபாய் அளவிலே திட்டம் போடப்பட்டது. இருபதாயிரம் கோடி அளவுக்குத் திட்டம் போட்டது சரி என்றாலும், அந்த அளவுக்கு வசதி இருக்கிறதா என்று பார்க்க வேண்டியதாக இருக்கிறது. அப்படிப் பார்த்ததில், பத்தாயிரம் கோடி அளவுக்குத்தான் வசதி இருக்கிறது என்று பார்த்து, அதன்படி பத்தாயிரம் கோடி ரூபாய் அளவில் எடுத்துக்கொண்டு இருக்கிறோம்.

இந்த பத்தாயிரம் கோடி ரூபாய் அளவிலே ஒவ்வொரு இலாகாவுக்கும் எவ்வளவு ஒதுக்க வேண்டும் என்று பார்த்து ஒதுக்கப்படுகிறது. அப்படி ஒதுக்கும்போது கல்வி இலாகாவை எடுத்துக்கொண்டால், கல்வித் துறையிலே சொல்கிறார்கள், '300 கோடி ரூபாய் ஒதுக்கியிருப்பது போதாது, 500 கோடி ஒதுக்க வேண்டும்' என்று. அதே போல, 'ரோடு வசதிக்கு 150 கோடி ரூபாய்தானா ஒதுக்குவது? எப்படியாவது 400 கோடி ரூபாய் ஒதுக்க வேண்டும்' என்று கேட்கிறார்கள். தொழில் துறையிலும் அப்படித்தான். 'இவ்வளவுதானா தொழிலுக்கு? இதை வைத்துக் கொண்டு என்ன செய்வது? ஆயிரம் கோடி ரூபாயாவது ஒதுக்குங்கள்' என்கிறார்கள். அதேபோல், ரெயில்வே முக்கியமானதுதான். 'ஒவ்வொரு பகுதிக்கும் ரயில் பாதை போடவேண்டும்; 500 கோடி ஒதுக்கச் சொல்லுங்கள்' என்கிறார்கள். இப்படியாக ஒவ்வொரு இலாகாவும் போட்டி போட்டுக்கொண்டு, மேலும் மேலும் அதிகமாக வேண்டுமென்று கேட்கிறார்கள்.

இதெல்லாம் செய்ய இடம் இருக்கிறது. ஆனால், கடைசியில் கணக்குப்போட்டு, இன்றைக்கு வெளியிலிருந்து எவ்வளவு வசதி கிடைக்கும், நமக்கு இருக்கும் வசதி என்ன என்று பார்க்கும்போது, பத்தாயிரம் கோடி அளவுக்குத் திட்டம் போட முடியும் என்ற முடிவுக்கு வருகிறோம். இந்தப் பத்தாயிரம் கோடி அளவில் திட்டமிடுகிறபோது, ஒவ்வொரு இலாகாவுக்கும் எவ்வளவு குறைக்க முடியுமோ அந்த அளவு குறைத்து, அந்த அந்த இலாகாவுக்குப் பங்கு போட்டுக் கொடுக்க வேண்டியிருக்கிறது. அப்படிப் பங்கு போட்டுக் கொடுக்கும்போது, ஏதாவது ஒரு இலாகாவுக்குத் தொகை குறைந்துவிட்டால் அந்த மந்திரி வந்து, 'நான் தான்

11th August 1960] [Sri C. Subramaniam]

இளித்த வாயன் போலிருக்கிறது, ஏமாந்து போய்விட்டேன், என் இலாகாவுக்கு ஒதுக்கிய தொகையிலிருந்து குறைத்துவிட்டார்களே' என்று நினைத்தாலும், அல்லது வேறு யாராவது அவரிடம் போய், 'நீ தான் மோசமாக இருக்கிறாய், உன்னை ஏமாற்றிவிட்டார்களே' என்று சொன்னாலும், அவர்கள் நிலைமையை அனுசரித்துப் பார்க்கவேண்டும்.

முதலிலே 700 கோடி, 800 கோடி, ஆயிரம் கோடி என்று ஒரு இலாகாவுக்கு கேட்கப்பட்டிருக்கலாம். 'ரொம்ப முக்கியமான இலாகாவாகிய கல்வி இலாகாவுக்கு 800 கோடி முதல் 900 கோடி வரையில் கேட்டிருக்க, 300 கோடிதானே ஒதுக்கப்பட்டிருக்கிறது, இதை வைத்துக்கொண்டு என்ன வேலை செய்வது? இது மந்திரியினுடைய கோளாறு' என்றால், அது நிலைமை தெரியாமல் சொல்வதாகத்தான் இருக்கும்.

பத்தாயிரம் கோடிக்குத் திட்டம் போட்டிருந்தால், ஒவ்வொரு ராஜ்யத்திலேயும் எவ்வளவு வேண்டுமென்று அவரவர்கள் திட்டம் போட்டுக்கொண்டிருக்கிறார்கள். ராஜ்யங்களினுடைய திட்டங்களெல்லாம் அங்கு போன பிற்பாடு, 3650 கோடி ரூபாய் அளவுக்கு ராஜ்ய சர்க்கார்கள் மூலமாகச் செய்யக்கூடிய திட்டம் என்று சொல்லும்போது, இந்த 3650 கோடி ரூபாயை எந்த அடிப்படையிலே பங்கு போட்டுக்கொள்வது என்பதைப்பற்றிப் பரிசிலனை செய்து ஒரு முடிவு எடுக்கிறோம்.

SRI C. N. ANNADURAI : நான் கேட்டதற்குப் பதில் சொன்னதாகத் தெரியவில்லை. நான் கேட்டது—இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தாங்கள் கேட்ட அளவு, கேட்ட வகைகள் கிடைத்தனவா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதைத்தான் நான் சொல்கிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை இம்மாதிரி போடுகின்றபோது, இப்பொழுது நாம் எவ்வளவு செய்யலாம் என்பதற்கு இங்கிருக்கும் இலாகாக்களைக் கேட்டு, 350 கோடி, 500 கோடி என்று ஏதோ நமக்குச் செய்ய முடியும் என்ற அளவுக்கு நாம் போட்டுக்கொண்டு போகிறோம். அதே மாதிரி தான் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் ஏற்பட்டது. திட்டங்கள் அங்கு போனதற்குப் பிற்பாடுகூட, நமக்கு வசதி எவ்வளவு இருக்கிறது, வெளி வசதி எவ்வளவு வரும் என்று அகில இந்திய ரீதியிலே ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் கணக்குப் போட்டுப் பார்த்து, அதற்குப் பிற்பாடு திட்டம் போடுகிறோம். அந்த முறையிலே, சென்ற தடவை நாம் கேட்கும்போது, 'காம்பொஸிட் ஸ்டேட்'டாக இருந்து, மலையாளம், தென் கன்னடம் சேர்ந்திருந்து, கேட்டதற்குக் குறைவாகத்தான் வந்தது என்று ஒப்புக்கொள்ளுகிறோம். குறைந்தது, 200 கோடி ரூபாயாவது இருந்திருக்க வேண்டுமென்று கேட்டோம். ரூ. 150 கோடி அளவுக்குத்தான் கொடுத்தார்கள். ஆனால், போட்ட திட்டங்களை நிறைவேற்றியதன் காரணமாக— மலையாளத்திற்கும், தென் கன்னடத்திற்கும் சேர்த்து

[Sri C. Subramaniam] [11th August 1960

ரூ. 200 கோடி வாங்கியிருந்தால், நமக்கு வந்திருக்க வேண்டியது ரூ. 170 கோடிதான். பிர்ததுக் கொடுத்திருந்தால் ரூ. 170 கோடிதான் வந்திருக்கும். ஆனால், திட்ட வேலைகளை நிறைவேற்றியதன் காரணமாக, அவ்வப்போது திட்டங்களைத் துரிதமாக நிறைவேற்றுவதன் காரணமாக, ரூ. 182 கோடி அளவுக்குத் தந்திருக்கிறார்கள்.

SRI C. N. ANNADURAI : எந்த மாநிலத்தையும் விட நம்முடைய மாநிலத்திலே இதற்காக வசூலிக்கப்பட்ட வரித் தொகையின் அளவு அதிகம் இல்லையா?

THE HON. SRI C. SUBRAMANIYAM : அது சரியல்ல. நாம் மூன்று கோடி ரூபாய்தான் வரி அதிகமாக வசூல் செய்திருக்கிறோம். மூன்று கோடி ரூபாய்க்கும் அதிகமாக திட்டத்தை நிறைவேற்றியிருக்கிறோம். (ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம் அவர்களின் குறுக்கீடு) ரூ. 17 கோடிக்குத் திட்டம் போட்டு ரூ. 20 கோடி ஆகியிருக்கிறது. ஆக, மூன்று கோடி ரூபாய் அதிகம்.

இதிலே பல திட்டங்கள் நிறைவேறியிருக்கின்றன என்றால் அவை ரெவினியூ செலவில் அல்ல. மத்திய சர்க்காரிடம் கடன் வாங்கி முதலீடு செய்யக்கூடியது; அவையெல்லாம் வரியின் மூலமாகச் செய்யக் கூடியது அல்ல. திட்டங்களுக்கு அதிகமாகச் செலவு செய்யும்போது, அது வரியிலிருந்து செலவழிக்கப்படுவது அல்ல. நிர்வாகச் செலவும் அதிகமாகப் போய்க்கொண்டிருக்கிறது. அதற்கு வரியிலிருந்து செலவழிக்கப்படுகிறது. பொது மக்களிடத்திலே கடன் வாங்கி, மத்திய சர்க்காரிடத்தில் கடன் வாங்கி, முதலீடு செய்ததன் மூலமாக 32 கோடி ரூபாய் அதிகம் ஆகியிருக்கிறதே தவிர, ரெவினியூ செலவில் அதிகம் ஆனது அல்ல. செய்யக்கூடிய திட்டங்கள் மூலமாகத்தான் திட்டத்தின் அளவு உயரவேண்டும். உதாரணமாக, போலீஸ் இலாகாவுக்கு ஐந்து கோடி, ஆறு கோடி ரூபாய் செலவு செய்வது அல்ல முக்கியம்; அதன் மூலம் ஓரளவு பாதுகாப்பு இருக்கலாம். ஆனால், அபிவிருத்தித் திட்டங்களிலே வந்துசேரக்கூடிய கணக்கைப் பார்க்கும்போது, நாம் கேட்ட அளவுக்கு, நாம் அப்பொழுது நினைத்த அளவுக்குக் கொஞ்சம் அதிகமாகவே செய்திருக்கிறோம் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இருநூறு கோடி கொடுத்தால், 'அவ்வளவுதானா கொடுப்பது? 250 கோடி கொடுத்திருக்கலாமே' என்று கேட்டுக்கொண்டிருப்பதென்றால், அதற்கு அளவே இருக்க முடியாது. இருக்கும் சூழ்நிலையை அனுசரித்து, இன்றைக்கு 3650 கோடி ரூபாய் வரையில் எல்லா மாகாணங்களுக்குமாகச் சேர்த்து ஒதுக்கியிருக்கும்போது நம்முடைய ராஜ்யத்திற்கு எவ்வளவு ஒதுக்க வேண்டும் என்பதைப் பற்றி முதலிலே ஆலோசனை செய்யவேண்டியிருக்கிறது. தொழில் துறை நாம் நடத்துவது அல்ல; அது இந்த 3650 கோடியில் வருவது அல்ல; தனியாக மத்திய சர்க்கார் நடத்த வேண்டியது; அல்லது தனியார் செய்யவேண்டியது. சர்க்கார் முதலீடு செய்யக் கூடியது மட்டுமல்ல, தனியார் முதலீடு செய்யக்கூடியதும் சேர்ந்துதான் பத்தாயிரம் கோடி ரூபாய். ஆகையால், தொழில்

துறையில் எந்த முறையில் முன்னுக்குப் போகிறோம் என்பதைப் பார்க்க வேண்டும். 3650 கோடி ரூபாயில் சரியான பங்கு வாங்குவதால் சமாளித்துவிடுவோம் என்று சொல்ல முடியாது. புதிய தொழில் எவ்வளவு வருகிறது என்று யோசித்துப தீர்மானிக்கவேண்டியிருக்கிறது. நமக்கு இருக்கும் கொள்கை—சில தொழில்கள் இங்கு கட்டாயம் ஏற்பட்டாகவேண்டும், அதன் மூலம்தான் தமிழ் நாட்டின் பிற்கால வளர்ச்சி ஏற்படமுடியும் என்ற முடிவுக்கு வந்திருக்கிறோம்.

உலோகத் தொழில்களை அடிப்படையான தொழில் என்று கருதுகிறோம். அலுமினியத் தொழிலும் மிகவும் முக்கியமானது. அலுமினியம் பல தொழில்களில் பயன்படுகிறது. அந்தத் தொழிலை நிறுவவேண்டுமென்று முன்வந்தோம். லைசன்ஸ் வந்தாய்விட்டது. அதை நிறுவ ஏற்பாடு நடந்துகொண்டிருக்கிறது. பூர்வாங்க ஏற்பாடுகள் நடந்துகொண்டிருக்கின்றன.

**Sri M. KALYANASUNDARAM :** ப்ரைவேட் செக்டாரில்தான் வருகிறது.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** தொழில்களைப்பற்றிப் பொதுவாகச் சொல்கிறேன். ப்ரைவேட் ஸெக்டாரிலே வந்தாலும் சரி, பப்ளிக் ஸெக்டாரிலே வந்தாலும் சரி தொழில்கள் வளர வேண்டும் என்பதுதான் முக்கியம். தொழில்கள் வந்த பிற்பாடு அதை எந்தத் துறைக்கு வேண்டுமானாலும் மாற்றலாம்; அதற்கு வேண்டிய சக்தி நமக்கு இருக்கிறது. தொழில் வருவதற்கு முதல் இடம் கொடுக்க வேண்டும். ப்ரைவேட் ஸெக்டாரிலே வந்தால் ப்ரைவேட் ஸெக்டாரிலே வேலை செய்வோம். பப்ளிக் ஸெக்டாரிலே வந்தால் பப்ளிக் ஸெக்டாரிலே வேலை செய்வோம். சென்னை ராஜ்ய சர்க்காரைப் பொறுத்த வரையில் தொழில் கொள்கை என்னவென்றால், மேலும் தொழில்கள் ஏற்படவேண்டும் என்பதுதான். வாதப் பிரதிவாதங்கள் காரணமாக, பப்ளிக் ஸெக்டாரிலே வந்தால்தான் வரவேண்டும், இல்லாவிட்டால் வேண்டவே வேண்டாம் என்று ஒதுக்கிவைக்கக்கூடிய கொள்கை சென்னை சர்க்கார்க் கொள்கை அல்ல என்று நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக இருக்கக்கூடியது இரும்பு உருக்கு செய்யக் கூடிய தொழில். அதைப்பற்றி ரொம்ப உருக்கமாகப் பேசினார் திரு. ஷண்முகம் அவர்கள். 'எங்கெங்கோ எத்தனையோ கூட்டங்களில், எப்படி உருக்கு செய்வது என்று சொல்லியாய்விட்டது, கல் நெஞ்சுடைய சர்க்கார் மனம் உருகவில்லையே' என்று பக்தன் பாடுவதுபோல் பாடினார்கள். அம்மாதிரி உருக்கமாகப் பாடி உருக்கமாகப் பேசி, உருக்கும் சமாசாரமானால் ரொம்பச் சுலபமாகச் செய்துவிடலாம். இரும்பு உருக்குத் தொழில் செய்ய வேண்டும் என்று சொல்லும்போது, இதற்கு அடிப்படையாக இருக்கும் மூலப் பொருள்கள் இரும்புக் கனி என்று தெரிகிறது. லிக்னைட்டை வைத்துக்கொண்டுதான் சேலத்து இரும்புக் கனியை

[Sri C. Subramaniam] [11th August 1960

உருக்கவேண்டுமென்ற நிலைமையில் இருக்கிறோம். இன்னும் அதைப் பரீட்சை செய்யவேண்டியிருக்கிறதாமே என்று ஒரு கனம் அங்கத்தினர் சொன்னார்கள். ஆம்; பரீட்சை செய்ய வேண்டியிருக்கிறது. ஆகுமா, ஆகாதா என்பதற்காக அல்ல அந்தப் பரீட்சை. ஒவ்வொரு பக்கத்திலே இருக்கும் இரும்புக் கனியையும் எடுத்துப் பார்க்கும்போது, ஒவ்வொன்றும் வெவ்வேறு சத்துக் கொண்டதாக இருக்கிறது. அதுபோல், பழுப்பு நிலக்கரி வெவ்வேறு இடத்தில் வெவ்வேறு ரகமாக, வெவ்வேறு சத்து அடங்கியதாக இருக்கிறது. உதாரணமாக, ஒரு கோட் தைக்க வேண்டுமானால், அதற்குத் துணி வேண்டும் என்று தெரிகிறது. ஆனால், ஆளுக்குத் தகுந்த அளவு துணியை எடுத்துத் தைக்க வேண்டியிருக்கிறது. அதைப்போன்றுதான் சேலம் இரும்புக் கனி, நெய்வேலி பழுப்பு நிலக்கரி இவ்விரண்டையும் வைத்துக்கொண்டு இரும்பு செய்ய முடியும் என்று தெரிகிறது. ஆனால், இதற்கு எந்த விதமான இயந்திரம் வேண்டும், எந்த விதமான உலை வேண்டும் என்பதை நிர்ணயிப்பதற்கு பழுப்பு நிலக்கரியிலே எல்லா சத்துக்களும் சேர்ந்திருக்கின்றனவா என்பதைப் பரீட்சை செய்து பார்க்கவேண்டும். கோட்டுக்கு எங்கெங்கே துணியைக் 'கட்' பண்ண வேண்டும் என்பதைப்போல், இரும்பு உருக்குவதற்கும் எந்தவிதமான உலையை எந்த மாற்றங்களோடு செய்ய வேண்டும் என்பதைப்பற்றி முடிவு செய்யவேண்டும் என்ற கருத்தைத்தான் கிழக்கு ஜெர்மனியார் நமக்குக் கொடுத்திருக்கிறார்கள். அப்படி அதற்கான பரீட்சைகள் செய்வதற்கு குறைந்தது 1,000 டன் லிக்னைட் கேட்கிறார்கள். இரும்புக் கனியைப் பொறுத்தவரைக்கும் நமக்கு வேண்டியிருக்கிறது. பரீட்சார்த்தமாக எடுத்த பழுப்பு நிலக்கரி வேறு. அந்தப் பரீட்சைகள் தீர்ந்துபோய்விட்டன. கொஞ்சம் எடுத்தோம். இன்றைக்கு 1,000 டன் வேண்டியிருக்கிறது. அது வரவேண்டியிருக்கிறது. இன்றைக்கு நாம் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறோம் என்று சொன்னால், அதில் எப்படி உலை மாற்றி அமைக்கவேண்டும் என்பது ஒருபுறம் இருக்க, இந்தத் தொழிலை ஏற்படுத்த முடியும் என்ற நம்பிக்கை வந்திருக்கிறது. அதனால் அதற்கு வேண்டிய மற்ற பூர்வாங்க வேலைகளையெல்லாம் தொடர்ந்து நடத்தலாம் என்று சமீபத்தில் இங்கு கூடிய நிபுணர்கள் கமிட்டி கூறியிருக்கிறது. மத்திய அரசாங்கம் இதற்காக ஒரு நிபுணர் கமிட்டி போட்டிருக்கிறார்கள். அவர்கள் நெய்வேலி போய் பார்த்துவிட்டு இந்த அறிக்கை கொடுத்திருக்கிறார்கள். அவநம்பிக்கை படுவதற்கு இடமில்லை.

(Deputy Speaker in the Chair)

பூர்வாங்க வேலைகளெல்லாம் நடந்துகொண்டிருக்கின்றன. எதுமாதிரி மெஷினரி வேண்டும் எதுமாதிரி உலை வைக்க வேண்டும் என்பதுதான் தீர்மானிக்கப்பட வேண்டும். மெஷினரி வந்தவுடன் அதை வைத்து இந்தத் தொழிலை நடத்துவதற்கான ஏற்பாடுகளைச் செய்யலாம் என்கிற யோசனையை அவர்கள் கூறியிருக்கிறார்கள். இரும்புத் தொழிற்சாலையை

11th August 1960] [Sri C. Subramaniam]

அமைக்கவேண்டுமென்ற முறையிலே அதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமோ, அவைகளையெல்லாம் தொடர்ந்து எடுத்துக்கொண்டிருக்கிறோம். அது சாத்தியம், அந்தத் திட்டத்தை எடுத்துக்கொள்ளலாம் என்பதுபற்றி 'டிராப்ட் அவுட்லைனில்' அவர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அது முடியும் என்பதுதான் கருத்து. அது எப்படி முடியும், எந்தவிதமான இயந்திரம், எந்தவிதமான உலை என்பதைப்பற்றி தான் பரீட்சைகள் நடந்தபிற்பாடு தெரியவேண்டும். அந்தப் பரீட்சைகள்தான் இப்பொழுது நடந்துகொண்டிருக்கின்றன என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஏதோ இந்த அரசாங் கத்திற்கு இந்த இரும்புத் தொழில் இங்கே வரக்கூடாது, ஏதோ சொல்லி இதை ஒத்திப்போடவேண்டும் என்பது போன்று வெளியே பேசிக் கொண்டிருக்கிறார்கள். எங்களுடைய எண்ணம் அதுவல்ல. எவ்வளவு சீக்கிரம் இதை செய்து முடிக்க முடியுமோ அவ்வளவு சீக்கிரம் செய்து முடிக்கவேண்டுமென்பதுதான் எண்ணம். இவர்களும் ஈஸ்டு ஜெர்மனியில் போய் நேரடியாகப் பார்த்தார்கள். நேரடியாகப் பார்த்தால்தான் பல காரியங்களைப் புரிந்துகொண்டு செய்ய முடியும். அங்கிருந்து நிபுணர்களையும் இங்கு அழைத்தார்கள். அவர்களும் இங்கு வந்து பார்த்து அறிக்கை கொடுத்திருக்கிறார்கள்.

அதிலே இன்னொரு விஷயம்கூட இருக்கிறது. இரும்பு 10 டன், 100 டன் எடுத்தால் டன் ஒன்றுக்கு 500, 600 ரூபாயாகிறது. டன் ஒன்றுக்கு ரூ. 70, 80, 150-க்கு மற்றவர்களுக்குக் கிடைக்கும் பொழுது, நமக்கு டன் ஒன்றுக்கு ரூ. 500, 600 என்று விலை ஆகுமானால், அதனால் நஷடம்தான் வரும். ஆகையால் எந்த அளவுக்குச் செய்தால் சிக்கனமாகச் செய்ய முடியும் என்பதைப் பார்க்கும்பொழுது, 5,000 டன், 10,000 டன் போட்டால் போதாது, 2 லட்சம் டன், 3 லட்சம் டன் அளவுக்குச் செய்தால்தான் முடியும்.

Sri C. N. ANNADURAI : 'A pig iron plant based on low shaft blast furnace techniques and use of coke from Neiveli lignite is also included in the Outline as a project on which preparatory work should continue with a view to reaching decisions in due course.' 'In due course' என்று சொல்லியிருப்பது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குள் முடியுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : டெக்னிகல் கமிட்டி வந்த பிற்பாடு, அவர்கள் சொல்லிப்போயிருக்கிற முடிவு, இனிமேல் ஆகுமோ, ஆகாதோ என்ற சந்தேகம் வேண்டாம். ஆகும் என்ற முடிவை நீங்கள் எடுத்துக்கொள்ளலாம் என்று சொல்லியிருக் கிறார்கள். செய்யமுடியுமோ, செய்யமுடியாதோ என்ற பயம் நீங்கிவிட்டது. செய்ய முடியும் என்ற முடிவுக்கு வந்தாகிவிட்டது. எந்த இடத்தில் செய்வது என்பதைப்பற்றியும் அவர்கள் சில யோசனைகள் சொல்லியிருக்கிறார்கள். அதைப்பற்றி இப்பொழுது ஒரு குழப்பம் வேண்டாம். (குறுக்கீடு) ஸ்ரீ ஏ. கோவிந்த சுவாமிக்கு யோகம் அடிக்குமோ என்னவோ, யார் கண்டார்கள்?

[Sri C. Subramaniam] [11th August 1960

எந்த இடத்தில் இருந்தாலும் நமது ஊரில் தான் ஏற்படப் போகிறது. இன்றைக்கு முடியும் என்று சொன்ன பிற்பாடு அதற்கு வேண்டிய பூர்வாங்க வேலைகளெல்லாம் தொடர்ந்து நடத்தப்பட்டு வருகின்றன. எங்கு தண்ணீர் போன்ற முக்கியமான சௌகரியங்கள் கிடைக்கின்றனவோ அங்குதான் இந்தத் தொழிலை அமைக்கலாம். ஆகையால், சேலத்தில் வைத்தால்தான் தண்ணீர் கிடைக்கும் என்று சொல்லுவார்களோ, என்னவோ ஒன்றும் தெரியாது. எந்த இடத்தில் வைப்பது என்பதுபற்றி ஒன்றிரண்டு மாதங்களில் முடிவு எடுக்கப்படலாம். தண்ணீர் முதலிய மற்ற சௌகரியங்களுக்கு ஏற்பாடு செய்து, நிலக்கரியை வெட்டி எடுப்பதற்கு 1961-க்குள் முடியும் என்று திட்டம் போடப்பட்டிருக்கிறது. 1,000 டன் பழுப்பு நிலக்கரி கப்பலில் ஏற்றியதற்கு பிற்பாடு ஈஸ்டு ஜெர்மனியில் பரீட்சைக்கு 6 மாதங்கள் வேண்டுமென்று சொல்லுகிறார்கள். அதற்குப் பிற்பாடு அதற்கேற்றவாறு மெஷினரிகள் செய்யப்படவேண்டும். அவை களையெல்லாம் முடிவுசெய்து அமைப்பதற்கு மூன்றுவது ஐந் தாண்டுத் திட்டத்திற்குள் முடியும் என்கின்ற ஒரு நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. எதிர்பாராத தடைகள் ஏதாவது ஏற்பட்டா லன்றி, நமக்குக் கிடைத்திருக்கக்கூடிய தகவல்களை வைத்துக் கொண்டு, இருக்கிற புள்ளிவிவரங்களை வைத்துக்கொண்டு மூன்று வது ஐந்தாண்டுத் திட்டத்திற்குள் இது முடியும் என்றுதான் தோன்றுகிறது. இதற்கு மத்தியிலே ஈஸ்டு ஜெர்மனி 'ப்ரோ ஸெஸ்' மட்டுமல்ல. நார்வேயில் செய்யக்கூடிய ஒரு 'ப்ரோஸெ ஸும்' இருக்கிறது. நிலக்கரி மட்டுமல்ல. நிலக்கரியும் கொஞ்சம் போடுகிறார்கள். மின்சாரத்தினால், மின்சார உலையை வைத்துக் கொண்டு அதன் மூலம் சேலத்தில் கிடைக்கும் இரும்புக் கனியைப் போல கொஞ்சம் தரக்குறைவான இரும்புக் கனியை வைத்துக் கொண்டு நார்வேயில் செய்துகொண்டிருக்கிறார்கள். அது மாதிரி செய்யலாம் என்ற யோசனையும் இருக்கிறது. இதிலே ஒன்று போடவேண்டும், அதிலே ஒன்று போடவேண்டும், எது நன்றாக வருகிறதோ அதை விரிவாக்கவேண்டும் என்று முடிவுக்கு வந்திருக்கிறோம். இது ஏற்படுவதுபற்றி ஒரு சந்தேகமும் இல்லை. இதை எப்படி நிறைவேற்றுவது, எந்த முறையில் நிறை வேற்றுவது என்பதைப்பற்றித் தான் ஆலோசித்துக்கொண்டிருக் கிறார்கள். ஆகவே, இனிமேலாவது உருக்கமாகப் பேசுவதினால் உருக்கை உருக்கலாம் என்று நினைக்காமல், திரு. கோவிந்தசுவாமி போன்ற அங்கத்தினர்கள் இது சம்பந்தப்பட்ட காரியங்களி லெல்லாம் ஒத்துழைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI C. N. ANNADURAI : உருக்கமாகப் பேசுவது அமைச்சர் அவர்களின் மனதை உருக வைப்பதற்குத்தான். இரும்பை உருக்க அல்ல.

THE HON. SRI C. SUBRAMANIAM : இது தான் இதிலிருக் கிற ஒரு கஷ்டம் அவர்கள் உருக்கமாகப் பேசித்தான் என் மனதை உருக்கி இரும்பு உண்டாக்கவேண்டுமென்று நினைக்க வேண்டாம். தயவுசெய்து அந்த மனப்பான்மையை விட்டுவிட்டு

11th August 1960] [Sri C. Subramaniam]

பேசுங்கள். நீங்கள் காரியங்களில் ஒத்துழைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இன்றைக்கு திராவிட முன்னேற்றக் கழகத்தினர் அரசியல் காரணத்திற்காகவோ என்னவோ வெளியில் பேசும் போது 'மற்றவர்களெல்லாம் இந்தத் தொழில் இங்கு வரவேண்டியதில்லை என்று சொல்லுகிறார்கள். நாங்கள் தான் இங்கு வரவேண்டுமென்று தொந்தரவு செய்து வற்புறுத்துகிறோம்' என்றெல்லாம் கூறுகிறார்கள். அரசியல் காரணத்திற்காக இது மாதிரி பேசிக்கொள்ளட்டும். ஆட்சேபணையில்லை. ஆனால் காரியங்கள் செய்யும்பொழுது இம்மாதிரி பேசிக்கொண்டிருக்காமல், நல்ல முறையில் ஒத்துழைக்கவேண்டுமென்ற மனப்பான்மை வேண்டும். அம்மாதிரி காரியங்கள் செய்யவேண்டிய நேரத்தில் இம்மாதிரி நாங்கள் அந்தக் குழுக்களில் இருந்து ஒத்துழைக்கமாட்டோம், குழுக்களிலிருந்து வெளியேறுகிறோம் என்று சொல்வது சரியல்ல. அம்மாதிரி சொல்வது அரசியலுக்காகவோ என்னவோ தெரியாது.

SRI C. N. ANNADURAI : குழுக்களிலிருந்து நாங்கள் விலகிக் கொள்ளுவதாகச் சொன்னது உண்மையிலேயே உள்ளத்திலிருந்து வந்தது. அதற்கும் அரசியலுக்கும் சம்பந்தம் இல்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM : முதலிலேயே ஆரம்பித்தார்கள் 'ஜனநாயக முறையில் இருக்கக்கூடிய நம்பிக்கை எனக்கு குறைந்து கொண்டு வருகிறது' என்று. இருக்கலாம். இதிலே இருக்கக்கூடிய மக்களை வைத்துக்கொண்டுதான் ஜனநாயகத்தை நடத்திக்கொண்டு போகவேண்டும். புதிதாக மக்களை வைத்துக் கொண்டு எப்படி ஜனநாயகம் நடத்திக்கொண்டு போவது? ஒரு லட்சிய அடிப்படையிலுள்ள மக்களை வைத்துக்கொண்டுதான் ஜனநாயகம் நடத்தவேண்டுமென்றால், அவர்கள் ஜனநாயகம் நடத்தும்போது நாங்களே இல்லாமல் பண்ணிவிட்டு ஜனநாயகம் நடத்துவார்களோ என்னவோ? இருக்கக்கூடிய மக்களை வைத்துக்கொண்டுதான் ஜனநாயகம் நடத்தவேண்டும். ஜன நாயகத்தில் அவர்களைப்போல் கெட்டிக்காரர்களும் இருப்பார்கள். எங்களைப்போல் திறமையில்லாதவர்களும் இருப்பார்கள். சண்டை போடுகிறவர்களும் இருப்பார்கள். எல்லாவற்றையும் அனுசரித்துக்கொண்டுதான் ஜனநாயகத்தை நடத்தவேண்டும். ஏதோ திரு. கருத்திருமன் அவர்கள் பேசினார்கள் என்பதற்காக, குழந்தைப் பிள்ளைகள் விளையாட்டில் சண்டை போட்டுக்கொண்டு எல்லாவற்றையும் அழித்துவிட்டுப் போய்விடுவது போல் போவது சரியல்ல.

SRI C. N. ANNADURAI : அமைச்சரவர்கள், காங்கிரஸ் கட்சிக் கொரடா சொன்னதற்கு குழந்தைகள் போல் விளையாட வேண்டாம் என்கிறார்கள். நான் பேசியது விளையாட்டல்ல.

THE HON. SRI C. SUBRAMANIAM : அவர்கள் தவறாக எடுத்துக் கொள்ளக்கூடாது. நான் விரும்புகிறேன், அவர்கள் சிறு நிகழ்ச்சிகளை வைத்துக்கொண்டு, பெரிய காரியங்களில்

[Sri C. Subramaniam] [11th August 1960]

தவறான கருத்துக்களைக் கொள்ளக் கூடாது என்று. திரு. கருத்திருமன் ஒரு பேச்சினாலேயே ஒரு குழுவிலும் இருக்கக்கூடாது என்ற நிலையை உண்டுபண்ணக் கூடுமானால், உண்மையிலேயே அவர்களுக்குப் பாராட்டுதலைத் தெரிவிக்கக் கடமைப் பட்டிருக்கிறேன்.

SRI C. N. ANNADURAI : அமைச்சரவர்கள் காங்கிரஸ் கட்சிக் கொரடாவையும் விட மோசமாக நடந்துகொள்கிறார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அப்படிச் சொல்ல அவருக்கு உரிமை உண்டு. நான் கவலைப்படவில்லை. நான் பேசுவது கொரடாவைவிட மோசமாக இருந்தாலும், அவர்கள் நாட்டின் நன்மைக்காக, ஒத்துழைக்க வேண்டும்; நாங்கள் குற்றங்கள் செய்தாலும், எங்கள் குற்றங்களையும் மீறி, அவர்கள் ஒத்துழைத்தால் தான், நாட்டில் பற்று இருக்கிறது என்றாகும். குறைகளையே பார்த்துக் கொண்டிருந்தால், அது ஒருவரோடொருவர் தள்ளி வைத்துக் கொண்டிருக்குமே தவிர, காரியங்கள் செய்யப் பயன் படாது என்று பணிவன்போடு சொல்லிக்கொள்ளுகிறேன். ஆகவே அந்தப் பேச்சை வைத்துக்கொண்டு பாராமல், காரியங்களின் அவசியத்தைப் பார்த்து, அதைப் பற்றித் திரும்ப ஆலோசனை செய்து, நாட்டின் நன்மைக்காக அவர்கள் சேர்ந்து ஒத்துழைக்க வேண்டும், கவர்னர் அவர்கள் கேட்டுக் கொண்டபடி. ஆகவே, காரியங்கள் செய்வதில் நாங்கள் ஒத்துழைக்கத் தயார் என்ற முடிவுக்கு அவர்கள் வரவேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறேன்.

SRI C. N. ANNADURAI : நேற்றைய தினம் குழுக்களில் நாங்கள் இருப்பது பற்றி காங்கிரஸ் கட்சிக் கொரடா பேசிய பேச்சு, இருப்பவர்கள் மனதைப் புண் பண்ணி கேவலப்படுத்தும் முறையில் இருந்தது; மனதார உணர்ந்துதான் சொல்கிறேன், வேறு விதமாக இல்லை. நேற்று கொரடா பேசிய முறை சரிதானா, அவர்கள் சொன்ன கருத்து சரிதானா, அவர்கள் உபயோகித்த வாசகங்கள் சரிதானா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது ஒவ்வொருவர் பேசுவதையும் வைத்துப் பார்த்தால், நாங்கள் ஒத்துழைக்காது, மந்திரிகளாக இருக்க முடியாது. அவர்கள் கட்சிக்காரர்கள் பேசுவது அப்படி. அதெல்லாம் அரசியலுக்காகப் பேசுவதாகக் கொள்ளலாம். ஆகையினால், அரசியல் மொழியில், அரசியல் காரணத்திற்காகப் பேசுவதை வைத்துக் கொண்டு இருந்தால், காரியம் நடைபெறாது. ஆகவே, இப்பொழுதே முடிவு செய்ய வேண்டாம்; இரண்டு நாட்கள் ஆறப் போட்டுவிட்டு, (சிரிப்பு) இந்த அசெம்பிளிக் கூட்டத்திற்கு முன்னாலேயே—இது சிரிக்கக் கூடிய விஷயம் அல்ல—நல்ல முடிவைச் செய்ய அவர்கள் யோசிக்க வேண்டும் என்று . . . . .

SRI A. GOVINDASAMY : தாங்கள் கொரடாவைப் பாராட்டிய பிறகு யோசிக்க என்ன இருக்கிறது ?

[11th August 1960]

THE HON. SRI C. SUBRAMANIAM : அவர்கள் ஆரம்பித்ததைப் பார்த்து, அசெம்பிளியையே விட்டு விட்டு ராசினுமா செய்து விட்டுப் போய்விடுவார்களோ என்று பயந்தேன் . . . ஆகவே வாதப்பிரதிவாதங்களை விட்டுவிட்டு, மக்களுக்காக காரியங்கள் நடக்க ஒத்துழைக்க உடனடியாக யோசனை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். (குறுக்கீடு) நான் சொன்ன முறையிலே தவறு இருந்தாலும், அதை ஒதுக்கி வைத்துவிட்டு, கேட்பதில் நல்லது இருந்தால், நல்ல முடிவு செய்ய வேண்டுமென்று பணிவோடு கேட்டுக் கொள்கிறேன்.

[Mr. Speaker in the Chair]

மொழிப் பிரச்னையைப்பற்றித் தனியாக விவாதிக்கப் போகிறோம். இருந்தாலும், சில கருத்துக்களைத் தெளிவு படுத்த வேண்டியது அவசியம். சிலவற்றைப் பற்றித் திரும்பத் திரும்பச் சொன்னார்கள். ஸ்ரீ ஜவஹர்லால் நேருவின் கொள்கையை ஒத்துக் கொள்ளாமல், ப்ரெஸிடெண்ட் அவர்கள் தனியாக ஒரு உத்தரவைப் பிறப்பித்திருக்கிறார்கள் என்று சொன்னார்கள். அதுபற்றி நான் பத்திரிக்கை நிருபர்கள் மத்தியில் சொன்னதைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். ஒருகால் நான் சொல்ல நினைத்ததைத் தெளிவாகச் சொல்லவில்லையோ என்னவோ. திரும்பச் சொல்லுகிறேன் : ப்ரெஸிடெண்ட்—ஜனாதிபதி அவர்கள்—சர்க்கார் கொள்கை எதுவோ அதைத்தான் உத்தரவில் போடமுடியும், ப்ரெஸிடெண்ட் என்று அவருக்கு ஒரு தனிக் கொள்கையை, நடைமுறையில் கொண்டுவர அதிகாரம் கிடையாது. இன்றைக்கு ப்ரெஸிடெண்ட் போட்டிருக்கும் உத்தரவு தவறானால், பிரதம மந்திரியும் தவறுதான். ஆகையினால், இதில் ஏதோ பிரெஸிடெண்ட் தனிப்படச் செய்து விட்டார் என்று ஒன்றுமில்லையென்று முன்னால் சொன்னேன். பிரிவு 344 (6) படி, இந்த உத்தரவு 1965 வரைக்கும்தான். அதற்குப் பின்னால் அந்த உத்தரவு இல்லை. அதைப் போடமுடியாது. போட்டிருக்கும் விஷயங்கள், 1965-க்குள்ளாக என்னென்ன செய்ய வேண்டும் என்று. திராவிட முன்னேற்றக் கழகம் பார்லிமெண்ட் முடிவை ஒப்புக் கொள்கிறார்கள், 1965-லிருந்து ஹிந்தியும் ஆங்கிலமும் இரண்டும் தொடர்ந்து நிர்வாக மொழியாக இருக்க வேண்டும் என்று. அப்படியென்றால், ஹிந்தி அன்றைக்குத் தயாராக இருக்க வேண்டும். அதற்கு வேண்டிய நடவடிக்கைகள் இப்பொழுதே எடுக்காமல் விட்டால், ஹிந்தியும் ஆங்கிலமும் சேர்ந்து இருக்க முடியாது. ஆகவே, ஹிந்தியும் நிர்வாக மொழியின் தகுதியை அடைய வேண்டிய நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். அதுதான் இந்த ப்ரெஸிடெண்ட் அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. 1965-க்குப் பிறகு என்ன ஆகவேண்டும் என்று முன்னுரையில், ப்ரியாம்பிளில், ஜவஹர்லால் நேரு உரையில், நம் பார்லிமெண்டரிக் கமிட்டி முடிவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. சர்க்கார் கொள்கை அதுதான். ஸ்ரீ ஜவஹர்லால் நேரு குறிப்பிட்டது,நான் சர்க்காரின் மொழிக்கொள்கை. ஆகவேதான் பிரசிடெண்ட் பிரசாத் அவர்கள் சர்க்காரையும் மீறி ஒரு

[Sri C. Subramaniam] [11th August 1960

உத்தரவு போட்டுவிட்டார்கள் என்று சொல்ல, ஒரு கிளர்ச்சி வேண்டாம் என்றேன். கிளர்ச்சி வேண்டாம் என்று சொல்ல வில்லை. ஆனால் முக்கியமாக ஜனாதிபதி வரும்போது, கிளர்ச்சிகள் கூடாது, அது தமிழன் பண்புக்கு இழுக்காக இருக்கும் என்பதால் அவர்களைத் திரும்பத் திரும்ப அதைக் கைவிட வேண்டும் என்று வற்புறுத்தி பணிவுடன் வேண்டிக் கொண்டேன்.

நேற்றையதினம் அமெரிக்கா தூதர் இங்கே வந்தார்கள். அவர்களிடத்தில் பேசிக்கொண்டு இருந்தேன். பேச்சு வந்தது இங்கே இருந்த நிலைமை பற்றி; அப்பொழுது கேட்டேன்: "ஒரு முறையாவது அமெரிக்க ஜனாதிபதிக்கு கருப்புக் கொடி, அல்லது அவர்களுக்கு அவமரியாதை செய்யக்கூடிய நிகழ்ச்சி நடந்திருக் கிறதா" என்று. அவர்கள் சிறிது நேரம் யோசனை செய்துவிட்டு, உறுதியாகச் சொன்னார்கள்: "இம்மாதிரி நிகழ்ச்சிகள் நடந்தது கிடையாது, நினைத்திருப்பார்களோ என்னவோ" என்று. ஜனாதிபதி நாட்டின் சின்னம். கொடியைப் பற்றிச் சொல்லும் போது, அதை யாராவது எரிப்பேன் என்றால், அது தேசத்தின் சின்னத்தை அவமதிப்பது என்று கருதுகிறோம். அதே போல ஜனாதிபதி, உயிரோடு இருக்கும் தேசச்சின்னம். ஆகவே, ஜனாதி

12-30 p.m. பதிக்குச் செய்யும் அவமரியாதை, தேச மக்களுக்கு செய்த அவ மரியாதையாகும். அது நம் தமிழனின் அறிவுக்கும், பண்புக்கும் இழுக்காக அமையும்.

என்ன காரணத்திற்காக அவர்கள் அதை வாபஸ் வாங்கிக் கொண்டாலும் சரி அவர்கள் அந்தக் கிளர்ச்சியை, அந்த இயக் கத்தை நடத்தாமல் நிறுத்தியது மிகவும் பாராட்டக்கூடியது. அதற்குப் பரிபூரணமாக என்னுடைய பாராட்டுதலை, திராவிட முன்னேற்றக் கழகத்திற்குச் சொல்லிக்கொள்ளக் கடமைப்பட்டி ருக்கிறேன். எல்லாக் காரியங்களையும் ஏற்பாடு செய்த பிறகு வாபஸ் வாங்கப்பட்டதற்கு நான் ரொம்பவும் கடமைப்பட்டிருக் கிறேன். (குறுக்கீடு) அப்படிக் குட்டிச் சொல்வதற்கும் எனக்கு பாத்தியம் உண்டு. அப்படிக் குட்டிச் சொல்வதாலும் பரவா யில்லை. ஆகவே கிளர்ச்சியை வாபஸ் வாங்குவது என்ற முடிவுக்கு வந்தது தமிழ் மக்களுடைய அறிவுக்கே சான்று ஆகும், சான்றாக விளங்கும் என்பதை உங்களுக்கு நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே இந்த முடிவை நான் மிகவும் வரவேற் கிறேன். இன்றைக்கு இந்தக் கிளர்ச்சி நின்று இருக்கிறது என்று சொன்னால் ஏதோ சர்க்காருக்கு இதனால் தொல்லை வருவதாக இருந்தது அதன் காரணமாக அது நடைபெறாமல் நின்று இருக் கிறது என்பதல்ல. அல்லது கறுப்புக்கொடி காட்டுவதால் ராஜன் பாபுவின் மதிப்பு குறைந்து விடும் என்பது அல்ல. அவருக்கு இருக்கக்கூடிய மதிப்பு எப்பொழுதும் அவருக்கு இருக்கிறது. அப்படி தமிழ் நாட்டில் கறுப்புக்கொடி காட்டியிருந்தால் தமிழ் நாட்டின் மக்களுடைய மானமே போயிருக்கும். தமிழ் நாட்டின் பண்புக்கு அது உகந்தது அல்ல. அந்த முறையில் அந்தக் கிளர்ச்சியை நிறுத்தியது ரொம்பவும் வரவேற்கத்தகுந்ததுதான். அதைப்போலவே கருத்து வேற்றுமைகள் இருந்தால் அதைப் பற்றி ஒரு நல்ல முடிவுக்கு வவேண்டியதுதான் நல்லது.

11th August 1960] [Sri C. Subramaniam]

கருத்து வேற்றுமைகள் இருக்க வேண்டியதும் அவசியம்தான். அப்படி இருந்தால் அவைகளை மனமாரப் பேசித் தீர்த்துக்கொள்ள முயலுவதுதான் நல்லது, நாட்டிற்கும் அதுதான் நல்லது. தேசத்திற்கும் நல்லது. அதன் மூலம் வெற்றி காண்பதுதான் நல்லது என்பதைப் பணிவன்புடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஜனநாயக அடிப்படையில் காரியங்களைச் செய்யும் போது பல கருத்து வேறுபாடுகள் வருவது இயற்கைதான். அப்படி வருவதை விவாதித்து நல்ல முடிவு காண்பதுதான் நல்லது. அப்படி வெற்றி காணுமல் போனுல் காரியங்கள் நல்ல முறையில் நடைபெருமல் போய் விடுவதற்கு இடம் ஏற்படும். இறுதியான முடிவு ஏற்படும் வரையில் வேற்றுமையுள்ள கருத்துக்களை மனதில் வைத்துக்கொள்ளாமல் கட்சி வேற்றுமைகளை மனதில் கொள்ளாமல் நாட்டின் முன்னேற்றத்தை மனதில் கொண்டு புனராலோசனை செய்து நல்ல முடிவுக்கு வரவேண்டும் என்று அவர்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இம்மாதிரி பல தொழில்கள் ஏற்பட வேண்டும் என்று சொல்லும்போது தூத்துக்குடி துறைமுகத்தைப்பற்றிக் குறிப்பிடப்பட்டது. அதிலும் குறிப்பாக கனம் கோவிந்தசாமி அவர்கள் பேசும்போது அதைப்பற்றிக் குறிப்பிட்டார்கள். கனம் அமைச்சர்கள் வாக்குறுதி கொடுத்திருக்கிறுர்கள். அந்த வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டும், அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் தெரிவித்தார். அமைச்சர்கள் வாக்குறுதிகள் கொடுத்தது வாஸ்தவம்தான், அதை நிறைவேற்றுவதற்கு வேண்டிய எல்லா முயற்சிகளும் எடுத்துக்கொள்ளப்படும். இது ஒரு தனிப்பட்ட பாலிஸி அல்ல. இது மக்களுக்கு வசதி அளிக்கக்கூடிய காரியம். எந்தக் காரியம் நியாயம் என்று தோன்றுகிறதோ அந்தக் காரியங்களை நிறைவேற்றுவதற்கு வேண்டிய எல்லா முயற்சிகளும் எடுத்துக் கொள்ளப்படும். எது நியாயம் என்று தோன்றுகிறதோ அதை நிறைவேற்ற முடியும் என்ற நம்பிக்கை இருக்கிறது. அது என்னுடைய திறமையால்தான் முடியும் என்றும் என்னுடைய செல்வாக்கிஞல்தான் முடியும் என்றும் சிலர் நினைத்துக்கொண்டிருக்கிறுர்கள். அப்படி நினைத்துக்கொண்டிருப்பது தவறு. எந்தக் காரியமும் அது நியாயமாக இருந்தால் அதை எடுத்து நிறைவேற்றுவதற்கு எல்லாவிதமான நடவடிக்கைகளும் முயற்சிகளும் எடுத்துக்கொள்ளப்படும். நியாயமான காரியங்களை எடுத்து நிறைவேற்றுவதற்கு எந்த விதமான சிபாரிசும் தேவையில்லை. மக்களுக்குச் செய்ய வேண்டிய நியாயம் என்று இருந்தால் அதை எடுத்து நிறைவேற்றுவதற்கு வேண்டிய முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்படும். அந்த முறையில்தான் தூத்துக்குடி துறைமுகத் திட்டம் இருக்கிறது. அதை எடுத்து நிறைவேற்றுவதற்கு வேண்டிய முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்படும். அப்படி எடுத்துக்கொள்ளும்போது பல தவறுகள் ஏற்படலாம். தவறுகள் ஏற்படாது என்பது அல்ல. தூத்துக்குடி துறைமுகத் திட்டம் தமிழ் நாட்டிற்கே, அதன் முன்னேற்றத்திற்கே மிகவும் அடிப்படையாக உள்ள திட்டம். அதனுல்தான் தொடர்ந்து அதைப் பற்றி வற்புறுத்திக்கொண்டிருக்கிறோம். ஆகவே அதை

[Sri C. Subramaniam] [11th August 1960

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்து நிறைவேற்று வதற்கு எங்களால் ஆன முயற்சியை எடுத்துக்கொள்வோம் என்பதைச் சொல்லிக்கொள்ளுகிறேன். ஆகவே இப்பொழுது இங்கே வந்திருக்கக்கூடிய சில செய்திகளைப் புனராலோசனை செய்ய முடியும் என்கிற நிலைமையை எடுத்துக்காட்டுகிறது.

அதற்கு அடுத்தபடியாக, இன்றைக்கு மின்சாரத்தைப்பற்றி பலர் பேசினர்கள். மின்சார போர்ட் பட்ஜெட்டைப்பற்றி விரிவாக தனியாக விவாதம் நடக்கப்போகிறது. அணு சக்தியின் மூலம் மின்சாரம் உற்பத்தி செய்ய வேண்டும் என்பதைப்பற்றி சிலர் குறிப்பிட்டார்கள். இன்றைக்கு அணு சக்தியின் மூலம் மின்சாரம் உற்பத்தி செய்யலாம் என்ற சூழ் நிலை ஏற்பட்டிருக்கிறது. அதிலும் சில கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. இப்பொழுது இருக்கக்கூடிய மின்சார உற்பத்தி நிலையங்களிலிருந்து உற்பத்தியாகக்கூடிய மின்சாரத்தின் விலையை விட அணு சக்தியின் மூலமாக உற்பத்தியாகக்கூடிய மின்சாரத்தின் விலை அதிகமாக ஆகிறது என்று கணக்குப் போடுகிருர்கள். அதனல் அது சிக்கனமான முறையா என்பதைப்பற்றி ஆலோசிக்க வேண்டியதாக இருக்கிறது. பல நாடுகளிலிருந்து இதைப்பற்றிய கருத்துக்களைத் தெரிவித்திருக்கிருர்கள். பல அறிக்கைகள் எனக்கு வந்து கொண்டிருக்கின்றன. அதைப்பற்றி நாங்கள் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறோம். வெளி நாடுகளிலுள்ள பல விஞ்ஞானிகள் அணு சக்தி மூலமாக மின்சாரம் உற்பத்தி செய்வது பொருளாதார ரீதியில் அவ்வளவு உகந்தது அல்ல என்ற கருத்தைத் தெரிவித்திருக்கிருர்கள். இங்கிலாந்தில் இன்னும் ஐந்தாறு ஆண்டுகளில் அதிகப்படியான நிலையங்களை அமைக்கப்போவதாகச் சொல்லுகிருர்கள். அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. சில இடங்களில் அணு சக்தியைக் கொண்டு உற்பத்தியாகக் கூடிய மின்சாரத்திற்கு ஆன செலவைப் பார்த்தால் அதிகப்படியாக ஆகிறது என்று சொல்லுகிருர்கள். ஆனல் நம்முடைய நாட்டில் மற்ற நாடுகளில் இருக்கக்கூடிய வசதிகளைவிட அதிகப்படியான வசதிகள் இருக்கின்றன. அவைகளை வைத்துக்கொண்டு இங்கே உற்பத்தி செய்வதற்கு வசதி இருக்கிறது. அந்த வசதிகளை வைத்துக்கொண்டு இன்னும் சிக்கனமாக உற்பத்தி செய்யலாம், செய்ய முடியும் என்ற நம்பிக்கை இருக்கிறது. அதற்கு வேண்டிய ஏற்பாட்டையும் இப்பொழுது செய்து வருகிருர்கள். அந்த அனுபவத்தை வைத்துக்கொண்டு இன்னும் அதிகமாக அமைப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம் என்று தோன்றுகிறது. ஆகவே நம்முடைய தமிழ் நாட்டில் அப்படிப்பட்ட ஒரு நிலையத்தை அமைக்க அவ்வளவு கஷ்டமாக இருக்காது. மகாராஷ்டிரத்தில் ஆரம்பிக்கப் போகிருர்கள். அவர்களுடைய அனுபவத்தை வைத்துக்கொண்டு அது வெற்றிகரமாக இருந்தால் இங்கேயும் ஆரம்பிக்கலாம். அதன் பிறகு இங்கேயும் கொண்டு வருவதற்குக் கஷ்டம் இருக்காது. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழில் வளர்ச்சிக்கு அதிகப்படியான ஏற்பாடு செய்து கொண்டிருக்கும்போது அதற்கு வேண்டிய போதிய அளவு மின்சாரம் இருந்தால் தான் முடியும். பல தொழிலுக்கு

11th August 1960] [Sri C. Subramaniam]

மின்சாரம் அவசியமாக இருக்கும். இப்பொழுது இருக்கும் மின்சாரத்தை வைத்துக்கொண்டு அவர்கள் கேட்கும்போதெல்லாம் கொடுக்க முடியாமல் இருக்கிறது. நமக்கு அதிகப்படியாக மின்சாரம் இருந்தாலும் தொழிற்சாலைக்கு காலாகாலத்தில் கொடுக்க முடியாத நிலைமையில் இருக்கிறது. ஆகையினால்தான் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் மின்சார உற்பத்தியை இரண்டு மடங்காக அதிகரிக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு வேண்டிய முயற்சியும் எடுத்துக் கொள்ளப்படும், எடுத்துக்கொண்டும் வருகிறார்கள். முக்கியமாக நெய்வேலியில் அதிகமாக உற்பத்தி செய்யவேண்டும் என்று முயற்சி செய்து வருகிறார்கள்.

அத்துடன் பரம்பிக்குளம் திட்டத்தைப்பற்றியும் மற்ற திட்டங்களைப்பற்றியும் குறிப்பிட்டார்கள். அதிலும் முக்கியமாக பரம்பிக்குளம் திட்டத்தைப் பற்றி பிரசாரம் செய்து வந்தார்கள். அதிலும் திராவிட முன்னேற்றக் கழகம் வேறு ஏதோ காரணத்தை மனதில் வைத்துக்கொண்டு இதைப்பற்றிப் பிரச்சாரம் செய்து வந்தார்கள். பத்திரிகைகளிலும் எழுதி வந்தார்கள். அங்கு மந்திரி போய் விட்டு ஏமாந்து வந்து விட்டார், அதற்கு 3½ கோடி ரூபாய் செலவு செய்து விரயமாக்கி விட்டார் என்றெல்லாம் சொல்லி வந்தார்கள். இது வராத திட்டம் என்று பேசியவர்களும் எழுதியவர்களும் உண்டு. (ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி : யார் எப்படி எழுதினார்கள் ?) உங்கள் பத்திரிகைகளில் வந்ததை வேண்டுமானால் எடுத்துக்காண்பிக்கிறேன். அவர்கள் எப்படிக் கணக்குப் போட்டு அந்தத் தொகையைக் கண்டு பிடித்தார்களோ தெரியவில்லை. ஒருகால் திட்டங்களே வரக் கூடாது, வராமல் போய் விடவேண்டும் என்ற மனப்பான்மையில் அப்படிச் சொல்லுகிறார்களோ என்னமோ, தெரியவில்லை. எதையாவது வைத்துக்கொண்டு திராவிட நாடு பிரிய வேண்டும் என்பதற்காக இப்படியெல்லாம் சொல்லுகிறார்களோ என்னவோ. எந்த விதமான திட்டங்களும் வரவே கூடாது என்ற எண்ணத்தில் அப்படிச் சொல்லுகிறார்களோ என்னவோ. ஒருகால் திரு. கோவிந்தசாமி நினைக்கலாம், தூத்துக்குடி திட்டம் வராமல் போனால் இந்த மந்திரி சபையை ஒரு தாக்கு தாக்கிப் பேசலாம் என்ற எண்ணத்தில் அப்படிப் பேசுகிறாரோ என்னமோ. வேறு காரணம் இருப்பதாகத் தெரியவில்லை. அப்படிப்பட்ட எண்ணம் இல்லாமல் இருந்தால் நல்லது. அந்தத் துறைமுகத் திட்டம் வராமல் இருந்தால் வடநாடு தென்னாடு என்று பேசுவதற்கு இடம் ஏற்படலாம் என்று நினைக்கிறார்களோ என்னமோ. இதெல்லாம் வரவில்லை அதனால் தென்னாடு பிரிய வேண்டும் என்று சொல்லலாம் என்ற எண்ணத்தில் அப்படி வராமல் இருக்க வேண்டும் என்று அவர்கள் நினைக்கிறார்களோ என்னமோ. அதன் காரணம் அவர்களை அறியாமல் சப் கான்ஷியஸ்ஸாக உட்கார்ந்து யோசித்துப் பார்த்தால் நன்றாகத் தெரிய வரும். இதுதான் இன்றைக்கு இருக்கக்கூடிய முக்கியமான குறை என்பதைத் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு—அவர்களும் நம்முடைய நாட்டினுடைய

[Sri C. Subramaniam] [11th August 1960

முன்னேற்றத்திற்குப் பாடுபட வேண்டியவர்களாக இருக்கின்ற காரணத்தினுல்—என் மனதில் இருப்பதைச் சொல்கிறேன். அது தவருக இருந்தால் நான் மகிழ்ச்சி அடைவேன்.

SRI C. N. ANNADURAI : எங்களுடைய வார்த்தைகளேயோ, நோக்கத்தையோ பற்றி இங்கே எடுத்துச் சொல்வதில் தவறு இல்லே. "நாங்கள் ஏதோ எல்லாவற்றையும் அரசியல் காரணத் திற்காகச் சொல்வதாக மட்டும் எண்ணிக்கொண்டு" அவற்றில் அக்கறையற்ற முறையில் கவனிக்க வேண்டாம் என்று தெரி வித்துக் கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : திராவிட முன்னேற்றக் கழகத்தினருடைய பாராட்டுதல்களைப் பெறுவதற்காக அவர்கள் என்ன எழுதுகிருர்கள், என்ன பேசுகிருர்கள் என்று அதைப் பார்த்து நாங்கள் முடிவுக்கு வருவதில்லே. அல்லது அரசியல் காரணத்திற்காக அப்படி எழுதிப் பேசி வருகிருர்கள் என்று அக்கறை காட்டாமலும் விடுவதில்லே. நாங்கள் எடுத்திருக்கிற முடிவு தமிழ் நாட்டு மக்களுக்கு எதையெல்லாம் நிறைவேற்ற வேண்டும், எந்த மாதிரி செய்தால் எல்லோரும் நன்மை அடை வார்கள் என்கிற அடிப்படையில்தான் இருக்கிறது. நீங்கள் நினைப்பதனுலேயே, நீங்கள் எழுதுவதனுலேயே நாங்கள் எங்கள் கடமைகளைப் புறக்கணிப்பதாகவோ, நிறைவேற்றுவதாகவோ நீங்களும் எண்ணவேண்டாம். நீங்கள் எப்படி நினேத் தாலும் மற்றவர்களும் இது மாதிரியாக நினேக்க வேண்டியிருக்கிறது. ஏனென்ருல் திரு. அண்ணுதுரை சொல்வது மட்டும் அல்ல. மற்ற திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர் களும் அதே மாதிரி நினைத்து, பேசி, எழுதி வருவார்களேயானுல் அது வரவேற்கத் தக்கது என்று எண்ணுவேன். நாம் ஏதாவது ஒரு கொள்கை அடிப்படையில் இயங்கும்போது எல்லாமே இந்தக் கொள்கைக்குப் பாதகமாக வருவதாக நம்மை அறியாம லேயே நினைத்துவிடக்கூடிய நிலேமை ஏற்படுகிறது. தமிழ் நாட்டுக்கு இது இல்லாதது, அது இல்லாதது பெரிய தீங்கு என்று பேசும்போது 'இது தான் இருக்கிறதே' என்ருல் "வந்து விட்டதா ?" என்று கேட்கிற நிலேமை உண்டாகி விடுகிறது. ஏதோ ஒரு கொள்கையிலேயே நிற்கிற காரணத்திஞல் இப்படி . .

SRI K. ANBAZHAGAN : கனம் அமைச்சர் அவர்கள் மிக விரி வாக விளக்கிப் பேசுகையில் திராவிட முன்னேற்றக் கழகத்து அங்கத்தினர்கள் பேசின கருத்துக்களுக்கு ஒரு மோடிவ்—உள் நோகக்ம்—கற்பித்துப் பேசுகிருர்கள். அது போலவே அவர்கள் பேசுகின்ற பேச்சுக்களுக்கு ஒரு உள்நோக்கம் கற்பித்து எதிர்க் கட்சிக்காரர்கள் பேசுவது என்ருல் அப்போது சட்டமன்றத்தில் ஒழுங்கு இருக்குமா ? அப்படி அமைச்சர் அவர்கள் பேசலாமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : உள்நோக்கம் கற்பித்துச் சொல்லவில்லே. உங்கள் கொள்கை எங்கே கொண்டு போய்விடும் என்பதை உங்களுக்கு எடுத்துச் சொல்லி எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன். உங்கள் மனதையே ஆராய்ந்து பார்த்தால் . . . . .

11th August 1960]

**Sri C. N. ANNADURAI :** நாட்டுப் பிரிவினைக்கு நாங்கள் என்னனென்ன அடிப்படையில் பேசுகின்றோம் என்பதைப் புரிந்து கொண்டிருந்தார்களானால் இப்படிப் பேசமாட்டார்கள். வேண்டுமானால் தனித்து என்னிடம் ஒரு மணி நேரம் பேசினால் அவற்றை நான் அவருக்கு விளக்க முடியும். இதற்குக் காரணம் . . . .

**The Hon. Sri C. SUBRAMANIAM :** அவர்கள் இடத்தில் பாடம் கற்க வேண்டுமென்று தான் எனக்கு ஆசை. (ஸ்ரீ. சி. என் அண்ணாதுரை—பாடம் இல்லை. செய்தி.) எதுவாக இருந்தாலும் சரி, அவரிடம் கேட்கவேண்டும் என்று தான் ஆசை. அதற்கு நான் தயார். ஆனால் இதனால் விளையக்கூடிய பலன் என்ன என்பதுதான் சந்தேகம். அப்படிக் கேட்பதற்கும் நல்ல தகுந்த இடம் அசெம்பளி தான். இங்கே நான் கிட்டத் தட்ட 3 வருடங்களாக அவர்கள் சொல்வதை எல்லாம் கேட்டு வந்தும் கூட இதுவரைக்கும் ஒன்றும் புரிந்து கொள்ளவில்லை என்றால் இனிமேல் தனியாகக் கேட்பதனால் புரியும் என்று நினைக்கவில்லை.

**Sri C. N. ANNADURAI :** இந்த சட்ட மன்றத்தில் இதுவரைக்கும் நாட்டுப் பிரிவினையைப் பற்றி விவாதிக்கவில்லை. ஆகவே இந்த சட்டசபை விதி அனுமதிக்கும் என்றால் அதற்கென்று ஒரு நாள் ஒதுக்கினால் அதுபற்றி எழும் விவாதத்தில் நான் விளக்கத் தயாராக இருக்கிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இதுவரைக்கும் அவர்கள் இங்கே பணியாற்றி வருவது கொள்கை விளக்க அடிப்படையில் தான் என்று நான் எண்ணினேன். அதன் காரணமாகவே அவர்கள் என்ன பேசினாலும், எழுதினாலும் அவற்றை ஊன்றிக் கவனித்தும் வந்திருக்கிறேன். ஆனால் எனக்கு ஒன்றும் புரியவில்லை. புரிந்துகொள்ள வேண்டுமென்று முயன்றிருக்கிறேன். (ஒரு குரல் :—குழம்பியிருக்கலாம்.) ஒத்துக்கொள்கிறேன். எனக்குக் குழம்பி இருக்கலாம். எனக்கே இப்படி என்றால் மற்றவர்கள் எல்லாம் எவ்வளவு குழம்பியிருக்கிறார்களோ தெரியவில்லை. இன்னும் தனியாகச் சென்று தெரிந்துகொள்ள வேண்டுமானாலும் தெரிந்துகொள்ளத் தயாராய் இருக்கிறேன்.

ஆனால் இருக்கக்கூடிய அடிப்படையான நிலைமையை விளக்கிச் சொன்னேன். ஆகையால் அணு உலையாக இருந்தாலும், மின்சாரம் வருவதாக இருந்தாலும் தொழில் முறையில் எந்த அளவுக்குக் கொண்டுவருவதற்கு எங்களாலான முயற்சியைச் செய்வோம் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

இதற்கு அடுத்தபடியான சில விஷயங்களைப் பற்றி திரு. வி. கே. ராமசாமி முதலியார் அவர்கள் பேசும்போது தெரிவித்தார்கள், நிர்வாக முறையில் பல கோளாறு இருப்பதைப்பற்றி. அதுவும் முக்கியமாக குறிப்பாக ஒரு பள்ளிக்கூடம் நடத்துவதுபற்றி என்னிடம் முன்பே சொன்னார்கள். நானும் அவர்களுக்கு விளக்கி எழுதி இருந்தேன். அப்படி இருந்தும்கூட தனியாக இங்கே ஒரு குறையாக எடுத்துச் சொல்லவேண்டுமென்று அவர் நினைத்தது அவருக்கு இவ்விஷயத்தில் எவ்வளவு அக்கறை இருக்

[Sri C. Subramaniam] [11th August 1960

இறது என்பதைத்தான் காட்டுகிறது என்று நினைக்கிறேன். இதில் இருக்கக்கூடிய கஷ்டம் என்னவென்று பார்க்கவேண்டும். இன்றையதினம் ஆரம்பப் பள்ளிக்கூடம் இல்லாத ஊரே இல்லை. அதுபோல உயர்நிலைப் பள்ளி ஏற்படவேண்டும் என்று சொன்னால் அது சரியாகாது. இப்படி ஆசைப்படுவது வரவேற்கத் தக்கது தான். ஆனால் இது சாத்தியமா என்று யோசிக்கவேண்டும். ஒரு பள்ளிக்கூடம் என்றால் அது இருக்கும் இடம், அந்தப் பிரதேசத்தில் வாழும் மக்களின் எண்ணிக்கை, குழந்தைகளின் எண்ணிக்கை எல்லாவற்றையும் பார்த்து இன்னொரு பள்ளிக்கூடம் அதற்கு அருகாமையில் எவ்வளவு தூரத்தில் ஏற்படுத்தலாம் என்று பார்க்கவேண்டும். ஏனென்றால் இருக்கக்கூடிய பிள்ளைகளைத்தான் நாம் பகிர்ந்து கொள்ளவேண்டியிருக்கிறது. ஆகவே ஒரு பள்ளிக்கூடத்திற்கு அருகாமையிலேயே இன்னொரு பள்ளிக்கூடம் திறந்தால் இதற்குப் போதுமான மாணவர்கள் வருவார்களா, அல்லது இந்தப் பள்ளிக்கூடம் திறப்பதானது இன்னொரு பள்ளிக்கூடத்தை மூடும்படியாகச் செய்துவிடுமா என்பதைப் பரிசீலனை செய்யாமல் திறக்க முடியாது. ஒரு பக்கம் திறப்பு விழா, இன்னொரு பக்கம் மூடு விழா என்று செய்வது சரியாகாது. ஆகவே இதைப் பரிசிலனை செய்துதான் புதுப் பள்ளிக்கூடம் திறப்பதற்கு அனுமதி அளித்து வருகிறோம். ஆகையால் அவர்கள் குறிப்பிட்ட இடத்திற்குப் பள்ளிக்கூடம் வரவில்லை என்று சொன்னால் அதை அவர்கள் தவறாக எடுத்துக் கொள்ளக்கூடாது. அந்த இடத்திற்கு அருகிலேயே உள்ள கிராமத்தில் ஏற்கனவே பள்ளிக்கூடம் வந்து விட்டது. ஆகவே இந்த இடத்திலும் வைக்க முடியாது என்று தெரிவித்துக்கொள்கிறேன். வைத்தால் இரண்டு பள்ளிக்கூடங்களும் நன்றாக நடக்க முடியாது.

இன்னொன்று சொன்னார்கள். ஆசிரியர்கள் எல்லாரும் இன்றைக்கு வெவ்வேறு வேலைகளுக்குப் போய்விடுவார்கள், மத்தியான உணவுத் திட்டம் முதலியவற்றுக்கு வசூல் செய்ய வேண்டியிருக்கிறது என்று சொன்னார்கள். மத்திய உணவுத் திட்டத்திற்கு வசூல் பண்ணுவதற்காக அல்லது பள்ளிச் சீரமைப்புத் திட்டத்திற்குப் பொருள்கள் சேகரிக்கப் போய்விடுவதனால் படிப்பின் தரமும் குறைந்து வருகிறது என்று அவர்கள் தெரிவித்தார்கள். நான் ஒன்று தெரிவித்துக்கொள்கிறேன். இப்போதுதான் குறைந்த நேரம் அவர்கள் சொல்லிக்கொடுத்தாலும் பள்ளிக்கூடம் நன்றாக நடக்கிறது, ஆசிரியர்களும் சிரத்தையோடு சொல்லிக் கொடுக்கிறார்கள். காரணம் இப்போது அவர்களுடைய சொந்த முயற்சியினாலேயே பல காரியங்கள் பள்ளிக்கூடங்களில் நடப்பதினால் அவர்களுக்கே ஒரு சிரத்தை ஏற்பட்டிருக்கிறது என்று சொல்ல விரும்புகிறேன். முன்பாவது "யாரோ எல்லா ஏற்பாடுகளையும் செய்கிறார்கள், நாம் என்ன?" என்று கொஞ்சம் அசிரத்தையாகப் போய்விடுவார்கள். ஆனால் இப்போது அப்படி இல்லையென்பதைப் பார்க்கிறோம்.

அதன்மூலம் இன்று நல்லதொரு சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது என்பது நான் பார்த்தமட்டில் மட்டுமல்ல, பல பெரியவர்கள் இங்கு வந்து பார்த்துவிட்டு மத்திய உணவுத் திட்டம், பள்ளிச்

சீரமைப்புத் திட்டம் இவைகள் மூலம் நல்லதொரு சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது என்பதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஆக, நல்ல காரியம் நன்கு நடந்து கொண்டிருக்கும்போது அதை வீணாகக் குறைகூறி அதில் ஒரு குழப்பத்தை ஏற்படுத்தாமல் இருக்கவேண்டும். அவர்களுக்கு தெரியாததல்ல ; சிலவிடங்களில் அவர்களும் கலந்து கொண்டிருக்கிறார்கள், என்று நம்புகிறேன். இதனால் நமது கல்வி வளர்ச்சி அதிகமாகிக் கொண்டிருக்கிறதே தவிர எந்த விதத்திலும் தரம் குறைந்து விடவில்லை.

SRI K. ANBAZHAGAN : அமைச்சர் அவர்கள், மதிய உணவுத் திட்டம், பள்ளிச் சீரமைப்புத் திட்டம், இவைகளில் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று தெரிவிக்கிறார்கள் முன்னரும் தெரிவித்திருக்கிறார்கள். இது குறித்த நிலைமையைக் கண்டு ஆராய இச்சட்டமன்றத்தின் சார்பில் ஒரு குழு அமைத்து இருக்கிறார்கள். சந்தேகம் இராவிடில் அப்படி ஏன் அமைத்தார்கள், அவர்கள் என்ன செய்கிறார்கள், அவர்கள் கண்ட முடிவு என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதனால் ஆசிரியர்கள் சரியாக பாடம் சொல்லிக் கொடுக்கவில்லை என்று அவர்கள் கருத்து தெரிவித்தார்கள். இந்தக் குழுவை அந்த இன்ஸ்பெக்ஷன் வேலைக்காக போடவில்லை. மத்திய உணவு அளிக்கும் திட்டம் 20,000 இடங்களில் நடந்து வருகிறது. இந்த 20,000 இடங்களிலும் சரியாக நடந்து வருகிறதா, சரியாகப் போடுகிறார்களா, நிலை எப்படி, இத்திட்டம் நடைபெறுவதில் என்ன குறைகள் இருக்கின்றன, அவைகளை எப்படி நீக்குவது என்பதற்காக இந்தக் கமிட்டி போடப்பட்டிருக்கிறது. கூடிய சீக்கிரத்தில் அந்த அறிக்கை நமக்குச் சமர்ப்பிக்கப்படுமென்று நினைக்கிறேன். ஆக, கமிட்டி நியமித்திருப்பது, உபாத்தியாயர்களைக் கண்காணிப்பதற்கல்ல. திட்டத்தில் என்ன குறையிருக்கிறது, அதை எப்படித் தவிர்ப்பது என்பதை ஆலோசனை செய்து அந்த அறிக்கை வந்தவுடன் அது இங்கு சமர்ப்பிக்கப்படும். அதில் ஏதாவது இருந்தால் அது பரிசீலனை செய்யப்படும். இன்னும் பல விஷயங்களைப்பற்றிப் பேசியிருக்கிறார்கள். அவை எல்லாவற்றிற்கும் பதில் சொல்லவில்லை என்றால், அவை முக்கியமான விஷயங்கள் அல்ல என்று நான் கருதுவதால் அல்ல. இதற்கு மேல் பேசுவதற்கு, எனக்கு சக்தியில்லை என்று வைத்துக்கொண்டாலும் சரி, முடிப்பதறகு முன்பு ஒரு கருத்தை மட்டும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். காரசாரமாகப் பேசுவதுபற்றி ஆட்சேபணையில்லை. ஆனால் தகுதிக்குறைவாகப் பேசுவதை விட்டுவிடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். காரசாரமாகப் பேசினால்தான் ருசியிருக்கும். சப்பையாக பேசுவதில் ருசியில்லை. ஆனால் காரசாரமாக பேசும்போது தரக்குறைவாக பேசவேண்டுமென்ற நிலை வரவேண்டியதில்லை. இந்தக் கூட்டத்திலே தவறுகள் நடந்துவிட்டன என்பதை சபாநாயகர் அவர்களே ஒப்புக்கொள்வார்கள். அப்படி அவைகள் நடக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டியது நம் எல்லோருடையவும் பொறுப்பு என்று தெரிவித்துக்கொள்

[Sri C. Subramaniam] [11th August 1960

கிறேன். சில சமயங்களில் வெளியில் நடப்பது இங்கு பிரதிபலிக்கிறது. ஆகவே, வெளியிலே பேசுகிறவர்களும், எழுதுகிறவர்களும் தமிழ் நாட்டின் பண்புக்கு உகந்த வகையில் பேசுகிறோமா, எழுதுகிறோமா என்று மனதில் கொண்டு எழுத, பேச வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இதை, ஒரு கட்சியைப் பார்த்துச் சொல்வதாக எடுத்துக் கொள்ளக்கூடாது. இந்தக் குறை எல்லாக் கட்சிகளிலும் இருக்கிறது என்று ஓரளவு காண்கிறேன். ஒருவருக்கு ஒருவர் போட்டி போடுகிற மாதிரி இருக்கிறது. தகுதிக்குறைவு விஷயத்தில் போட்டி வேண்டாம். தகுதி உயர்வு விஷயத்தில் போட்டியிடுவோம். ஒருவரை ஒருவர் புகழ்வதில் போட்டி போடுவோம், போற்றுவதில் போட்டியிடுவோம் நாம் இங்கு கூடிச் செயல்படுவதும், வெளியில் இயங்குவதும் மக்களின் நன்மைக்காக மக்களின் உயர்வுக்காக என்பதை மனதில் வைத்துக்கொண்டு இருப்பதால்தான், கவர்னர் அவர்கள் சொல்லியிருப்பதுபோல், வெறுப்பு விருப்பு இன்றி, பகைமை உணர்ச்சி போன்றவைகளுக்கு இடம் கொடுக்காமல் அன்பு உணர்ச்சியோடு, நட்பு உணர்ச்சியோடு வெளியிலும், இங்கும் இயங்க வேண்டுமென்று கூறிக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

SRI S. NAGARAJA MONIGAR : எமது கட்சித் தலைவர் அவர்கள் பேசும்போது, இந்த சபையில் எந்தப் பக்கத்தில் இருப்பவர்களும் தகுதிக் குறைவாக பேசக்கூடாது, தரத்தைக் காப்பாற்ற வேண்டுமென்று சொன்னார்கள். அதற்குத் தலைவணங்குகிறேன். குறிப்பிட்டு யாரையும் சொல்லவில்லை என்று சொன்னார்கள். ஆனால் என்னைப் பொறுத்த வரையில் நேற்று நான் சற்று நேரம் பொறுத்து வந்தேன். நான் பேசியது சில அச்சிற்கு வராமல் தடுக்கப்பட்டிருக்கிறது. நான் இங்கு சொல்லிக் கொள்ள விரும்புவது, நான் இங்கு பேசியது யாரையும் புண்படுத்த வேண்டுமென்ற கருத்தோடு பேசவில்லை. நான் பேசும்போது உதவி சபாநாயகர் அவர்கள் இருந்தார்கள். அதை அனுமதித்தார்கள். யாரும் ஒன்றும் சொல்லவில்லை. மனதார யாரையும் புண்படுத்தவேண்டுமென்று நான் பேசவில்லை. நான் நல்லபடியாகத்தான் பேசினேன், யாரையும் புண்படுத்த வேண்டுமென்று பேசவில்லை என்று இந்த சந்தர்ப்பத்தில், இங்கு சொல்ல விரும்புகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : On a point of order, Sir, the hon. Member's speech amounts to the criticism of the speaker's ruling. Since it is the Hon. Speaker, who ordered the expunction, I do not know for what reason the hon. Member is making a speech.

MR. SPEAKER : Ultimately he wants to apologise to the House கனம் அங்கத்தினர் ஸ்ரீ வி. கே. ராமஸ்வாமி முதலியார் கொடுத்திருக்கும் திருத்தத்தை எல்லா எதிர்க்கட்சிகளும் சபையின் முடிவுக்கு விடலாம் என்று ஒப்புக்கொண்டதால் பாக்கி எல்லா அங்கத்தினர்களுடைய திருத்தங்களையும் வாபஸ் வாங்க சபை அனுமதி கொடுக்கிறது என்று நினைக்கிறேன்.

11th August 1960]

MR. SPEAKER : I shall now put the amendment of Sri V. K. Ramaswamy Mudaliyar to vote.

The question is—

" Add at the end the following :—

' but regret to note that there is no enunciation of a clear cut policy for preventing the rise in the prices of consumer goods.' "

The amendment was put and lost.

The other amendments were, by leave, withdrawn.

MR. SPEAKER : I shall now put the main motion of Sri S. Lazar to vote. The question is—

" That an humble address be presented to the Governor that the Members of the Madras Legislative Assembly thank him for the Address delivered to the Members of the Legislature on the 5th August 1960."

The motion was put and carried.

MR. SPEAKER : I now adjourn the House to meet again at 8-30 a.m. to-morrow. 12-58 p.m.

The House then adjourned.



## Appendix

[Vide answer to starred question No. 98 asked by Sri S. M. Annamalai at the meeting of the Legislative Assembly held on 11th August 1960, page 376 supra]

*A.*—(*a*) The following are the reasons for the annual auction of bamboo coupes in the Reserve Forests, which were used to be auctioned once in three years previously :—

(i) As a result of working on a lease period of three years, it was found that the sale amounts fetched were not only, not advantageous to the Government, but were less than what the concerned coupes fetched previously, when they were sold on one year lease ;

(ii) by adopting a three-year lease period, the contractor is given the monopoly for working the coupe for three years irrespective of the market conditions in the subsequent two years of the lease period. Further, such a course shuts out small capitalists from participating in the auction sales and thereby limits the scope for competition ; and

(iii) silviculturally, it is also desirable to work the bamboo bearing areas once in three years.

(*b*) No, Sir.

# INDEX TO MADRAS LEGISLATIVE ASSEMBLY DEBATES

---

NINTH SESSION OF THE SECOND LEGISLATIVE ASSEMBLY UNDER THE CONSTITUTION OF INDIA.

---

**Volume XXXIII (Nos. 1 to 4).**

*8th to 11th August* 1960.

PAGES

A—*cont.*



B

PAGES

B—*cont.*

PAGES

## E



## F



## G

PAGES

G—cont.

PAGES

I—*cont.*



J



K

PAGES

**K—*cont.***

PAGES

L—*cont.*



M

PAGES

M—*cont.*



N

PAGES

N—*cont.*

PAGES

**P—*cont.***

PAGES

**P—*cont.***

PAGES

P—*cont.*

PAGES

P—*cont.*

PAGES

Q—*cont.*

PAGES

Q—*cont.*

PAGES

Q—*cont.*

PAGES

Q—*cont.*

PAGES

Q—*cont.*



R

PAGES

S

PAGES

S—*cont.*

PAGES

S—*cont.*



T

PAGES

T—*cont.*



U



V


தமிழ்நாடு சட்டமன்றப் பேரவை
TAMIL NADU LEGISLATIVE ASSEMBLY
வாய்மையே வெல்லும்
TRUTH ALONE TRIUMPHS

# Tamil Nadu Co-operative Union, Limited, Madras-1.

## T. N. C. U. EXAMINATION RESULTS—JUNE 1959

The following is the list of candidates with their Register Numbers who have come out successful at the Co-operative Training Institutes' Examination, held in the month of June 1959 at Coimbatore, Tanjore and Madurai Centres.

**(+Denotes Supplementary candidates, who passing the part or parts, have completed the Examination)**

## FIRST CLASS

### Coimbatore Centre.

| S. No. | Name of the Candidate | Regd. No. |
|---|---|---|
| 1 | Arumugam, C. | 8501 |
| 2 | Chakrapani, R. | 8523 |
| 3 | Dravidamani, S. | 8543 |
| 4 | Duraisamy, D. | 8545 |
| 5 | Jayaraman, T. P. | 8580 |
| 6 | Krishnan, B. | 8598 |
| 7 | Krishnan, K. (Nilgiris) | 8599 |
| 8 | Muthuswamy, C. | 8645 |
| 9 | Paramasivam, R. | 8694 |
| 10 | Periaswamy, P. | 8696 |
| 11 | Perumal, C. | 8699 |
| 12 | Ponnurangam, S. | 8702 |
| 13 | Ponnusamy, V. | 8705 |
| 14 | Radhakrishnan, P. R. | 8708 |
| 15 | Rajagopalan, R. | 8712 |
| 16 | Ramachandran, S. | 8721 |
| 17 | Raman, J. | 8731 |
| 18 | Rathinamoorthy, K. | 8759 |
| 19 | Sheik Mohamed, S. | 8770 |
| 20 | Swaminathan, A. | 8808 |
| 21 | Thangavelu, R. | 8816 |
| 22 | Thavamani, T. R. A. | 8819 |
| 23 | Ulaganathan, A. | 8825 |
| 24 | Venkataraman, V. | 8838 |
| 25 | Venugopal, K. S. M. | 8842 |

### Tanjore Centre.

| S. No. | Name of the Candidate | Regd. No. |
|---|---|---|
| 26 | Ambikapathy, V. | 8849 |
| 27 | Amirthamani, V. | 8851 |
| 28 | Devaraj, C. | 8872 |
| 29 | Irudaya Raj, I. | 8894 |
| 30 | Kaliamoorthy, N. | 8901 |
| 31 | Meganathan, V. | 8929 |
| 32 | Muniyandi, S. | 8930 |
| 33 | Muthambalam, A. | 8931 |
| 34 | Nagarajan, S. (Kodavasal) | 8936 |
| 35 | Natarajan, D. (Tirupapuliyur) | 8940 |
| 36 | Sundararajalu, T. M. | 9024 |
| 37 | Velu, K. | 9051 |
| 38 | Venugopal, A. | 9052 |

### Madurai Centre.

| S. No. | Name of the Candidate | Regd. No. |
|---|---|---|
| 39 | Avudainayagam, T. | 9072 |
| 40 | Avudainayagam, V. | 9073 |
| 41 | Pitchai Kani, G. | 9176 |
| 42 | Poundass, R. | 9183 |
| 43 | Raman, V. | 9203 |
| 44 | Sivalingam, V. | 9235 |
| 45 | Subbiah Mudaliar, V. | 9242 |
| 46 | Subburaj, S. | 9243 |
| 47 | Subramoniam, C. | 9251 |
| 48 | Veiyeenramuthu, S. | 9275 |

## SECOND CLASS

### Coimbatore Centre.

| S. No. | Name of the Candidate | Regd. No. |
|---|---|---|
| 1 | Abdul Khader, G. | 8492 |
| 2 | Abdul Kaleel, S. | 8493 |
| 3 | Abdul Lateef, V. N. | 8494 |
| 4 | Ambikapathi, D. J. | 8496 |
| 5 | Annamalai, P. N. | 8497 |
| 6 | Annamalai, R. K. | 8498 |
| 7 | Arthanari, K. | 8499 |
| 8 | Arthanari, P. | 8500 |
| 9 | Arumugam, K. | 8502 |
| 10 | Arumugam, E. K. | 8503 |
| 11 | Arumugam, P. | 8504 |
| 12 | Arumugham, S. | 8505 |
| 13 | Arumugam, V. (North Arcot) | 8506 |
| 14 | Arumugam, V. (Salem) | 8507 |
| 15 | Arunachalam, K. | 8508 |
| 16 | Arunachalam, S. | 8509 |
| 17 | Bakthavathsalam, S. | 8510 |
| 18 | Balakrishnan, T. T. | 8511 |
| 19 | Balasubramanian, K. G. | 8512 |
| 20 | Balasundaram, M. | 8513 |
| 21 | Basheer Ahamed, K. S. | 8514 |
| 22 | Baskaran, K. | 8515 |
| 23 | Bellan, S. M. | 8518 |
| 24 | Bellie, B. K. | 8519 |
| 25 | Bhojan, K. M. | 8520 |
| 26 | Bhojan, T. M. | 8521 |
| 27 | Bojan, K. R. | 8522 |
| 28 | Chandrahasan, A. | 8524 |
| 29 | Chandrasekaran, S. | 8525 |
| 30 | Chandrasekaran, T. S. | 8526 |
| 31 | Chenniappan, K. | 8527 |
| 32 | Daivasahayam, A. | 8529 |
| 33 | Dakshinamoorthy, N. | 8530 |
| 34 | Dhakshinamurthy, T. A. | 8531 |
| 35 | Domodaran, P. | 8532 |
| 36 | Dass, V. | 8533 |
| 37 | Devarajan, A. | 8534 |
| 38 | Dhanapal, N. | 8535 |
| 39 | Dharmarajan, G. P. | 8536 |
| 40 | Dhandapani, S. | 8537 |
| 41 | Doraisamy, K. M. | 8538 |
| 42 | Doraiswamy, K. | 8539 |
| 43 | Doraiswamy, K. K. | 8540 |
| 44 | Doraiswami, R. R. | 8541 |
| 45 | Doraiswamy, V. | 8542 |
| 46 | Duraisamy, A. | 8544 |
| 47 | Duraisamy, V. | 8546 |
| 48 | Duraiswamy, K. | 8547 |
| 49 | Fakir Mohammad, A.P.K. | 8549 |
| 50 | Gaiboo Sahib, T. M. | 8550 |
| 51 | Gaip Sahib, K. | 8551 |
| 52 | Ganapathisamy, A. | 8552 |
| 53 | Ganapathy, T. | 8553 |
| 54 | Gandhi, N. | 8554 |
| 55 | Gangadaran, T. P. | 8555 |
| 56 | Gopal, K. | 8556 |
| 57 | Gopal, N. | 8557 |
| 58 | Gopal, S. | 8558 |
| 59 | Gopal, S. K. | 8559 |
| 60 | Gopalan, K. M. | 8560 |
| 61 | Gopalan, M. | 8561 |
| 62 | Gopalan, S. | 8562 |
| 63 | Gopalaswamy, R. | 8564 |
| 64 | Govindachari, R. | 8565 |
| 65 | Govindan, J. | 8566 |
| 66 | Govindan, R. | 8567 |
| 67 | Govindapadayachi, M. | 8568 |
| 68 | Guruswamy, K. C. | 8569 |
| 69 | Guruswamy, V. | 8570 |
| 70 | Halan, H. B. | 8571 |
| 71 | Halan, M. B. | 8572 |
| 72 | Hallie, H. | 8573 |
| 73 | Halu, J. H. | 8574 |
| 74 | Jagan Nathan, M. | 8575 |
| 75 | Jayapalan, S. | 8576 |
| 76 | Jayaraman, A. | 8577 |
| 77 | Jayaraman, M. | 8578 |
| 78 | Jayaraman, P. S. | 8579 |
| 79 | Joghee, M. | 8581 |
| 80 | Kaliannan, T. | 8582 |
| 81 | Kaliappan, A. | 8583 |
| 82 | Kaliswamy, P. M. | 8584 |
| 83 | Kandasamy, R. | 8585 |
| 84 | Kandasami, S. | 8586 |
| 85 | Kandasamy, V. | 8587 |
| 86 | Kandaswamy, G. K. | 8588 |
| 87 | Kandaswamy, S. | 8589 |
| 88 | Karuppa Gounden, K. P. | 8591 |
| 89 | Karuppannan, K. R. | 8592 |
| 90 | Karuppa Pillai, A. | 8593 |
| 91 | Karuppuduayan, V. | 8594 |
| 92 | Koilpitchai, D. | 8595 |
| 93 | Komarasamy, K. | 8596 |
| 94 | Kongan, B. T. | 8597 |
| 95 | Krishnan. K. (North Arcot) | 8600 |
| 96 | Krishnan, K. S. | 8601 |

## Coimbatore Centre—(*Contd.*)

| S. No. | Name of the Candidate | Regd. No. |
|---|---|---|
| 97 | Krishnan, M. | 8602 |
| 98 | Krishnan, N. B. | 8603 |
| 99 | Krishnan, S. R. | 8604 |
| 100 | Kulandamuthu, K. | 8606 |
| 101 | Kumaraswamy, R. | 8607 |
| 102 | Kumaraswamy, V. R. | 8608 |
| 103 | Kuppusamy, M. | 8609 |
| 104 | Kuppusamy, V. | 8610 |
| 105 | Kuppuswamy, P. | 8611 |
| 106 | Kuppuswamy, R. | 8612 |
| 107 | Kuttiya Goundan, S. | 8614 |
| 108 | Lakshmaiyan, R. P. | 8615 |
| 109 | Lakshmanan, K. B. | 8616 |
| 110 | Lakshmanan, N. | 8617 |
| 111 | Lakshmanan, P. | 8618 |
| 112 | Loganathan, R. | 8620 |
| 113 | Malla Gounden, M. | 8621 |
| 114 | Mallichetty, N. V. | 8622 |
| 115 | Mani, T. S. | 8623 |
| 116 | Mariappan, R. | 8624 |
| 117 | Marimuthu, A. | 8625 |
| 118 | Marimuthu, T. S. | 8626 |
| 119 | Marimuthu, V. | 8627 |
| 120 | Mathan, M. K. | 8628 |
| 121 | Mohamed Usman, R. P. | 8629 |
| 122 | Munian, M. | 8630 |
| 123 | Munirathanam, C. N. | 8631 |
| 124 | Munirathinam, M. | 8632 |
| 125 | Munisamy, C. | 8633 |
| 126 | Murugesan, A. | 8634 |
| 127 | Murugesan, A. J. | 8635 |
| 128 | Murugesan, M. | 8636 |
| 129 | Murugesan, V. K. | 8637 |
| 130 | Muthappa, G. N. | 8638 |
| 131 | Muthukrishnan, R. | 8640 |
| 132 | Muthukumarasamy, N. | 8641 |
| 133 | Muthusamy, A. | 8642 |
| 134 | Muthusamy. T. K. | 8644 |
| 135 | Muthusamy, K. (Salem) | 8646 |
| 136 | Nachimuthu, D. | 8648 |
| 137 | Nagarajan, G. | 8649 |
| 138 | Nagarajan, K. S. | 8650 |
| 139 | Nagarajan, R. | 8651 |
| 140 | Nainappan, K. | 8652 |
| 141 | Nalla Gounden, M. | 8653 |
| 142 | Nallamuthu, P. A. | 8654 |
| 143 | Nalla Perumal, P. | 8655 |
| 144 | Nallusamy, P. | 8656 |
| 145 | Nanjan, T. | 8657 |
| 146 | Narasingan, M. A. | 8659 |
| 147 | Narayanan, R. | 8660 |
| 148 | Narayanasami, S. K. | 8661 |
| 149 | Narayanaswami, M. G. | 8662 |
| 150 | Narayanaswamy, O. P. | 8663 |
| 151 | Narothamdas, J. | 8664 |
| 152 | Nadarajan, C. P. | 8665 |
| 153 | Natarajan, D. (Salem) | 8666 |
| 154 | Natarajan, D. (North Arcot) | 8667 |
| 155 | Natarajan, K. | 8669 |
| 156 | Natarajan, N. | 8670 |
| 157 | Natesan, K. | 8671 |
| 158 | Natesan, K. K. | 8672 |
| 159 | Natesan, N. (Salem) | 8673 |
| 160 | Natesan, N. (Coimbatore) | 8674 |
| 161 | Natesan, P. | 8675 |
| 162 | Natesan, R. | 8676 |
| 163 | Natesan, V. | 8677 |
| 164 | Nityanandam, G. | 8679 |
| 165 | Padmanabhan, B. | 8680 |
| 166 | Palaniappan, K. (Salem) | 8682 |
| 167 | Palanisamy, R. | 8683 |
| 168 | Palaniswamy, D. | 8684 |
| 169 | Palaniswamy, K. N. | 8685 |
| 170 | Palaniswamy, S. M. | 8688 |
| 171 | Palaniswamy. S. R. | 8689 |
| 172 | Palaniswami, V. | 8690 |
| 173 | Palaniyandi, S. | 8691 |
| 174 | Palaniyandy, S. K. | 8692 |
| 175 | Perianayagam, M. | 8695 |
| 176 | Periaswamy, M. | 8697 |
| 177 | Perumal, A. | 8698 |
| 178 | Perumal, T. V. | 8700 |
| 179 | Perumal, V. | 8701 |
| 180 | Ponnusamy, P. | 8703 |
| 181 | Ponnuswamy, P. V. | 8704 |
| 182 | Ponnuswamy, S. | 8706 |
| 183 | Ponnuswamy, T. T. | 8707 |
| 184 | Ragavan, R. | 8709 |
| 185 | Rajagopal, S. | 8710 |
| 186 | Rajagopalan, G. | 8711 |
| 187 | Rajamani, P. V. | 8713 |
| 188 | Rajappan, V. | 8716 |
| 189 | Raju, K. | 8718 |
| 190 | Ramachandran, P. | 8720 |
| 191 | Ramadass, R. | 8722 |
| 192 | Ramakrishnan, V. (Salem) | 8725 |
| 193 | Ramalingam, K. | 8726 |
| 194 | Ramamoorthy, E. V. | 8727 |
| 195 | Ramamoorthy, P. | 8728 |

## Coimbatore Centre—(*Contd.*)

| S. No. | Name of the Candidate | Regd. No. |
|---|---|---|
| 196 | Raman, K. B. | 8732 |
| 197 | Raman, M. | 8733 |
| 198 | Raman, M. N. (Meeckary) | 8734 |
| 199 | Raman, M. N. (Manthanai) | 8735 |
| 200 | Ramanathan, B. | 8736 |
| 201 | Ramanathan, S. | 8737 |
| 202 | Ramasamy, A. | 8739 |
| 203 | Ramasamy, R. (Salem) | 8740 |
| 204 | Ramaswamy K. P. | 8741 |
| 205 | Ramaswamy K. S. | 8742 |
| 206 | Ramaswamy, M. | 8743 |
| 207 | Ramaswamy, M. V. | 8744 |
| 208 | Ramaswamy, P. | 8746 |
| 209 | Ramaswamy, R. (Coimbatore) | 8747 |
| 210 | Ramaswamy, S. | 8748 |
| 211 | Ramaswamy, V. | 8749 |
| 212 | Rangan, K. | 8750 |
| 213 | Ranganathan, A. K. | 8751 |
| 214 | Ranganathan, P. | 8752 |
| 215 | Ranganathan, R. (Coimbatore) | 8753 |
| 216 | Rangarajan, R. (Salem) | 8754 |
| 217 | Rangasamy, R. | 8755 |
| 218 | Rangaswamy, S. | 8756 |
| 219 | Rangaswamy, V. S. | 8757 |
| 220 | Rathinam, G. | 8758 |
| 221 | Rayappan, P. | 8761 |
| 222 | Sadasivam, T. P. | 8762 |
| 223 | Samaraj Chetty, N. S. | 8763 |
| 224 | Samarajulu, B. | 8764 |
| 225 | Sambandamoorthy, T. A. | 8765 |
| 226 | Sampath, D. V. | 8766 |
| 227 | Sampath, V. N. | 8767 |
| 228 | Santhanam, R. | 8768 |
| 229 | Selvarathnam, T. | 8769 |
| 230 | Shanmugabakthan, A. | 8771 |
| 231 | Shanmugam, S. | 8774 |
| 232 | Sivagurunathan, K. | 8775 |
| 233 | Sivakolundu, M. S. | 8776 |
| 234 | Sivaprakasam, B. | 8778 |
| 235 | Srinivasan, A. | 8781 |
| 236 | Srinivasan, P. M. | 8783 |
| 237 | Srinivasan, T. | 8784 |
| 238 | Subbian, M. M. | 8785 |
| 239 | Subbaiyan, M. K. | 8786 |
| 240 | Subba Naidu, C. | 8787 |
| 241 | Subramani, R. | 8788 |
| 242 | Subramaniam, M. | 8789 |
| 243 | Subramaniam, N. | 8790 |
| 244 | Subramanian, M. | 8792 |
| 245 | Subramanian, M. K. | 8793 |
| 246 | Subramanian, N. (North Arcot) | 8794 |
| 247 | Subramanian, N. (Nilgiris) | 8795 |
| 248 | Subramanian, S. | 8797 |
| 249 | Subramanian, T. | 8798 |
| 250 | Sundaram, C. | 8799 |
| 251 | Sundaram, P. | 8800 |
| 252 | Sundaram, S. | 8801 |
| 253 | Sundararajan, K. | 8803 |
| 254 | Sundarasha Rao, K. C. | 8805 |
| 255 | Swamiappan, R. | 8806 |
| 256 | Swamikkannu, S. | 8807 |
| 257 | Swaminathan, S. | 8810 |
| 258 | Syed Abu Yoosuf Husainee | 8811 |
| 259 | Thangamuthu, K. | 8813 |
| 260 | Thangavelu, P. | 8815 |
| 261 | Thangavelu, V. | 8817 |
| 262 | Thathan, N. | 8818 |
| 263 | Thirunavukkarasu, T.S. | 8820 |
| 264 | Thiagarajan, M. | 8822 |
| 265 | Thiruvenkataswamy, R. | 8823 |
| 266 | Thyagarajan, P. | 8824 |
| 267 | Umath Singh, N. | 8826 |
| 268 | Vaithilingam, N. | 8827 |
| 269 | Vajjiravelu, S. | 8828 |
| 270 | Varadappan, K. | 8829 |
| 271 | Veerannachetty, V. | 8831 |
| 272 | Venkatachalam, K. | 8832 |
| 273 | Venkatachalam, S. | 8833 |
| 274 | Venkatachalam, T. | 8834 |
| 275 | Venkatappan, P. | 8836 |
| 276 | Venkataraman, D. V. | 8837 |
| 277 | Venkatasubramanian, K. V. | 8839 |
| 278 | Venkataswamy, V. M. | 8840 |
| 279 | Venkatesan, G. | 8841 |
| 280 | Venugopal, V. V. | 8843 |
| 281 | Vinayaga Rao, K. C. | 8844 |
| 282 | Viswanathan, A. (Salem) | 8846 |
| 283 | Viswanathan, A. (North Arcot) | 8847 |

## Tanjore Centre.

| S. No. | Name of the Candidate | Regd. No. |
|---|---|---|
| 284 | Amir John, S. | 8550 |
| 285 | Annamalai, P. | 8852 |

